# ஹிந்தி இலக்கிய வரலாறு

(हिन्दी साहित्य का संक्षिप्त इतिहास)

(तमिल में)

**(A CONCISE HISTORY OF HINDI LITERATURE)**
**(IN TAMIL)**

கிருஷ்ணமூர்த்தி
விஷ்ணுப்ரியா
காமாக்ஷி

**ஹிந்தி ஹ்ருதய**
சென்னை– 600 041.

# ஹிந்தி இலக்கிய வரலாறு

## (हिन्दी साहित्य का संक्षिप्त इतिहास)
## (तमिल में)

## (A CONCISE HISTORY OF HINDI LITERATURE)
## (IN TAMIL)

கிருஷ்ணமூர்த்தி
விஷ்ணுப்ரியா
காமாக்ஷி



ஹிந்தி ஹ்ருதய
சென்னை - 600 041.

முதற்பதிப்பு : ஆகஸ்ட் 1963
இரண்டாவது பதிப்பு : ஆகஸ்ட் 2002

க்ருஷ்ணமூர்த்தி
விஷ்ணுப்ரியா
காமாக்ஷு

ஹிந்தி இலக்கிய வரலாறு

விலை ரூபாய் : **60/–**

*பிரசுரித்தவர்கள்*

ஹிந்தி ஹ்ருதய
1, சுப்ரமணியன் அவின்யு
வால்மீகி நகர்
திருவான்மியூர்,
சென்னை – 600 041.
தொலைபேசி : 4410022

# பொருளடக்கம்

## முதற் பாகம்



## இரண்டாம் பாகம்

The First Edition in
August 1963 was dedicated to
Dr. S. Radha Krishnan, the
Philosopher President of India

The Second Edition is being dedicated
to Dr. Abdul Kalam, the
Scientist President of India

- Hindi Hridaya

# மதிப்புரை

**பா**ரத நாடு சுதந்திர வாழ்வு பெறுவதற்கு முன்பே இந்த நாடு முழுவதும் பரவ வேண்டிய பொது மொழி ஒன்று வேண்டுமென்று எண்ணிய நாட்டுத் தலைவர்கள், ஹிந்தியே அந்த நிலைக்கு உரியது என்று தீர்மானித்தார்கள். மகாத்மா காந்தியடிகள் ஹிந்தியில் சில மாறுபாடுகளை ஆக்கி ஹிந்துஸ்தானி என்ற உறுவில் அது வளரவேண்டும் என்று வற்புறுத்தினார். தென்னாட்டில் ஹிந்திப் பிரசார சபை ஏற்பட்டு இங்கே ஹிந்தி பரவுவதற்குறிய பலவகைத் தொண்டுகளைச் செய்து வரலாயிற்று.

அரசியற் காரணங்களால் இப்போது ஹிந்தியின் ஆதரவாளர்களும், ஹிந்தியை விரும்பாதவர்களும், விரும்பியும் விரும்பாதவர்களுமாக மூன்று வகையினர் இருக்கின்றார்கள். எப்படியானாலும் மகாத்மா காந்தியடிகளின் விருப்பம் எப்போதேனும் ஒரு காலத்தில் நிறைவேறாமற் போகாது.

ஹிந்தியைப்பற்றிப் பல செய்திகளைக் கேள்விப் படுகிறோம். அது நேற்று வந்தது, இலக்கியவளம் உடையதன்று என்று சிலர் சொல்கிறார்கள். நவீன இலக்கியங்கள் பெரிய அளவில் ஹிந்தி மொழியில் தோன்றி வருகின்றன என்பதை நாம் அறிவோம்.

ஹிந்தியை அறியாதவர்களுக்கு அம் மொழியின் இலக்கியப் பரப்பைபற்றித் தெரிந்துகொள்ள வாய்ப்பு இல்லை. இப்போது வெளியாகும் இந்த **ஹிந்தி இலக்கிய வரலாறு** தமிழ் அறிந்தவர்களுக்கு ஹிந்தி மொழி எவ்வாறு வளர்ந்து வந்திருக்கிறது என்பதைச் சுருக்கமாகத் தெரிவிக்கிறது. நாடோடி இலக்கியங்களைப் போன்ற பல பாடல்கள் அங்கங்கே வெவ்வேறு பிராந்தியப் பிரிவுக்குரிய மொழியினங்களில் தோன்றின என்றும், வெவ்வேறு பெயரோடு அவ்வக் காலங்களில் அவ்வவ்விடங்களில் ஹிந்தியின்

இனமொழிகள் வழங்கின என்றும், அவையாவும் ஒரு முகப்பட்டு ஹிந்தியென்னும் பேராறு ஆயின என்றும் இந்த நூல் விளக்குகிறது. வீரகாவியங்களும் பக்திப் பாடல்களும் பல பெருமக்கள் இயற்றியிருக்கிறார்கள் என்பதை அறிகிறோம். சரித்திர நிகழ்ச்சிகளின் சார்பினால் சமுதாய மாற்றமும், அதனால் கொள்கை மாற்றமும், அதனால் இலக்கியப் படைப்பில் மாற்றமும் உண்டானதை உணர்கிறோம். இருவேறு கொள்கைகள் மோதியதையும், பிறகு இரண்டையும் இணைக்கும் சமரச முறை எழுந்ததையும் கால அடைவில் புலப்படுத்தும் பாடல்களைப் பற்றிய செய்திகள் இந்நூலில் வருகின்றன.

இப்படிப் பல சிறுகால்களும் சுழிப்புக்களும் இணைந்து பேராறாகி வளர்ந்து ஹிந்தி இக்காலத்தில் வியத்தற்குரிய வகையில் இலக்கியப் படைப்பைப் பெற்று வருகிறது. இதனை இந்நூலிலுள்ள இரண்டாம் பாகம் சொல்கிறது.

இதனை எழுதியவர்கள் இன்னும் விரிவாக ஹிந்தியின் வரலாற்றைத் தெரிவிக்கும் நூலை எழுதினால் இன்னும் நல்ல பயன் உண்டாகும்.

இந்த முயற்சியை மேற்கொண்ட அன்பர்களை வாழ்த்துகிறேன்.

கி.வா. ஜகந்நாதன்

கி.வா. ஜகந்நாதன்

# முகவுரை

இந்நூல் பாரதத்தில் நாற்பத்தி நான்கு சதவிகிகத்திற்கதி மான மக்களால் பேசப்படும் ஹிந்திமொழியின் கடந்த எழுநூறு ஆண்டுகால வளர்ச்சியின் வரலாற்றை விளக்குங்கின்றது. ஹிந்தியில் இலக்கியமேது என்று பெரிய வினாச்சின்ன மெழுப்பும் அறிஞர்கள் ஹிந்தியின் இலக்கியச் செறிவு இந்தியாவின் வேறு எந்த மொழிக்கும் குறைந்ததல்ல என்பதை அறியலாம். ஒரு மொழியின் இலக்கிய வரலாற்றை அறிந்தால் தான் அதன் சிறப்பைப்பற்றி ஓரளவாவது அறியலாம். ஹிந்தியில் உள்ள இலக்கியம் என்ன என்பதைத் தமிழ் மொழி மூலமாக இன்றுவரை எவராலும் விளக்கப்பட வில்லை. இந்த நூல் அந்த ஒரு தேவையைப் பூர்த்தி செய்யவே வெளியிடப்படுகின்றது. இதன்கண் ஹிந்தியின் எல்லா இலக்கியகர்த்தாக்களின் இலக்கியங்களையும் பற்றி விரிவாகக் கூறப்படவில்லை. பதினேழாயிரத்திற்கும் அதிகமான பக்கங்களிலே வெளியிடப்பட்டுவரும் ஹிந்தியின் இலக்கிய வரலாற்றை இச்சிறுநூலில் விளக்குதல் இயலாதது. இந்நூலைப் படிக்கும் ஒரு சிலராவது ஹிந்தியிலும் இலக்கியமிருக்கின்றது என்பதை மனமாற ஏற்றுக் கொள்வார்களேயானால் அதுவே எங்களது முயற்சியின் பலனாகக் கருதுவோம்.

இந்நூலை எழுதுவதில் எங்களுக்கு ஹிந்தியில் உள்ள பல வரலாற்று நூல்களிலிருந்து உதவி கிட்டியுள்ளது. அந்த நூல்களின் ஆசிரியர்களுக்கு நாங்கள் பெரிதும் கடமைப் பட்டுள்ளோம் மேலும் இந்நூலை வெளியிடுவதில் பலர் எங்களுக்கு உதவியிருக்கின்றார்கள். அவர்களுக்கும், ஏனையோருக்கும் எங்கள் உள்ளங்கனிந்த நன்றி உரித்தாகுக.

கிருஷ்ணமூர்த்தி
விஷ்ணுப்ரியா
காமாக்ஷி

# MESSAGES

Home Minister,
India
New Delhi
June 17, 1963.

I have been glad to hear that the Mylai Hindi Vidyalaya proposes to publish a "History of Hindi Literature" in Tamil. It is important for all of us to recognise and aid the development not only of our own mother tongue but also of the other national languages of this country. It is books like these which will be of great utility in bringing the country to a sense of unity, not only political, but also literary and cultural.

**(LAL BAHADUR SHASTRI)**

New Delhi,
25th June, 1963.

I am glad to learn that the Mylai Hindi Vidyalaya proposes to publish in Tamil a translation of the History of Hindi Literature. This will of course be found very useful by those who wish to study Hindi. I wish the Vidyalaya every success in their undertaking.

**(MORARJI DESAI)**

1

உ

# ஹிந்தி இலக்கிய வரலாறு

ஹிந்தி மொழியின் இலக்கிய வளர்ச்சி பற்றி வரையறுக்கப்படும் பொழுது முதற்கண் மொழியின் தொன்மை பற்றி கூறுவதைக் கடமையாகக் கருதுகின்றோம். எந்த ஒரு மொழியும் தன்னுடைய தொன்மையின் காரணமாக மட்டும் சிறப்புப் பெற்றதாக ஆகிவிட முடியாது. இன்னும் சில மலைவாழ் மக்களிடை வழங்கிவரும் மொழிகள் சற்றும் வளர்ச்சியடையாமல் இற்றைக்கு ஓராயிரம், ஈராயிரம் ஆண்டுகட்கு முன் இருந்த நிலையிலேயே இருந்து வருகின்றன. அவைகளுக்கு என்ன பெருமையிருக்கு முடியும்? உண்மையில் ஒரு மொழியின் பெருமைக்குக் காரணம் அதனுடைய இலக்கியச் செறிவேயாகும். தொன்மையும் இலக்கியச் செறிவும் ஒருங்கே அமையப் பெற்ற தனிச் சிறப்பு உலக மொழிகளிலேயே நம் தமிழுக்குத் தான் சாரும் என்று கூறினால் அது மிகையாகாது. ஆனால் இன்று மக்களிடை வழங்கிவரும் மொழிகளில் ஆங்கிலத்திற்கு ஏற்பட்டுள்ள உயர் மதிப்பு வேறு எந்த மொழிக்கும் இல்லை என்பதை கற்றோர் ஏற்றுக்கொள்வர். இந்த ஆங்கிலம் சமீப காலந்தொட்டு வளர்ச்சி பெறத் துவங்கி ஒரு சில நூற்றாண்டுகளுக்குள்ளாக இம்மகோன்னத நிலையை எய்தியுள்ள தென்பதை யாவருமறிவர். ஆகவே ஒரு மொழி வளரும் வாய்ப்பைப் பெறும் பொழுது எந்நிலையை அடையக் கூடும் என்பதை நாம் கண்கூடாகக் காண்கின்றோம். அடிமைத் தளை அறுக்கப்பட்டு இப்பொழுதுதான் விடுதலையடைந் துள்ள நம் பாரத நாட்டின் தேசீய மொழிகள் பலவும் இன்று இதே வளரும் வாய்ப்பைப் பெற்று விளங்குகின்றன. இது நமக்கெல்லாம் மகிழ்வைத்தந்து நம் உள்ளங்களில் உவகை ஊற்றெடுக்கச்செய்யக்கூடிய ஓர் இன்ப நிலையாகும். ஆனாலும் ஆங்கிலம் கற்ற சில அறிவாளிகள்

இப்பேருண்மையை ஏற்காதவராய் ஆங்கிலத்திற்குத் தாங்கள் கொடுக்கும் மதிப்பைக்கூட நம் தேசீய மொழிகளுக்குக் கொடுக்கத் தயங்குகிறார்கள். தன்னுடைய தாய்மொழியின் இலக்கிய நிறைவு பற்றியும் தொன்மை பற்றியும் பெருமிதங் கொள்கின்றார்கள், அதே சமயம் பிறமொழிகள் பற்றித் தான் முற்றிலும் அறியாதவர்களாயிருந்த போதிலும் அவற்றில் பல குறைகளைச் சுட்டி இழிவாகப் பேச முற்படுகின்றார்கள். இதற்கு அவர்களின் குறுகிய மனப்பான்மையைக் காரணமாகக் கூறுவதா அல்லது நம் நாட்டு மக்களிடையே பொதுவாக இருந்துவரும் பல குறைகளில் இதையும் ஒன்றாகக் கொண்டு வருந்தியிருப்பதா என்பது நமக்குப் புரியவில்லை. ஹிந்தியைப் பற்றி இவர்கள் பெரிதுபடுத்திக் கூறும் குறைகளில் ஒன்று இது சமீப காலத்தில் தான் தோன்றியது என்பதாம். “நேற்று பிறந்த இம்மொழியில் இலக்கியம் ஏது” என்று கேட்டு தங்களுடைய இலக்கிய ஆர்வத்தையும் காட்டிக் கொள்ளும் வாய்ப்பைத் தேடிக் கொள்கிறார்கள் இவர்கள். ‘வாதத்திற்கு மருந்துண்டு; பிடிவாதத்திற்கு மருந்து ஏது?’ அறிந்தும் அறியாதவர்களாக (பிடி) வாதம் செய்யும் இவ்வறிவாளிகளை பிரதிவாதத்தினால் நம் சீரிய கருத்துக்களை ஏற்கும்படியாகச் செய்ய முடியும் என்று நாம் எதிர்பார்க்க முடியாது. இக்கேள்விகளுக்குப் பதில் கூறாமல் வாளாவிருப்பதும் பொருத்தமாகாது. ஆகவே ஹிந்தி மொழியின் தோற்றுவாய், இலக்கியச் சிறப்பு இவைபற்றி நம் கருத்துக்களை கீழே தருகின்றோம்.

நம் நாட்டு மக்களிடையே வரலாற்றுக் குறிப்புகளை வரைந்து அவற்றைப் பாதுகாத்து வைக்கும் பழக்கம் சமீப காலந்தொட்டே வளர ஆரம்பித்திருக்கிறது. நம் முன்னோர்கள் இத்துறையில் அதிக ஆர்வங்காட்டாது விட்டு விட்டார்கள். இவ்வுண்மை தமிழுக்கு எப்படிப் பொருந்துமோ அப்படியே ஹிந்திக்கும் பொருத்தமே. பண்டை நூல்களைச் சேகரித்துக் கோர்வையாகத் தொகுத்து முதன் முதலாக வரலாற்று நூல்

எழுதிய பெருமை 'கார்ஸே-த-தாஸே' என்ற பிரஞ்சுக் காரரையே சாரும். அதற்குப் பிறகு வெளியான முக்கியமான நூல் "சிவஸிங் ஸரோஜ்" என்பதாம். இவ்விரு நூல்களிலும் இருந்த சில குறைகளை நீக்கி 'ஸர் ஜார்ஜ் க்ரியர்ஸன்' என்ற ஆங்கிலேயர் ''மாடர்ன் வர்னாகுலர் லிடரேசர் ஆப் ஹிந்துஸ்தான்'' என்ற நூலை வெளியிட்டார். ஆனாலும் பெருமளவிற்குக் குறைகள் நீக்கப் பெற்று இலக்கிய வளர்ச்சியின் காலவேறு பாடுகளைத் தாங்கி சீரிய முறையில் வெளியான முதல் நூல் ''மிச்ர பந்து வினோத்'' என்பதேயாகும். காலப் போக்கில் மேலும் பல நூல்கள் எழுதப்பட்ட போதிலும் 1916ல் வெளியான 'ஆசார்ய இராம சந்திர சுக்ல' அவர்களால் தீட்டப்பட்ட வரலாற்று நூலே எல்லாவற்றுள்ளும் தலை சிறந்ததாகக் கருதப்படுகின்றது.

மேலே கூறப்பட்ட வரலாற்று நூல்கள் வாயிலாக அறியப் படும் உண்மை யாதெனில் ஹிந்தி இலக்கியம் இற்றைக்கு ஓராயிரம் ஆண்டுகட்கு முன்பிருந்து வளர்ச்சி பெறத் துவங்கி இன்றுள்ள நிலையை அடைந்திருக்கிறது என்பதே. அதாவது கிட்டத்தட்ட பத்தாவது அல்லது பதினோராவது நூற்றாண்டே ஹிந்தி இலக்கியம் தோன்றிய காலமாகும். ஹிந்தி என்று நாம் இங்கே கூறும் பொழுது இன்றும் வடநாட்டின் பல பகுதிகளில் பேசப்பட்டு வருகின்ற இராஜஸ்தானி, அவதீ, மைதிலீ, வ்ரஜபாஷை போன்ற பல பிரதேச மொழிகளும் சேர்த்ததே என்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும். இம்மொழிகள் பல்வேறு காலங்களில் அரசியல், சமூக சூழ்நிலை காரணமாக அவ்வப்பொழுது முக்கியத்துவம் பெற்று இலக்கிய மொழிகளாக வளர்ச்சி பெற்று வந்திருக்கின்றன. இம்மொழிகள் ஒன்றுக் கொன்று பெரிதும் இணைந்து ஒரு சில ஒலி வேற்றுமைகள் நீங்க மற்றெல்லா விதத்திலும் ஒன்றைப்போல் அமைந்துள்ள காரணத்தால் இவற்றை வெவ்வேறு மொழிகளாகக் கொள்வது சரியன்று என்பதை இவண் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறோம்.

அதாவது தமிழ்நாட்டின் பல்வேறு மாவட்டங்களிலும் மக்களால் பேசப்படுகின்ற தமிழ் மொழியில் எங்ஙனம் மாறுபாட்டைக் காண்கிறோமோ அதைவிடச் சற்றே அதிகமாக மேலே கூறப்பட்ட மொழிகளில் வேறுபாடு காணப் படுகின்றது. இம்மொழிகள் பேசப்பட்டுவரும் நிலப்பகுதியின் பரந்த தன்மை, இவை தனித்தனி இலக்கிய மொழிகளாக வளர்ச்சி பெற்ற ஓர் நிலை இவற்றைக் கருத்தில் கொண்டு பார்க்குங்கால் இவற்றை இன்று ஹிந்தி என்று அறியப்பட்டு வரும் மொழியினின்றும் வேற்று மொழிகளாகக் கொள்ள இடமில்லை. அந்த அந்த மொழி பேசப்படுகின்ற நிலைப் பகுதியின் பெயராலேயே அம்மொழிகட்கும் பெயர்கள் அமைந்துவிட்டன என்ற காரணத்தால் அவற்றை வெவ்வேறாகக் கொள்வது சரியன்று, இராண்டாயிரம் ஆண்டு காலமாக இலக்கியத் துறையில் வளர்ச்சி பெற்று வந்துள்ள நம் தமிழ்மொழியில் காலப்போக்கில் எவ்வாறு உருவ மாறுபாடு ஏற்பட்டு வந்திருக்கிறதோ அதைக் காட்டிலும் அதிகமாக இம் மொழிகளில் வேறுபாட்டைக் காணமுடியாது. உலகிலேயே சிறந்த நாடக ஆசிரியராக மதிக்கப்படும் 'ஷேக்ஸ்பியரின்' நூல்களை ஆங்கிலத்தினின்றும் வேறாக ஆங்கிலங்கற்ற அறிஞர் கருதுவதில்லை. ஆனால் ஹிந்தியின் இவ்வுப மொழிகளை வேற்று மொழிகளாகக் கொண்டு ஹிந்தியை நேற்று தோன்றிய மொழி என்று குறைவு படுத்திப் பேசுவதில் பெருமை ஏன் காண்கிறார்கள் என்பது யாருக்கும் புரியாது. 'உலகிலுள்ள எம்மொழியும் நேற்று அல்லது முன் தினம் தோன்றியது அன்று; பல்வேறு காலங்களில் பல்வேறு நிலைகளில் தன்தன் போக்கில் வளர்ச்சி பெற்று இன்றுள்ள நிலையை அவை அடைந்துள்ளன' என்ற மொழி வல்லுநர்களின் மொழி வளர்ச்சிக் கொள்கையைக்கூட இவர்கள் ஏற்கத் தயங்குவது விந்தையே ! இதற்குக் காரணம் அரசியல் பொறாமையே (Political Prejudice) என்பது நமது துணிவு; நிற்க.

ஹிந்தியின் இலக்கிய நிறைவு பற்றிக் கூறுமிடத்து 'கபீர்தாஸ்', துலஸீதாஸ்', 'ஸூர்தாஸ்', 'மீராபாய்', இவர்களின் தெய்வீகப் புகழ் பரவாத இடம் பாரத நாட்டின்கண் உளதோ? தமிழர்களும் இந்த பக்த கவிகளை வாயார வாழ்த்துகிறார்கள். 'பொன்மலர் நாற்றமுடைத்து' என்பது ஒரு பழமொழி. மணம் பெற்ற பொன்மலரை யாரும் கண்டிலார். ஆனால் 'மீராபாயீ' அவர்களின் பக்தி நயமும், திருமதி சுப்புலக்ஷ்மி அவர்களின் குரல் நயமும் சேர்ந்து உம் உள்ளத்தை மயக்கும்பொழுது இம்முதுரையின் பொருள் புலனாகின்றது. காற்றினிலே மிதந்து வரும் அந்த நாத வெள்ளத்தில் நாமும் மிதந்து சென்று பக்திப் பெருங் கடலில் திளைக்கின்றோம் கரைகாணாது. தமிழகத்திலுங்கூட ஆழ்வார்கள், நாயன்மார்கள் போன்ற பக்த கவிகளையே மக்கள் போற்றுகின்றனர். வீரம், கொடை மற்ற புறப்பொருள்களைப் பற்றிப் பாடியுள்ள எத்தனையோ கவிகள் சங்க காலந் தொட்டு இருந்து வந்திருக்கிறார்கள். மக்கள் உள்ளங்களில் அவர்களுக்கு இடமில்லை. அதேபோல் 'கபீர்தாஸ்' தோன்றிய காலத்திற்கு முன்பும் வடநாட்டில் ஆண்டு வந்த இராஜபுத்திர அரசர்களின் வீரம், கொடை முதலிய பண்புகளைப்பற்றி பல கவிகள் பெருங் காப்பியங்களை இயற்றியிருக்கிறார்கள். அந்நூல்களை மக்கள் விரும்பிப் படிக்கின்றார்கள் கதை படிப்பது போல. அவைகளைத் தீட்டிய கவிகளைப் பற்றிய யாரும் கவலைப் பட்டதில்லை. இவ்வாறு ஹிந்தி இலக்கியம் பதினோராவது நூற்றாண்டு முதல் இன்று வரை பல பிரதிகூலமான சூழ்நிலையிலும் இடைவிடாது வளர்ந்து கொண்டே வந்திருக்கிறது. இன்று நம் நாட்டின் எல்லா தேசீய மொழிகளுமே இலக்கிய வளர்ச்சிக்கான சம வாய்ப்பைப் பெற்று விளங்குகின்றன. ஒவ்வொருவரும் தன் தன் தாய்மொழியின் உன்னதமான எதிர்காலத்தை உருவாக்கும் திருப்பணியில் தானும் பங்குகொள்ள உவகை கொண்டவராய்

இருக்கின்றார்கள். நாட்டின் பொது மொழியாக அமைந்த காரணத்தால் ஹிந்தியின் வருங்காலத்தில் நாட்டு மக்கள் அத்துணை பேர்களும் அக்கறை கொண்டுள்ளார்கள். ஆகவே ஹிந்தியில் இலக்கியம் இல்லையே என்ற குறை சில அறிஞர் உள்ளங்களில் உண்மையாக இருக்குமானால் அவர்களுடைய இக்குறை வெகு விரைவில் நீங்கிவிடும் என்று நாம் துணிந்து ஆறுதல் கூறுகிறோம். மேலே ஹிந்தி இலக்கிய வளர்ச்சி பற்றி விரிவாக வரைவோம்.



7

# வீர காப்பிய காலம்

ஹிந்தி இலக்கியம் தோன்றிய காலம் வடநாட்டின் கண் மிகவும் குழப்பமான ஓர் சூழ்நிலை அமைந்த காலமாகும். பௌத்த, சமண சமயங்கள் பெரிதும் வீழ்ச்சியுற்று ஒழுக்க நிலை தவறி மறைவை எதிர்நோக்கிக் கொண்டிருந்தன. பௌத்த மதமானது மஹாயான், ஹீனயான், வஜ்ரயான், ஸஹஜயான் என்று பல பிரிவுகளாகப் பிரிந்து தன்னுடைய பழைய பெருமையை இழந்துவிட்டது. யோக பலத்தினால் பல அற்புதமான சக்திகளைப் பெற்று இவர்கள் சித்தர்கள் என்று அழைக்கப்பட்டார்கள். இவர்கள் நீரின்மேல் நடப்பது, தீயில் இருப்பது, வானில் பறப்பது, விண்ணில் மறைவது போன்ற பல விந்தையான செயல்கள் மூலம் ஒன்றுமறியாத மக்களின் உள்ளங்களில் பயத்தையும், ஆவலையும் தூண்டி உண்மையான சமய நெறிகளிலிருந்து வழுவச் செய்து வந்தார்கள். மது அருந்துவது, மாதின் சேர்க்கை இவற்றை 'வீடு' பெற (பிறவித் துன்பங்களினின்றும் விடுபட்டு நித்திய ஆனந்த நிலையை எய்துவதற்கு) இன்றியமையாத ஓர் தேவையாகக் கூறி வந்தார்கள் मज्जं पिबामो महिल रमामो मोक्खं जगामो ।। இதனால் மக்களிடையே ஒழுக்கச் சிதைவு ஏற்பட்டு வந்தது. இச்சித்தர்கள் எண்பத்திநால்வர் என்று அறியப்படுகிறது. இவர்களில் ஒருவரான 'கோரக் நாத்' என்பவர் இவ்வொழுக்கச் சிதைவை எதிர்த்து ஹடயோகத்தின் மூலம் மோக்ஷத்தை அடைவதற்கான வழியைக் காட்ட ஆரம்பித்தார். இதே காலத்தில்தான் 'கஜினி', 'கோரி' போன்ற முகம்மதிய அரசர்கள் வட மேற்கு எல்லையைக் கடந்து நம் நாட்டின் செல்வத்தைக் கொள்ளை கொள்ளவும், இஸ்லாம் மதத்தைப் பரப்பவும் பலமுறை படையெடுத்து வந்தார்கள். உள்நாட்டு அரசியல் நிலைமையும் மிகவும் சீர்கெட்டிருந்தது. ஏழாவது நூற்றாண்டின் மத்தியில் மகாராஜா ஹர்ஷவர்தனனின் மறைவுக்குப் பிறகு நாட்டை ஓர்

குடையின்கீழ் ஆளக்கூடிய சக்தி வாய்ந்த அரசர்கள் அற்றுவிட்டார்கள். ஆங்காங்கே பல அரச குடும்பங்கள் தலையெடுத்து ஒன்றோடொன்று மோதிக் கொள்வாரம்பித்தன. அவ்வரசர்களிடம் சிறந்த வீரமிருந்தது; ஆனால் ஆணவம், பொறாமை, போர் வெறி, குறுகிய நாட்டுப்பற்று இவற்றின் காரணமாகத் தங்களுக்குள் வீண் சண்டைகளில் அவ்வீரம் வீண்போய்க் கொண்டிருந்தது. அந்நிய நாட்டவரும், வேற்று மதத்தினருமான முகம்மதிய கொள்ளைக் கூட்டத்தினருடன் ஒருபுறம் சமர் புரிய நேர்ந்த தென்றால், மற்றொரு புறம் பழைய விரோதம் காரணமாக அண்டை அயல் மன்னர்களுடன் போர் புரிவது அவசியமாகக் கருதப்பட்டு வந்தது. பாரத நாட்டின் வீரம், வலிமை இவை தன் கடைசி ஒளியை வீசி மறையச் சித்தமாயின. இந்தக் குழப்பமான நிலையில்தான் ஹிந்தி இலக்கியம் உருவாகத் தொடங்கியது.

இலக்கியம் சமூகத்தையே பிரதிபலிக்கும் நிலைக் கண்ணாடியாகும். காட்டுத் தீ போல் நாட்டில் பரவயிருந்த மேலே காட்டப்பட்ட யுத்த நிலையையே ஆரம்பகால ஹிந்தி இலக்கியம் தாங்கி நிற்கின்றது. ஆகவேதான் வரலாற்று நூலார் இக் காலத்திற்கு 'வீர காதா கால்' அதாவது 'வீரக் காப்பியக் காலம்' என்று பெயரிட்டிருக்கிறார்கள். இக் காலத்து நூல்கள் பெரிதும் வீர ரஸம் ததும்பத் தீட்டப்பட்ட பெருங் காப்பியங்களே யாகும். இக்காப்பியங்களை எழுதிய கவிகள் சாரணர்கள் என்று அழைக்கப்பட்டார்கள். ஆகவே இக்காலத்திற்குச் 'சாரணர் காலம்' என்று மற்றோர் பெயரும் அமைந்துள்ளது. இச்சாரணர்கள் சிறந்த கவிகளாகத் திகழ்ந்ததோடல்லாமல் போர்க் கலையிலும் தேர்ச்சி பெற்று சமரில் மதயானையெனப் பொருதும் திண்மை படைத்தவர்களாகவும் விளங்கினார்கள். அவர்களின் உடைவாள் போர்க்களத்தில் அனலைக்கக்கும் திறன் படைத்தன எனில் அவர்கள் தங்கள் கவிதைகளின் மூலம் கேட்போர் உள்ளங்களில் வீரக் கனலை கொழுந்து

விடடெறியச் செய்யும் ஆற்றலும் பெற்றிருந்தார்கள். அவர்கள் தாங்கள் அண்டி வாழ்ந்த அரசர்களின் வீரம், மற்றும் பல சிறந்த குணங்களைப் பற்றி மிகைப்படுத்தித் தன்னுடைய கவிதைகளில் தீட்டி வந்தார்கள். அக்காலத்து அரசர்களும் இச்சாரணர்களைத் தங்களுடைய நண்பர்களாகவே கருதிப் பெரிதும் போற்றி வந்தார்கள். போர் மூளும்பொழுது இவர்களும் தங்களை ஆதரித்து வந்த அரசர்களின் தோளோடு தோள் சேர்த்து நின்று தன் வாள் வலிமையினால் விரோதியை விரட்டியடிக்கச் சித்தமாயிருந்தார்கள். ஆகவே இவர்கள் தீட்டியுள்ள போர்க்களக் காட்சிகள் மிக்க விருவிருப்பாக அமைந்துள்ளன.

இக்காலத்தில் வீர காப்பியங்களே யன்றி வேறு நூல்களும் இயற்றப்பட்டுள்ளன. ஆறாவது நூற்றாண்டு முதலே இலக்கிய மொழியாக விளங்கிவந்த அபப்ரம்ச பாஷையில் ஜைன, சித்த மதக் கோட்பாடுகளைத் தாங்கி நூல்கள் எழுதப்பட்டன. ஆனால் அவை இலக்கிய நயம் குன்றியிருந்ததோடு கொஞ்சங் கொஞ்சமாகத் தேய்ந்து மறையும் நிலையில் இருந்தன. பதினான்காவது நூற்றாண்டிற்குப் பிறகு இம்மொழியில் முக்கியமான நூல்கள் எழுதப்படவில்லை என்றே கூறிவிடலாம். இந்த அபப்ரம்ச மொழியிலிருந்தே ஹிந்தி மொழி மலர்ந்து வளர்ந்து வந்துள்ளது என்ற காரணத்தால் இங்கு இதைப் பற்றிக் கூறப்பட்டது.

பாரத நாட்டின் பரந்த மத்திய பகுதியே ஹிந்தி மொழி பேசப்படும் பிரதேசமாகும். இந்நிலப் பகுதியை இரு பிரிவுகளாகப் பிரித்தால் மேற்குப் பகுதியில் பேசப்படும் பல பிரதேச மொழிகளும் மேற்கத்தி ஹிந்தி என்றும், கிழக்குப் பகுதியில் பேசப்படும் மொழிகள் கிழக்கத்தி ஹிந்தி என்றும் அறியப்படுகின்றன. இராஜஸ்தானி அல்லது டிங்கல் என்ற மொழியும். விரஜ பாஷையும் மேற்கத்தி ஹிந்தியைச் சேர்ந்தவையாம்' அவதி, மைதிலி போன்ற மொழிகள் கிழக்கத்தி ஹிந்தியைச் சாரும். இக்காலத்தில் எழுதப்பட்ட

வீர காப்பியங்கள் டிங்கல் மொழியில் உள்ளன. இதே காலத்தில் பீகாரைச் சேர்ந்த வித்யாபதி என்ற கவி மைதிலீ மொழியில் 'பதாவலீ' என்ற நூலை இயற்றியுள்ளார். இந்நூல் கார்முகில் வண்ணன் கண்ணனிடம் கட்டழகி இராதை கொண்ட காதலைச் சித்தரிக்கின்றது. இந்நூலில் பக்தி நயத்தைக் காட்டிலும் சிருங்காரத்தின் ஒயிலே மேலோங்கி நிற்கின்றது. இது ஜயதேவரின் 'கீத கோவிந்த'த்தைத் தழுவி எழுதப்பட்டதாகக் காணப்படுகிறது. பா வகையில் அமைந்து ஒலி நயமும், இன்சுவையுங் கொண்டு மிளிர்வதால் இதைத் தீட்டிய கவி 'மைதில் கோகில்' (மைதிலீ மொழியின் குயில்) என்றும் 'நவீன ஜயதேவர்' என்றும் அழைக்கப்படுகின்றார். இவருடைய பாடல்களைக் கேட்டு சைதன்ய மகாப்பிரபு பக்திப் பரவசமடைந்து விடுவார் என்று கூறப்படுகிறது. சிலர் இப் பாக்களில் ஜீவாத்மா பரமாத்மாவின் சம்பந்தம் உருவமாகத் தீட்டப்பட்டிருப்பதாகக் கருதுகிறார்கள். வித்யாபதி திரிஹுத் என்ற நாட்டின் அரசரான சிவஸிங் என்பவரின் ஆதரவில் இருந்து வந்தார். தன்னை ஆதரித்து வந்த இவ்வரசனைப் பற்றி இவர் தன்னுடைய கவிதைகளில் பல இடங்களில் பெரிதும் பெருமை பெறக் கூறியிருக்கின்றார். 'கீர்த்திலதா', 'கீர்த்திபதாகா' என்ற இரண்டு நூல்கள் இவ்வரசனின் புகழைப் பாடுவதற்காகவே இவரால் அபப்ரம்ச மொழியில் எழுதப்பட்டன என்றும் கூறப்படுகின்றது. சிறந்த சிவபக்தரான இவர் கி.பி.1540–ல் இவ்வுலகை நீத்தார்.

இவண் 'அமீர் குஸ்ரோ' என்ற பட்டாணியரைப் பற்றிக் கூறாமலிருக்க முடியாது. அபுல் ஹஸன் என்ற இயற்பெயர் கொண்ட இவர் 'ஹிந்தி மொழியின் தந்தை' என்று அழைக்கப்படுகின்றார். தற்காலத்தில் கற்கப்படுகின்ற ஹிந்தியின் ஒலி வடிவங்கள் முதன் முதலாக இவர் கவிதைகளில் தான் பேரளவிற்குக் காணப்படுகின்றன. கி.பி. 1253–ல் தில்லிக்கு அண்மையில் பாடியாலி, என்ற ஓர் சிறு கிராமத்தில் இவர் பிறந்தார். அரபி, பார்ஸி, சம்ஸ்கிருதம்,

ஹிந்தி இன்னும் பல மொழிகளை நன்கு அறிந்து அவைகளில் கவிதை இயற்றும் திறன் படைத்து பன்மொழிப் புலவராக விளங்கினார். தில்லியில் ஆட்சி புரிந்த கயாஸுத்தீன் பல்பன் என்ற பட்டாணிய மன்னன் முதல் அலாஹுத்தீன், குதுப்புத்தீன் முபாரக் சாஹ் வரை பல பட்டாணிய மன்னர்களின் ஆட்சியைப் பார்த்திருக்கிறார். இவர்களில் பல அரசர்களின் அவைகளில் அங்கமும் வகித்திருக்கிறார். தன்னுடைய காலத்தில் இவர் தலை சிறந்த கவியாகக் கருதப்பட்டார் என்பது மட்டுமின்றி இன்றும் சிலர் இவருக்கு இணையான கவி ஆரிய மொழிகளில் தோன்றவில்லை என்றும் கூறத் துணிகின்றார்கள். இவர் பெரிதும் பார்ஸி மொழியில்தான் நூல்கள் இயற்றியுள்ளார். ஆனாலும் அக்காலத்தில் மக்களிடைய பேசப்பட்டு வந்த ஹிந்தி மொழியைப் புறக்கணிக்கவில்லை. ஹிந்தியில் இவர் இயற்றியுள்ள புதிர்கள், விடுகதைகள் மிகவும் பிரசித்தி பெற்றவை. எல்லாவற்றையும் விட அக்காலத்து ஆட்சி மொழியாக விளங்கி வந்த பார்ஸி மொழிக்கு சம நிலையில் ஹிந்தியை ஸ்தாபிக்கும் முறையில் இவர் இயற்றியுள்ள 'காலிக் பாரீ' என்ற நூலே இவருடைய பெரும் புகழுக்குக் காரணமாகும். இந்நூல் பர்ஸீ, அரபி சொற்களுக்கு இணையான ஹிந்தி சொற்களைத் தாங்கி இக்காலத்து லெக்ஸிகள் அல்லது பேரகராதி போன்று விளங்குகின்றது. மேலும் தன்னுடைய பன்மொழிப் புலமையை விளக்க வைக்கும் முறையில் இவர் இரு மொழிகளை இணைத்துப் பல கவிதைகளைப் புனைந்திருக்கின்றார். "கவிதையின் ஒரு அடியில் பார்ஸீ மறு அடியில் சம்ஸ்கிருதம் அல்லது முதலடியில் சம்ஸ்கிருதம் இரண்டாவது அடியில் ஹிந்தி இவ்வாறாக மொழிகளைக் கலந்து கவிதைகளைத் தீட்டி இன்றைய மொழி வெறிக்கு அன்றே பேரடி வழங்கி விட்டார்" என்பது நம் கருத்து. இம்மாபெருங்கவி கி.பி. 1325ல் பூத உடலை நீத்துப் புகழுடம் பெய்தினார்.

இப்பொழுது இக்காலத்தின் முக்கியமான நூல்களான வீர காப்பியங்களை ஆராய்வோம். இவை பெரிதும் 'ராஸோ'

என்ற பெயரால் வழங்கி வருகின்றன. 'ராஸோ' என்ற சொல்லின் பொருள் பற்றிப் பலர் பலவிதமாகக் கூறியிருக்கிறார்கள். ஆனால் காப்பியம் (காவ்யம்) என்ற பொருளில் 'ரஸாயண' என்ற சொல் வழங்கி வந்து அதுவே மருவி 'ராஸோ' என்று ஆனதாக ஆச்சார்ய ராமசந்திர சுக்ல அவர்கள் கூறியுள்ள கருத்து மிகவும் பொருத்தமாகக் காண்கின்றது. இந்நூல்கள் சரித்திர நிகழ்ச்சிகளை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்ட போதிலும் இவைகளில் சரித்திர உண்மைகளை விடக் கற்பனைக் காட்சிகளே மலிந்து காணப்படுகின்றன. மேலும் இந்நூல்களைத் தீட்டிய கவிகள் தங்களை ஆதரித்து வந்த இராஜ புத்திர அரசர்களின் வீரத்தையே தங்கள் நூல்களில் சித்தரித்திருக்கின்றார்கள் என்ற போதிலும் பிற்கால நிகழ்ச்சிகளும் இந்நூல்களில் இடம் பெற்றிருப்பதாலும், ஆங்காங்கு நவீனத் தன்மை தோற்றுவதாலும் அவ்வப்பொழுது புதிய கவிதைகள் இவற்றில் சேர்க்கப்பட்டுள்ளதாகத் தோன்றுகிறது. மேலும் பெயருக்கேற்ப இந்நூல்களில் வீர ரஸமே முக்கியமாக இருந்த போதிலும் வீரத்திற்கு ஒரு தூண்டு கோலாக சிருங்காரமும் இடம் பெற்றிருக்கின்றது. ஓர் அரசிளங் குமரியின் வனப்புமிக்க எழில் தோற்றமே போர் மூள்வதற்குக் காரணமாயமைந்து பல வீரச் செயல்கள் புரியத் தூண்டுகின்றது. போரில் விரோதியை வென்று காரிகையைக் கவர்ந்து மணம் முடிப்பது இந்நூல்களில் சாதாரணமாகக் காணப்படும் காட்சிகளாகும். பெரும்பாலும் இவர்கள் கற்பனைக் காரிகைகளே யன்றி சரித்திரப் பாத்திரங்களல்லர் ஆனால் போர்க்களக் காட்சிகள் மிக்க விறுவிறுப்பாயமைந்து படிப்போர் உள்ளங்களில் வீர உணர்ச்சியைத் தூண்டுகின்றன. இக்காப்பியங்களில் முக்கியமானவை (1) குமான் ராஸோ (2) பீஸல் தேவ ராஸோ (3) பிரிதிவீ ராஜ் ராஸோ (4) ஜய சந்த பிரகாஷ் (5) ஜயமயங்க ஜஸ சந்திரிகா (6) ஆல்ஹா கண்ட் (7) ஹம்மீர் ராஸோ ஆகியவையாம்.

## குமான் ராஸோ

இந்நூல் கி.பி. 810 முதல் 840 வரை சித்தூரை ஆண்டு வந்த இரண்டாவது குமான் என்ற அரசனின் வீரத்தைச் சித்தரிப்பதாகும். இவ்வரசன் காலத்தில் பர்க்தாதில் ஆட்சி புரிந்து வந்த கலீபா அல்மாமூ என்பவன் இந்தியாவின் மீது படையெடுத்தான். மற்ற இராஜ புத்திர அரசர்களின் உதவியுடன் குமான் கலீபாவின் படையை எதிர்த்துப் புறங் கொண்டான். இப்போரில் குமான் காட்டிய வீரத்தையே தளபதி விஜய் என்ற கவி இந்நூலில் தீட்டியிருக்கின்றார். ஆனால் இப்பொழுது கிடைக்கும் இந்நூலின் பிரதியில் சித்தூரை ஆண்டு வந்த இராணா பிரதாப்ஸிங் வரை பல அரசர்களின் வரலாறு வரையப்பட்டிருக்கிறது. ஆகவே இந்நூலின் பிற்பகுதி பிற்காலத்தில் சேர்க்கப்பட்டிருக்கக்கூடும் என்று கொள்ள வேண்டியிருக்கிறது.

## பீஸல் தேவ் ராஸோ

இந்நூலை இயற்றிய கவி நரபதி நால்ஹ ஆவார். தன்னை ஆதரித்து வந்த ஆஜ்மீரின் அரசரான பீஸல்தேவ், இயற்பெயர் நான்காவது விக்ரஹராஜ், என்பவனின் வாழ்க்கையை இந்நூலில் சித்தரித்திருக்கின்றார். சௌஹான் வம்சத்தைச் சேர்ந்த இவ்வரசன் சிறந்த வீரனாக விளங்கினான். இவன் தோமர் அரசர்களிடமிருந்து தில்லி, ஜான்ஸீ போன்ற அண்டை நாடுகளை வென்று தன் நாட்டைப் பெருக்கிக் கொண்டான். இவன் முகம்மதியர்களை எதிர்த்துப் பல போர்களில் வெற்றி கொண்டு அவர்களை விரட்டியிருக்கின்றன். இவனுடைய இவ்வீரச் செயல்களைப் பற்றி இவனுடைய அவையில் இராஜ கவியாக இருந்த சோமதேவ் என்பவரால் சம்ஸ்கிருதத்தில் 'லலிதவிக்ரஹராஜ நாடகம்' என்ற நூலில் விரிவாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் நரபதி நால்ஹ இவ்வரசரின் சரித்திரப் பிரசித்தி பெற்ற

போர்களைப் பற்றி அதிகம் கூறாமல் மாளவ நாடு சென்று இராஜமதியை அழைத்து வருதல் ஆகிய இந்நிகழ்ச்சிகளைப் பற்றியே தன்னுடைய நூலில் தீட்டியிருக்கின்றார். ஆகவே இந்நூலில் வீரத்தைக் காட்டிலும் சிருங்காரமே மேலோங்கி நிற்கின்றது. மேலும் இந்நூல் பாடக் கூடிய வகையில் அமைந்திருப்பதால் பெரிதும் உருமாறிக் காணப்படுகின்றது. இதன் மொழியோ மற்ற 'இராஸோ' நூல்களின்றும் வேறுபட்டு இலக்கிய நயத்தோடு அமைந்து 'பிங்கல்' என்று அறியப்படுகிறது. பின் நாட்களில் இம்மொழியிலிருந்தே வ்ரஜ பாஷை மலர்ச்சியடைந்ததாகக் கூறப்படுகின்றது.

## பிருத்வீ ராஜ் ராஸோ

இந்நூலே வீரகாப்பிய காலத்தின் தலையாய நூலாகும். இது அக்காலத்தின் எல்லா சிறப்பியல்களையும் தாங்கி நின்று ஹிந்தியின் முதல் பெருங்காப்பியமாக மதிக்கப்படுகின்றது. இதை இயற்றிய கவி சந்த் ஹிந்தியின் முதல் மகா கவியாகக் கருதப்படுகின்றார். இந்நூல் இரண்டாயிரத்து ஐநூறு பக்கங்களைக் கொண்டதாய் அறுபத்தொன்பது அத்தியாயங்களில் முடிந்திருக்கிறது. இந்நூலின் வாயிலாகவே அறியப்படுவது யாதெனில் இதன் கடைசி அத்தியாயத்தை கவிசந்தின் மகன் ஜலஹண் என்பவர் பூர்த்தி செய்தார் என்பதே. அதாவது பிருத்வீராஜ் கோரியினால் கைது செய்யப்பட்டு கஜினிக்குக் கொண்டு செல்லப்பட்டவுடன் கவி சந்த் தன் நண்பனான பிருத்வீராஜைத் தேடிக் கொண்டு தானும் கஜினிக்குச் செல்லத் தயாரானார். அப்பொழுது அவர் தான் எழுதிவந்த இப்பெருங் காப்பியத்தைப் பூர்த்தி செய்யும் பொறுப்பைத் தன் மகனிடம் கொடுத்துச் சென்றார் என்று அறியப்படுகிறது.

पुस्तक जल्हन हत्थ दै चलि गज्जन नृप-काज।।

பிருத்வீராஜின் அவையில் சந்த் அமைச்சராகவும், இராஜ கவியாகவும், அரசனின் நெருங்கிய நண்பராகவும் இருந்து வந்தார். போர்க்களத்திலும், மணப்பந்தலிலும், வேட்டைத் துறையிலும் சந்த் பிருத்விராஜுக்கு உற்ற துணைநின்று அவனுடைய வாழ்க்கையின் ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் பெரும் பங்கு கொண்டிருக்கின்றார். இவ்விருவருடைய வாழ்க்கையும் ஒன்றோடொன்று இணைந்து பிரிக்க முடியாதபடி பின்னிக்கிடக்கின்றன. பிறப்பு இறப்பு இரண்டிலுங்கூட இருவரும் இணைபிரியவில்லை என்றும் ஒரே காலத்தில் தோன்றி இருவரும் ஒரே காலத்தில் இவ்வுலகை நீத்தார்கள் என்றும் கூறப்படுகிறது. மன்னனைத் தேடி கஜினி அடைந்த சந்த் சந்நியாசி போன்று வேடம் பூண்டு கோரியைச் சந்தித்து "பிருத்வி ராஜிடமிருந்து ஒலியைப் பின்பற்றி பாணம் எய்தும் கலையைக் கற்றால் அவன் எளிதில் பாரதம் முழுவதையும் வெல்ல முடியும்'' என்று கூறி அவன் உள்ளத்தில் பேராசையைத் தூண்டிவிட, கோரியும் சந்த் விரித்த வலையில் வீழ்ந்தான். கண்கள் குருடாக்கப்பட்ட பிருத்விராஜ் அவையில் கொண்டு வரப்பட்டான். அவன் கையில் வில்லும் அம்பும் கொடுக்கப்பட்டது. அவன் வில்லில் நாணேற்றி அம்பு தொடுத்து நிற்கும் பொழுது ஓர் இரும்புத் துண்டில் தட்டி ஒலி எழுப்பப்பட்டது. அக்கணமே பிருத்வீராஜின் வில்லிலிருந்து சீறிச் சென்ற அம்பு இரும்புத் துண்டை இரு துண்டாக்கிச் சென்றது. இவ்வதிசயக் காட்சியைக் கண்ட கோரி 'ஆஹா' என்று வியந்து மெச்ச அவ்வொலியைப் பின்பற்றி பிருத்வீராஜின் மற்றொரு பாணம் கோரியின் ஆவியைக் குடித்து ஏகியது. மறுகணமே அருகில் நின்ற சந்த் பிருத்விராஜின் கையில் உடைவாளைக் கொடுக்க இருவரும் ஒருவரை ஒருவர் வெட்டிக் கொண்டு மரணத்தைத் தழுவினார்கள். இவ்வாறு தன் அரசனும், நண்பனுமான பிருத்வீராஜுக்கு நேர இருந்த பெரும் இழிவைத் தன் அறிவுத் திறமையால் தவிர்த்ததாக இந் நூலிலிருந்து அறியப்படுகிறது.

பண்பாடும்பட்டர் மரபைச் சேர்ந்த சந்த் பஞ்சாப் இராஜ்யத்தில் லாகூரில் பிறந்தார். ஆறு மொழிகள், இலக்கணம், இலக்கியம், யாப்பணி, சோதிடம் மற்றும் பல சாத்திரங்களிலும் கரை கண்டவராகத் திகழ்ந்தார். வாளேந்தி போர் புரிவதில் தனக்கு நிகரற்று விளங்கினார்.

இப்பொழுது இந்நூலில் சுட்டிக் காட்டப்படும் சில குறைகளைப் பற்றி ஆராய்வோம். பிருத்வீராஜ் சரித்திரப் புகழ் பெற்ற பாத்திரமாக இருந்த போதிலும் அவனுடைய வாழ்க்கையில் நடைபெற்ற பல முக்கியமான நிகழ்ச்சிகளின் காலத்தைப்பற்றி இந்நூலில் தவறாகக் குறிப்பிட்டிருக்கிறது. சில நிகழ்ச்சிகளும் சரித்திரத்திற்கு மாறுபட்டு காணப்படுகின்றன. பிருத்வீராஜின் அவையில் கவிஞராக விளங்கிய காஷ்மீரைச் சேர்ந்த கனிக் என்பவர் ஸம்ஸ்கிருதத்தில் 'பிருத்வீராஜவிஜய்' என்ற நூலை இயற்றியிருக்கின்றார். இந்நூலில் காணும் நிகழ்ச்சிகள் சரித்திரத்தை ஒட்டி வருகின்றன. இதைக் கொண்டே சில ஆராய்ச்சியாளர் பிருத்வீராஜராஸோவை பதினாறாவது நூற்றாண்டில் எழுதப்பட்ட ஒரு கற்பனைக் காப்பியமாகக் கருதுகின்றார்கள். ஆனால் மற்றும் சிலர் இதை பிருத்வீராஜின் காலத்திலேயே வாழ்ந்து வந்த சந்த் என்பவரின் நூலாகவே கொள்கின்றார்கள். அவர்கள் கூறும் காரணம் யாதெனில் இந்நூலில் காணப்படும் நிகழ்ச்சிகளைப் பற்றிய காலக் குறிப்புகள் ஒழுங்காக தொண்ணூறு ஆண்டுகள் வித்தியாசப்பட்டு காணப்படுகின்றன. இது பற்றி பண்டித் மோஹன்லால் விஷ்ணுலால் பாண்டியா என்பவர் இந்நூலிலிருந்தே ஓர் செய்யுளைச் சுட்டி ஏதோ காரணத்தினாலேயே இந்த வித்தியாசம் வைக்கப் பட்டிருக்கின்றது என்று நிரூபித்திருக்கின்றார்.

**एकादस सै पंचदह विक्रम साक अनंद।**
**तिहि रिपुजजय पुरहरन को भए पृथिराज नरिंद।।**

பிருத்வீராஜ விஜய என்ற ஸம்ஸ்கிருத நூலோடு ஒப்பிட்டு இந்நூலைக் கற்பனையாகக் கொள்வது சரியல்ல என்பதும் சிலருடைய கருத்தாகும். காப்பிய நயத்திற்காகவே சில நிகழ்ச்சிகள் திருத்திக் கூறப்பட்டிருக்கின்றன என்றும் இவர்கள் கருதுகிறார்கள். கோரி ஏழுமுறை படையெடுத்து பல தடவை பிருத்வீராஜிடம் தோற்று ஓடியதாக இந்நூலில் கூறப்பட்டிருப்பது சரித்திர உண்மைக்குப் புறம்பாயிருந்த போதிலும் முடிவில் காப்பியத் தலைவனான பிருத்வீராஜின் தோல்வியைப் பற்றி படிப்போர் உள்ளங்களில் தீவிர அனுதாபத்தை எழுப்புவதற்காக கவியின் சுதந்திரக் கற்பனையாக இருக்கக்கூடும் என்பது ஒப்புக் கொள்ளக் கூடியதே. இதை ஓர் வரலாற்று நூலாகக் கொள்ளாமல் காப்பிய நூலாகக் கொண்டு ஆராயுங்கால் கவியின் கற்பனைச் சுதந்திரத்தை நாம் மதிக்க வேண்டியிருக்கிறது. மேலும் இந்நூலில் காணும் போர்க்களக் காட்சிகளும், ஏனைய வர்ணனைகளும் வெறும் கற்பனையாகக் காணாது கண்களால் நேரில் கண்டு விரித்துக் கூறப்பட்டதாகவே காணப்படுகின்றன. நிகழ்ச்சிகள் நிகழ்காலத்தில் வருணிக்கப் பட்டிருப்பதும் கவி பிருத்வீராஜின் காலத்தில் இருந்தார் என்பதை நிரூபிக்கின்றது. இந்நூலில் அரபி, பார்ஸி சொற்கள் மலிந்து கிடப்பதற்குக் காரணம் ஒன்பதாவது நூற்றாண்டு முதலே முகம்மதியர்கள் வடநாட்டில் பரவியிருந்தார்கள் என்பதும், முக்கியமாக பஞ்சாபைச் சேர்ந்த லாகூரில் பிறந்து வளர்ந்த கவி சந்த் அரபி, பார்ஸி சொற்களை எடுத்துக் கையாண்டிருப்பதில் வியப்பொன்றுமில்லை என்பதுமேயாம். மேலும் இந்நூலின் மூலப்பிரதி கிடைக்கப் பெறாமல் வெவ்வேறு காலங்களில் தொகுக்கப்பட்டு இன்றுள்ள நிலையை அடைந்திருப்பதால் ஆங்காங்கே மொழியில் நவீனத்தன்மை காணப்படுவதும் இயற்கையே. இந்நூலைப் பற்றியும், இதைத் தீட்டிய கவி சந்தைப் பற்றியும் வேறுபட்ட கருத்துக்கள் வெளியிடப்பட்ட போதிலும் இந்நூலின் சிறப்புத்தன்மை பாதிக்கப்படவில்லை என்பதையே நாம் மனதில் கொள்ள வேண்டியதாகும்.

இவ்வீரப் பெருங்காப்பிய வரிசையில் பிருத்வீராஜ ராஸோவை அடுத்து 'ஜய மயங்க ஜஸ சந்திரிகா' என்ற இரண்டு நூல்கள் இடம் பெறுகின்றன. இவ்விரு நூல்களும் பிருத்வீராஜின் விரோதியும் கன்னௌஜின் அரசனுமான ஜய சந்தின் வீரத்தைச் சித்தரிக்கின்றன. இந்நூல்களை இயற்றியவர்கள் முறையே பட்டகேதார், மதுகர் என்ற கவிகளாவர். இந்நூல்கள் பூரணமாக நமக்குக் கிடைக்கவில்லை.

## ஹம்மீர் ராஸோ

கி.பி. 1300ல் இரணதம்போர் இராஜ்யத்தை ஆண்டு வந்த சௌஹான் வம்சத்தைச் சேர்ந்த ஹம்மீர் தேவ் என்பவரின் அவையில் கவிஞராக விளங்கிய சாரங்கதர் என்ற கவி 'ஹம்மீர் ராஸோ' 'ஹம்மீர் காவ்ய' என்ற இரு நூல்களை இயற்றியுள்ளார். ஹம்மீர் தேவ் அல்லாஉத்தீன் கில்ஜியை எதிர்த்துப் போர் புரிந்து வீரகதி அடைந்தார். இப்போரில் ஹம்மீர் தேவ் காட்டிய சரித்திரத்தில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட்டிருக்கின்றது. இப்போரில் இராஜபுத்திர வீரம் தன் கடைசி ஒளியை வீசி மறைந்தது என்றே கூறிவிடலாம். வெளிநாட்டிலிருந்து கடல் போல் பொங்கி வந்த முகம்மதியர்களின் ஆக்கிரமிப்பைத் தடுத்து நிறுத்தி ஹிந்து ஆட்சியை நிலைபெறச் செய்வதற்கான கடைசி முயற்சியாகும் இது. கவி சாரங்கதர் தக்க முறையில் இம்மாபெரும் வீரரின் தீரச் செயல்களைத் தன் நூல்களில் சித்தரித்திருக்கின்றார். இவர் ஸம்ஸ்கிருதத்தில் 'சாரங்கதர பத்ததி' என்ற நூலையும் எழுதியிருக்கின்றார். இதே காலத்தில் நால்ஹ என்ற கவியினால் "விஜயபால ராஸோ' என்ற நூல் எழுதப்பட்டது.

## ஆல்ஹா கண்ட்

தமிழ் நாட்டில் தேசிங்கு இராஜனின் வீரதீரபராக்கிரமச் செயல்களைப் புகழ்ந்து பல கிராமியப் பாடல்கள் பாடப்பட்டு

வருவதை நாம் அறிவோம். பம்பையை படபடவென்று தட்டிக் கொண்டு இப்பாடல்கள் செருக்குடன் பாடப்படும் பொழுது கேட்போர் உள்ளங்களில் வீரம் துடித்தெழுவதை யாவரும் உணர்ந்திருப்பார்கள். மூப்பினால் தளர்ச்சியுற்ற இரத்த நாளங்களிலும் இப்பாடல்களைக் கேட்குங்கால் புது முறுக்கு ஏறுவது திண்ணம். அதே போன்று இராஜபுதனத்தில் முக்கியமாக புந்தேல்கண்ட பகுதியின் ஒவ்வொரு கிராமத்திலும் ஆல்ஹறா, ஊதல் என்ற இரு வீரர்களின் தீரச் செயல்களைப் புகழ்ந்து மிடுக்குடன் பாடப்படுவதை மக்கள் சூழ்ந்து கேட்கக்காணலாம். தாய்மார்கள் தங்கள் குழந்தைகளைத் தொட்டிலிலிட்டு வீர உணர்ச்சியைப் புகட்டக் கூடிய இப்பாடல்களைப் பாடித் தாலாட்டுவது அங்கு காணப்படும் சாதாரண காட்சியாகும். ஆல்ஹறா, ஊதல் என்ற இவ்விரு வீரர்களும் மகோபாவை ஆண்டு வந்த சந்தேல் வம்சத்தைச் சேர்ந்த பரமர்தி தேவ் அல்லது பரமால் என்பவனின் படைத் தலைவர்களாவர். இவர்கள் பரமாலின் நண்பனும் கன்னௌஜின் அரசனுமான ஜயசந்தின் சார்பாகப் பல போர்களில் பங்கு கொண்டிருக்கிறார்கள். பிருதிவீராஜை எதிர்த்தும் இவர்கள் போர் புரிந்திருக்கிறார்கள். இப்போர்களில் இவர்கள் காட்டிய வீரத்தையே ஜகநிக் என்ற கவி பல பாடல்களில் பாடியிருக்கிறார். 'ஆல்ஹறாகண்ட்' என்ற நூல் வீர ரஸம் ததும்பும் இப்பாடல்களின் தொகுப்பேயாகும். இதை சந்தேல் வம்ச க்ஷத்திரியர்களின் வீரத்தைச் சித்தரித்து ஜக்நிக் எழுதிய 'பரமால் ராஸோ' என்ற மாபெருங்காப்பியத்தின் ஒரு பகுதியாகச் சிலர் கருதுகிறார்கள். இப்பாடல்கள் ஒன்றுக்கொன்று தொடர்பின்றி தனிப் பாடல் முறையில் அமைந்திருப்பதாலும் எழுதி வைக்கப்படாமல் பாடும் வழக்கிலேயே இருந்து வந்ததாலும் பெரிதும் உருமாறி மொழியினாலும், பொருளினாலும் நவீனத் தன்மை பெற்று விளங்குகின்றன. மக்களிடையே பெரிதும் பாடப்பட்டு வந்ததால் மூலத்தின் முழக்கம் எஞ்சியிருக்கின்றதேயன்றி

மூலத்தின் மொழி, சொற்றொடர்கள் காப்பாற்றப்படவில்லை. முதன் முதலாக கி.பி.1865ல் பதஹ்பூர் ஜில்லாவில் கலெக்டராக இருந்த சார்லஸ் எலியட் என்ற ஆங்கிலேயரின் மேற்பார்வையில் தாகுர்தாஸ் என்பவர் கன்னௌஜைச் சேர்ந்த மூன்று படிப்பற்ற பாடகர்களின் வாய்மொழியாகப் பாடக் கேட்டு இப்பாடல்களை நூல் வடிவில் தொகுத்தார். பின்னர் கி.பி. 1923ல் இந்நூல் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டு ஜார்ஜ் கிரியர்ஸன் அவர்களால் 'லே ஆப் ஆல்ஹா' என்ற பெயரால் வெளியிடப்பட்டது. ஆனாலும் இன்றும் தொழிற்பாடகர்கள் இப்பாடல்களைத் தங்கள் மனப் போக்கில் திரித்து மூலத்தின் எளிமை மாறாமல் பாடிச் செல்கிறார்கள். இவற்றால் மக்களிடைய இப்பாடல்கள் பெற்றுள்ள பெருமதிப்பைச் சற்றே உணரலாம்.

பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதியோடு வீரப் பெருங்காப்பியக் காலம் முடிவடைகிறது. பிற்காலத்திலும் அவ்வப்பொழுது வீர உணர்ச்சி ததும்பும் கவிதைகள் எழுதப்பட்ட போதிலும்கூட நாட்டில் போராட்டங்க்ள் முடிவடைந்து அமைதியான சூழ்நிலை ஏற்பட்டு விட்டதால் மக்களின் உள்ளங்களில் மட்டுமின்றி இலக்கியத்திலும் வீரம் நலிவு பெற்றது. பதினான்காம் நூற்றாண்டு முதல் பதினேழாம் நூற்றாண்டு வரையான காலத்தில் மக்களின் மனப் போக்கைப் பின்பற்றி கவிகளும் பக்தி, சிருங்காரம் போன்ற உணர்ச்சிகளைப் பெருமளவில் சித்தரித்து கவிதைகள் இயற்ற ஆரம்பித்தார்கள். இக்காலத்தை ஹிந்தி இலக்கியத்தில் 'பக்தி காலம்' என்று கூறுகிறோம். இக்காலத்தின் இலக்கிய நிலைபற்றி மேலே ஆராய்வோம்.



# பக்தி காலம்

பாரத நாட்டின் மீது முகம்மதியர்களின் படையெடுப்பு இந்நாட்டின் செல்வத்தைக் கொள்ளை கொள்ளும் நோக்கத்துடனும், இஸ்லாம் மதத்தைப் பரப்பும் எண்ணத்துடனும் ஒன்பதாம் நூற்றாண்டில் தொடங்கி பதினோராம் நூற்றாண்டில் வலுப்பெற்று, பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதிக்குள் வடநாடு முழுவதையும் அடிமை கொண்டது என்பதை வரலாற்று நூல் நமக்குக் கூறுகின்றது. அந்நியர்களின் கட்டுப்பாடான தாக்குதலுக்கு முன்னால் பாரதத்தின் சிதறுண்ட சக்தி நொறுங்கிச் சாய்ந்தது. இக்காலத்தில் பல ஹிந்து சாம்ராஜ்யங்கள் வீழ்ச்சியுற்றன, வீரத்தின் சிகரங்களெனத் திகழ்ந்த பல ஹிந்து பேரரசர்கள் முறியடிக்கப்பட்டார்கள், ஹிந்துக்களின் கோயில்கள் தகர்த்தெறியப்பட்டன. தெய்வச் சிலைகள் உடைக்கப்பட்டன, ஹிந்துமத குருமார்கள் இழிவுபடுத்தப்பட்டார்கள். இராஜ புத்திர அரசர்களை அண்டி அவர்களின் வீரத்தைப் பாடி வாழ்ந்த புலவர்கள் ஆதரவற்றவர்களாகி வாயடைத்து நின்றார்கள். ஒரு சில கவிகள் முகம்மதிய மன்னர்களை அண்டி வாழத் தொடங்கினார்கள். நாட்டின் இந்நலிவுற்ற அவல நிலையக் கண்டு மக்களும் மனம் வெதும்பி பரமனின் அருளே நாட்டையும் மதத்தையும் காக்க முடியும் என நம்பத் தொடங்கினார்கள். சமயத்துறையிலும் மதத்தின் உண்மைத் தத்துவத்தை உணராமல் மக்களில் ஒரு சாரார் சித்தர்களின் திருவிளையாடல்களைக் கண்டு மதிமயங்கி வேதங்கள் மற்ற சாத்திரங்களில் நம்பிக்கை குன்றியவர்களாய் சமய நெறிகளினின்றும் வழுவ ஆரம்பித்தார்களென்றால், மற்றொரு சாரார் உள்ளத் தூய்மையற்று, குருட்டு நம்பிக்கைகள், அர்த்தமற்ற பழக்க வழக்கங்கள், தெய்வவழிபாட்டில் உள்ளமற்ற ஆடம்பரமான விதிமுறைகள் ஆகியவைகளில் சிக்கி உழன்று கொண்டிருந்தார்கள். மக்களின் சோர்வுற்ற மனத்தில் புத்துணர்ச்சியை ஊட்டி மதத்தின் உண்மைக் கருத்துக்களை எடுத்துக்கூறி வாழ்க்கையில் உற்சாகங்

கொள்ளும்படியான மனநிலையை உருவாக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டிருந்தது. இதே காலத்தில் எட்டாம் நூற்றாண்டில் தென்நாட்டின்கண் தமிழ் பகுதியில் ஏற்பட்ட மாபெரும் சமயப் புரட்சியின் காரணமாகத் தோன்றிய பக்தி இயக்கம் வெள்ளமெனக் கரை புரண்டு சென்று வட நாட்டையும் ஆட்கொள்ள ஆரம்பித்தது. தமிழ் இலக்கியத்தில் சிவபக்தர்களான அறுபத்துமூன்று நாயன்மார்களும், வைஷ்ணவ பக்தர்களான பன்னிரெண்டு ஆழ்வார்களும் மிக உன்னதமான ஸ்தானத்தை வகிக்கின்றார்கள். ஹிந்தி இலக்கியத்திலும் வீரப் பெருங்காப்பியக் காலந்தொட்டே பக்தி ரஸம் ததும்பும் பாடல்கள் இயற்றப்பட்டுள்ளன. மைதில் கோகில் வித்யாபதி அவர்கள் ஜயதேவரின் கீத கோவிந்தத்தைத் தழுவி இராதாகிருஷ்ண பக்தி சம்பந்தமான 'பதாவலி' என்ற நூலை இயற்றினார். பிற்காலத்தில் விசிஷ்டாத்வைத மதத்தை ஸ்தாபித்த இராமானுஜாசார்ய அவர்களின் சிஷ்ய பரம்பரையில் வந்த ஸ்வாமி இராமானந்த் அவர்களும், ஸ்வாமி வல்லபாசார்ய அவர்களும் முறையே இராம பக்தி சம்பந்தமாகவும், கிருஷ்ணபக்தி சம்பந்தமாகவும் பல நூல்களை இயற்றினார்கள். இவ்வாறு வடநாட்டில் இராம பக்தி பரம்பரை, கிருஷ்ண பக்தி பரம்பரை என்று பக்தி மார்க்கத்தின் இரு பிரிவுகள் தோன்றி மக்களிடைய பரவ ஆரம்பித்தன.

கடவுளின் பல அவதாரங்களில் முக்கியமான இராமன், கிருஷ்ணன் இவர்களிடம் பக்தி பூண்டு ஒழுகும் ஸகுண பக்தி பரம்பரை நாட்டில் பரவி வந்த அதே காலத்தில் ஹிந்துக்கள் முகம்மதியர்கள் இவர்களிடையே வெறுப்புணர்ச்சியை நீக்கி ஒற்றுமையை வளர்க்கும் உயர்நோக்குடன் இரு சாராருக்கும் பொதுவான வழிபாட்டு முறையை வகுக்கும் திருப்பணியில் சிலர் முனைந்தார்கள். முகம்மதியர்கள் அரேபியா, பாரசீகம் போன்ற வெளிநாடுகளிலிருந்து ஆக்கிரமிக்கும் நோக்கத்துடன் விரோதிகளாக இந்நாட்டிற்கு வந்த போதிலும் இங்கு தங்கள் சாம்ராஜ்யத்தை நிறுவிக்கொண்ட பின்னர் தங்கள் நாடுகளை மறந்து இந்நாட்டிலேயே வசிக்க ஆரம்பித்து விட்டார்கள்.

இந்நிலையில் ஹிந்துக்களை விரோதித்துகொண்டு நிம்மதியாக வாழ்க்கை நடத்துவது முகம்மதியர்களுக்குக் கஷ்டமாக இருந்தது. வீரகாப்பிய காலத்திற்கு முன்பிருந்தே ஹிந்துக்களின் பிரம்மவாதத்தின் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு எழுந்த நாத சம்பிரதாயமானது பரமன் ஒருவனே என்ற இஸ்லாம் மதக் கொள்கைக்கு ஒப்ப அமைந்திருந்த காரணத்தினால் பல முகம்மதியர்களும் அச்சம்பிரதாயத்தை ஏற்று யோக சாதனையில் ஈடுபட்டார்கள். இதே காலத்தில் பாரசீகத்தில் தோன்றி வளர்ந்த ஸூஃபி சம்பிராதயமும் இந்நாட்டில் பரவ ஆரம்பித்தது. இஸ்லாம் மதத்தினின்றும் தோன்றிய இந்த ஸூஃபி சம்பிரதாயத்தின் கொள்கைகள் அன்பை அடிப்படையாகக் கொண்டு ஹிந்துக்களின் பிரம்மவாதத்தினாலும், ஸர்வேச்வர வாதத்தினாலும் பெரிதும் பிரபாவமடைந்திருந்த காரணத்தால் முகம்மதியர்கள், ஹிந்துக்கள் இருசாரரும் ஏற்கும் வகையில் அமைந்திருந்தன. இந்நிலையில் ஒப்பற்ற மனோபலமும், ஆத்மசக்தியும் வாய்ந்த மகான் கபீர்தாஸ் அவர்கள் தோன்றிய அக்காலத்தில் வழங்கி வந்த எல்லா மதக் கோட்பாடுகளின் சாரத் தத்துவங்களையும் இணைத்து ஞானத்தை ஆதாரமாகக் கொண்ட தன்னுடைய 'நிர்குண சம்பிரதாய'த்தை ஸ்தாபித்தார். இதை 'ஞானநெறி' அல்லது 'சந்த் சம்பிரதாயம்' என்று கூறுகிறோம். ஸூஃபி கொள்கைகளை இலக்கியத்தின் மூலம் மக்களிடையே பரப்பிவந்த முகம்மதிய கவிகள் 'அன்பு நெறியைச்' சார்ந்தவர்கள் என்று அழைக்கப்படுகிறார்கள். இவ்வாறு ஹிந்தி இலக்கியத்தின் பொற்காலமெனக் கருதப்படும் பக்தி காலத்தில் ஞானநெறி, அன்புநெறி, இராமபக்தி, கிருஷ்ண பக்தி இந்த நான்குவித வழிபாட்டு முறைகளின் ஆதாரத்தில் ஹிந்தி இலக்கியம் பூரண வளர்ச்சிபெற்றது. இவன் நான்கு பிரிவுகளின் இலக்கிய வளர்ச்சியைத் தனித்தனியே ஆராய்வோம்.



## ஞானநெறி அல்லது சந்த் சம்பிரதாய இலக்கியம்

தென்னாட்டிலிருந்து பொங்கி எழுந்த பக்திப் பெருக்கு பாய்ந்தாலும் வடநாட்டு மக்களின் மனோபூமி பண்பட்டதுடன் ஹிந்துக்களுக்கும், முகம்மதியர்களுக்குமிடையே பொதுவான ஓர் வழிபாட்டு முறை உருவாகி வளர்ச்சி பெற்றது. நாத வழி சம்பிரதாயத்தை சார்ந்தவர்கள் இதயமற்ற சாதனை முறைக்கு வழி (பந்த்) வகுத்திருந்தனர். ஆனால் அன்புணர்ச்சியற்ற சாதனைமுறை மக்களின் மனதிற்கு அமைதியையும், திருப்தியையும் அளிக்கவில்லை. மஹாராஷ்டிர தேசத்தைச் சேர்ந்த பிரசித்தி பெற்ற பக்தரான நாமதேவ் என்பவர் ஹிந்துக்களும், முகம்மதியர்களும் ஒருங்கே வழிபடக்கூடிய பக்தி நெறியை நிறுவியிருந்தார். ஆனால் பின்னர் சந்த் சம்பிரதாயத்தை நிறுவிய கபீர்தாஸ் மிகுந்த ஈடுபாட்டுடனும், ஆர்வத்துடனும் உருவமற்ற கடவுளை வழிபடும் நிர்குண சாதனை நெறியை நிலைநாட்டினார். அவர் வேற்றுமை யுணர்ச்சியை வளர்க்கும் வழிபாட்டு முறையிலுள்ள குற்றங் குறைகளை நீக்கி மனப்பக்குவத்தைப் பெரிதும் வலியுறுத் தினார். நாத யோகிகளின் பல கொள்கைகளையும் ஏற்றுக் கொண்ட போதிலும் அவர்களின் சாதனை முறையிலுள்ள இதயமற்ற தன்மை கபீர்தாஸின் உள்ளத்தை உறுத்தியது. ஆகவே அவர் உருவமற்ற கடவுளை எடுத்துக்காட்ட எவ்வாறு வேதாந்தக் கொள்கைளை ஏற்று கொண்டாரோ அவ்விதமே அக்கடவுளின் வழிபாட்டு முறைக்கு ஸூஃபிகளின் அன்பு நெறியையும் மேற்கொண்டார். இரண்டையும் பேதமறக் கலந்து மிகவும் சிறப்புடன் தனது நிர்குண சம்பிரதாயத்தை நிறுவினார்.

பாரதத்தின் பக்தி நெறியானது உருவமும், குணங்களுங் கொண்ட, மனிதன்போல் பிறப்பெடுத்து குற்றங்குறைகளைக் கடந்து உயர்ந்த மனிதத் தன்மையை இலட்சியமாகப் பரிபாலித்து கடவுட்தன்மையை அடையும் பரம்பொருளின் வழிபாட்டினையே முக்கியமாகக் கொண்டது. உருவமற்ற கடவுளை வழிபாட்டிற்கு உகந்ததாகவோ, அன்பு செலுத்து

வதற்குத்தகுந்ததாகவோ இந்நாட்டு மக்கள் கருதவில்லை. கபீர்தாஸ் தக்க சமயத்தில் நாத சம்பிராதயக்காரர்களால் நிறுவப்பட்ட யோகசாதனையினால் அன்பும், பக்தியும் அற்று சூன்யமடைந்து வரும் மக்களின் உள்ளப்போக்கை மாற்றியமைக்கும் ஒரு பெரிய காரியத்தைச் சாதித்தார். அவர் செய்த மகத்தான காரியங்களில் இது மிக மிகச் சிறந்ததாகும். இத்துடனின்றி மனிதத் தன்மையின் இயல்பான உணர்ச்சிகளுக்கு இடமளித்துத் தாழ்ந்த வகுப்பினருடைய உள்ளங்களில் தன்மான உணர்ச்சியைத் தட்டியெழுப்பினார். மேலும் பக்தியின் உயர்ந்த நிலையைத் அடைவதற்கு ஊக்கமளித்தார். கபீர்தாஸினால் நிறுவப்பட்ட இந்த நிர்குண சம்பிரதாயத்தில் நானக், தாதூ, மலூாக்தாஸ் முதலிய சிறந்த கவிகள் தோன்றினார்கள்.

சந்த் சம்பிரதாயத்தை நிறுவிய கபீர்தாஸ் அவர்கள் யோகிகளின் ஹடயோகத்தையும், ஹிந்துக்களின் பிரம்ம வாதத்தையும், இஸ்லாமின் பரமன் ஒருவனே என்ற பண்பாட்டையும் பக்தி நெறியின் தன்னையே தலைவனிடம் தன்மயமாக்கிவிடும் தன்மையையும், ஸுஃபிகளின் அன்புத் தத்துவத்தையும் கலந்து ஓர் புதிய வழிபாட்டு முறையை வகுத்தார். பொதுவாக இச்சம்பிரதாயத்தைச் சேர்ந்த சாதுக்கள் இரகசிய ஆதாரங்களைப் பழித்ததோடு வேற்றுமையை வளர்க்கும் செயல்களை வன்மையாகக் கண்டித்தனர். இவர்கள் சமூகத்திலும், தர்மத்திலும் காலத்திற்கேற்றபடி சீர்திருத்தங்கள் செய்யவேண்டியதின் அவசியத்தை வலியுறுத்தினார்; மேலும் தொன்றுதொட்டு வழக்கிலிருந்து வந்த வழிபாட்டு முறைகள் அர்த்தமற்றவை என்றும், ஆன்மாவை அறிவதற்குத் தக்க குருவை அடைதல் வேண்டுமென்றும், வாழ்க்கையில் பரிசுத்தத் தன்மை தேவை என்றும் பகிர்ந்தனர். இவ்வாறு எளிய பரிசுத்தமான நடத்தையின் மூலமும், புலன்களை அடக்கி ஆத்ம சிந்தனையின் மூலமும் நம்முள்ளத்திலேயே ஆத்மா, பரமாத்மா இரண்டையும் உய்த்துணர்ந்து பரம்பொருளைக் கண்டறியலாம் என்று இவர்கள் கூறினர்.

இந்த சந்த்கள் சாஸ்திரீய முறைப்படி யோகசாதனை விதிகளைக் கற்றிருக்கவில்லை. ஆனால், அவர்கள் சித்தர்களிடையேயும், நாதயோகிகளிடையேயும் வழங்கிவந்த பரிபாஷைகளை அறிந்து அவைகளைக் கையாள்வதில் திறமை பெற்றிருந்ததோடு குருட்டுப் பழக்க வழக்கங்களையும், சாதி வேற்றுமைகளையையும் அவர்களைப் போலவே கடுமையாகத் தாக்கி வந்தார்கள். வாழ்க்கையில் எளிமை, பரிசுத்தத் தன்மை, அடக்கம், சமத்துவம் இவற்றையே அவர்களை பிரச்சாரம் செய்து வந்தார்கள். ஆத்மஞானத்தைப் பெற குருவின் அருள் தேவை. குருவே தனது ஆத்ம சக்தியினால் புலன்களுக்குப் புலப்படாதவனாகவும், சொற்களுக்கு எட்டாதவனாகவும், நாம ரூப, குணங்களற்றவனாகவும் விளங்கும் அப்பரம் பொருளில் நம்மை ஐக்கியப்படுத்தி விடுகிறார் என்று அவர்கள் கருதினர். உருவற்ற பரமனைச் குறிப்பதற்கு சகுண வழிபாட்டு முறையிலிருந்து சில பெயர்களை ஏற்றத்துடன் பரமனைவிட பரமனைக் குறிக்கும் அப்பெயர்களுக்கு அதிக மதிப்பைத் தந்து நாமஜபத்தைப் பெரிதும் வலியுறுத்தினார்கள். பொன்னாசையும், பெண்ணாசையும் மனிதனை உலக வாழ்க்கையில் உழலவைக்கும் மாயைகள் என்றும், அவற்றைத் துறந்து சமாதி நிலையை கடைபிடித்தலே சாதுக்களின் குறிக்கோளாக இருத்தல் வேண்டுமென்றும், இதற்கு மன விகாரங்களை ஒழித்து உள்ளத்தில் அன்பை இருத்த வேண்டும் என்றும் போதித்து வந்தார்கள். பரம்பொருளிடம் பக்தி, உலகத்தின் சாரமின்மை, இந்திரிய சுகத்தின் அர்த்தமின்மை ஆகியவையே இவர்களது நூல்களின் அடிப்படை விஷயங்களாகும்.

கபீர்தாஸ் நிர்குண பக்தி பரம்பரையின் ஞான நெறியை ஸ்தாபித்தவர். இவர் தன் புதுமையான வழிபாட்டு முறையினாலும், முற்போக்கான கொள்கைகள் மூலமாகவும் தன்னுடைய காலத்தில் மிகுந்த ஆற்றல் பெற்றவராகவும்

தத்துவத்தில் தலைசிறந்தவராகவும், சீரிய சீர்திருத்தவாதியாகவும், வளம் பெற்ற வழிகாட்டியாகவும் விளங்கினார். ஆனால் இவரது பிறப்பு வளர்ப்பு பற்றிய ஆதாரபூர்வமான தகவல்கள் கிடைக்கப் பெறவில்லை. ஆயினும் அவர் கி.பி. 1398ல் காசியில் அவதரித்ததாகவும். கி.பி. 1518ல் மகஹர் என்னுமிடத்தில் உயிர் நீத்ததாகவும் அறியப்படுகிறது.

கபீர்தாஸ் ஓர் பிராமண விதவைக்குப் பிறந்ததாகவும், பழிச் சொல்லுக்கு அஞ்சி தாய் தன் மகனை 'லஹர் தாலா' என்ற குளத்தின் கரையில் விட்டுச் செல்ல, அவ்வழிச் சென்ற முகம்மதிய நெசவாளியான நீமா அழுகுரல் கேட்டு அக்குழந்தையை எடுத்துச் சென்று தன் மனைவி நீருவிடம் கொடுத்து மகவற்ற இருவரும் பெருமகிழ்ச்சி கொண்டு தன் மகனாகவே கருதி வளர்த்து வந்ததாகவும் ஓர் வதந்தியுள்ளது. ஆனால் ஆராய்ச்சியாளர் இதைக் கட்டுக் கதையாகவே கருதுவதுடன் கபீர்தாஸ் தன் பிறப்பைப் பற்றி யாதொன்றும் கூறாது தன்னை ஒரு நெசவாளி என்று மட்டும் கூறியுள்ள காரணத்தால் அவரை முகம்மதிய மரபில் தோன்றியவராகவே கொள்கிறார்கள்.

கபீர்தாஸ் தன் இளம் வயதிலிருந்தே விரக்தியுடன் உலக இன்பங்களில் பற்றற்றவராயிருந்து வந்ததோடு மக்களிடையே மதசம்பந்தமான கருத்துக்களைப் பிரச்சாரம் செய்ய ஆரம்பித்துவிட்டார். ஆனால் குருவிடம் உபதேசம் பெறாத நிலையில் அவருக்கு அதிக மதிப்பு ஏற்படவில்லை. ஆகவே அவர் அக்காலத்தில் மக்களால் பெரிதும் போற்றப்பட்டு வந்த சிறந்த வைஷ்ணவ பக்தரான இராமானந்தர் அவர்களைத் தன் குருவாக அடைய விரும்பினார். சிறந்த வைஷ்ணவ பக்தரான இராமானந்தர் ஒரு முகம்மதியரை சீடராக ஏற்றுக் கொள்ள மறுத்துவிடுவார் என்ற அச்சத்தினால் அவர் ஒரு நாள் இரவிலேயே கங்கைக் கரையை அடைந்து 'பஞ்ச கங்காகாட்' என்ற துறையில் ஒரு படியில் படுத்துக் கொண்டுவிட்டார்.

ஸ்நானம் செய்வதற்காக இராமானந்தர் அதிகாலையில் அத்துறையை அடைந்த பொழுது கபீரின் மீது கால் பட்டுவிடவே அவர் வாயிலிருந்து 'ராம் ராம்' என்ற சொற்கள் கிளம்பின. இச்சொற்களையே குருவின் உபதேசமாகக் கொண்டு கபீர்தாஸ் அன்று முதல் இராம நாமத்தை ஜபிக்க ஆரம்பித்தார். சிலர் சேக் தகீ என்பவருடைய சீடராக இவரை மதிக்கின்றனர். கபீர்தாஸோ தன்னுடைய நூல்களில் தன் குருவாக யாரையுங் கூறாமல் தன்னுடைய விவேகத்தையே குருவாகக் கூறியிருக்கின்றார். ஆனாலும் ஆங்காங்கே இராமானந்தரைப் பற்றியும், சேக் தகி என்பரைப் பற்றியும் மிக்க மரியாதையுடன் கூறியிருக்கின்றார். சேக் தகியைவிட இராமனந்தரிடம் அதிக மதிப்பைக் காட்டியிருப்பதாலும், இராமநாமத்தைத் தாரக மந்திரமாக ஏற்றுக் கொண்டிருப்பதாலும் இராமானந்தரையே இவருடைய குருவாகக் கருத வேண்டியிருக்ககிறது. கபீர்தாஸ் பள்ளியில் பயின்றவரல்ல தனது படிப்பின்மையை இவரே ஓரிடத்தில் குறிப்பிட்டிருக்கிறார். 'மசி' காகிதத்தைத் தொட்டவனல்ல, "பேனா பிடித்தறியேன்". படிப்பறிவில்லாமலேயே இவர் சிறந்த ஞானியாக விளங்கினார். சாதுக்களின் சேர்க்கையால் இவர் சிறந்த அறிவைப் பெற்றார்.

கபீர்தாஸ் சரியான நேரத்தில் செய்யும் வகையறியாது வாடிநின்ற மக்களுக்கு வாழ வழிகாட்டினார். இவருடைய நிர்குண பக்தியானது வேதாந்தத்தின் அறிவுப் பகுதியையும். ஸூஃபிகளின் அன்பு வழியையும் கொண்டு நிறுவப்பட்டது. அதில் வைஷ்ணவர்களின் அஹிம்ஸா வாதமும் அடங்கியுள்ளது. இவ்விதம் கபீர் யாவரும் ஏற்றுக் கடைப்பிடிக்கத்தக்க முறையில் தன்னுடைய கொள்கைளை உபதேசித்தார். சாதி வேற்றுமைகளையும், பழங்கால பழக்க வழக்கங்களையும் இவர் வன்மையாகக் கண்டித்தார். முகம்மதியாராயினும் சரியே. ஹிந்துக்களாயினும் சரியே. எங்கு இவர் குறுகிய மனப்பான்மையைக் கண்டாலும் சுடச்சுட

இடித்துக் காட்டுவார். ஹிந்துக்களின் உருவ வழிபாட்டையும், ஆசாரத்தையும், முகம்மதியர்களின் சிகை நீக்குதலையும் நமாஸ் படித்தலையும் இவர் பரிஹஸித்துள்ளார். ஆண்டவன் உள்ளும் புறமும், எங்கும் எதிலும் நிறைந்து நிற்பவன்: அவனைப் புனிதமான அன்பினால்தான் பெறமுடியும் என்பதே இவரது கொள்கை.

கல்வியறிவு இல்லாவிடினும் இவரது நூல்களில் ஆங்காங்கே அணிச் சிறப்பையும் சொல் நயத்தையும் நாம் காணலாம். நாட்டின் பல்வேறு இடங்களுக்கும் யாத்திரை செய்து வெவ்வேறு மொழிகள் பேசும் மக்களுடன் தொடர்பு கொண்டிருந்த காரணத்தால் இவருடைய பாடல்களில் பல மொழிச் சொற்களும் இடம் பெற்றுள்ளன. இவருடைய பாஷையை 'சதுக்கடி' அதாவது 'சாதுக்களுடைய பாஷை' என்று கூறுவர்.

கபீர்தாஸின் உபதேசங்கள் 'பீஜக்' என்ற நூலில் தொகுக்கப்பட்டுள்ளன. இருபதினாயிரம் செய்யுட்கள் கொண்ட அறுபத்தோரு நூல்கள் இவரால் இயற்றப் பட்டதாகக் கூறப்படுகிறது. இவற்றுள் கீழ்க்கண்ட நூல்கள் முக்கியமாகக் கருதப்படுகின்றன. 'அனுராக ஸாகர்', 'உக்ர கீதா', 'ஸாகீ', 'நிர்பயக்ஞான்', 'சப்தாவளீ', 'ஞான ஸாகர்', 'ரமைனீ'. கபீர் சம்பிரதாய நூலான 'காஸ் கிரந்த்' என்பதில் கபீர்தாஸின் இருபத்தோரு நூல்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

இவரது மரணத்திற்குப் பின் நிகழ்ந்த ஓர் நிகழ்ச்சியானது ஹிந்துக்கள், முகம்மதியர்கள் இருவர்களிடையேயும் இவருக்கு இருந்த பெரு மதிப்பைக் காட்டுகின்றது. இவர் மாண்டபின் இவர் சடலத்தை ஹிந்துக்கள் தங்கள் முறைப்படி தகனம் செய்ய வேண்டுமென்று விரும்பினார்கள். முகம்மதியோர்களோ தங்கள் வழக்கப்படி சடலத்தைப் புதைக்க வேண்டுமென்று கூறினர். இருதரப்பாருக்கும் நீண்ட நேரம் விவாதம் நடைபெற்றது. கடைசியில் சடலத்தின் மீது போர்த்தப்

பட்டிருந்த துணி நீக்கப்பட்டதும் இரு சாராரும் வியப்புற்றுத் திகைத்து நின்றனர். அங்கு சடலத்திற்குப் பதில் புஷ்பக் குவியலே இருந்தது. இதைக்கண்டு அவர்கள் தங்கள் தவறையுணர்ந்து அம்மலர் குவியலைத் தங்களுக்குள் பகிர்ந்து கொண்டு தங்கள் வழக்கப்படி கபீர்தாஸின் ஈமச்சடங்களை நிறைவேற்றி மனதைக் கவர்ந்து 'எம்மதமும் சம்மதமே' என்ற சீரிய கருத்தினை மக்களுக்குப் புகட்டிவந்தார் என்பது தெள்ளென விளங்குகிறது.

ரைதாஸ் : இவரும் இராமாநந்தரின் சிஷ்யராவார். இவர் சாதியில் சக்கிலியர். இவரை மீராபாயின் குரு என்றும் கூறுகிறார்கள். இவருடைய பாடல்கள் சீக்கியர்களின் மத நூலான குருக்ரந்தஸாஹிப் என்னும் புத்தகத்தில் தொகுக்கப்பட்டுள்ளன.

குருநானக் : இவர் கி.பி. 1583ம் வருடம் லாகூர் ஜில்லாவிலிருக்கும் தல்வண்டி என்னும் கிராமத்தில் தோன்றினார். இவரது தந்தையின் பெயர் காலராம். இவர் கத்திரி வகுப்பைச் சேர்ந்தவர். குழந்தைப் பருவத்திலிருந்தே இவரது மனம் கடவுள் பக்தியில் லயித்து விட்டது. பிறகு இவர் இல்லற வாழ்க்கையைத் துறந்து துறவு வாழ்க்கையை மேற்கொண்டார். இவரால் தோற்றுவிக்கப்பட்ட பக்திநெறி 'சீக்கிய சம்பிரதாயம்' என்று கூறப்பட்டது. இவரது சீடர்கள் உலக இன்பங்களை வெறுத்து, இந்தியாவின் கௌரவத்தை நிலை நாட்டுவதற்காக அந்நியர்களை வீரமுடன் எதிர்த்து நின்றனர். நானக் மிகவும் தெள்ளிய நடையில் தனது உபதேசங்களை வெளியிட்டுள்ளார். இவரது கூற்றில் ஆத்ம ஒளி வீசுகின்றது. தேசத்தின் ஒற்றுமைக்காகப் பாடுபட்ட இப்பெரியார் கி.பி. 1653ல் பரலோகமடைந்தார்.

தர்மதாஸ்: இவர் கபீருடைய முக்கிய சீடர்களுள் ஒருவர். கபீருக்குப் பிறகு அவரது குரு பீடத்தை அலங்கரித்தவரும் இவரே ஆவர். இவருடைய பிறப்பைப்

பற்றிய நிச்சயத் தகவல் யாதும் கிடைக்க பெறவில்லை. ஆயினும், இவர் கி.பி. 1512ல் பிறந்ததாகக் கருதப்படுகிறது. இவர் சிறந்த செல்வச் சூழ்நிலையிலே பிறந்து வளர்ந்தனர். ஆரம்பத்தில் சகுண உபாஸனையில் தான் இவரது சிந்தை சென்றது. கபீரைச் சந்தித்த பிறகு இவர் கபீரது சீடராக ஆனதாகவும், அவரது மரணத்திற்குப் பிறகு அவரது உபதேசங்களைத் தொகுத்து நூலாக வெளியிட்டதாகவும் கூறப்படுகிறது. இவரால் இயற்றப்பட்ட நூல்களில் 'சுகநிதான்' சாலச் சிறந்ததாகக் கருதப்படுகிறது.

தாதூதயால் : இவர் குஜராத்திலுள்ள அகமதாபாத்தில் பிறந்தார். கபீரைப் போன்றே இவரும் தன் பெயரால் ஓர் சம்பிரதாயத்தைத் தோற்றுவித்தார். இவரது கொள்கையைப் பின்பற்றுவோர் 'சத்த நாம்' என்று கூறி அரூபனான அனந்தனை வழிபடுவர். இவருடைய உபதேசங்கள் ஹிந்தியில் மட்டுமின்றி குஜராத்தி, பஞ்ஜாபி ஆகிய மொழிகளிலும் உள்ளன.

சுந்தரதாஸ்: இவர் கி.பி. 1710ல் ஜயபூர் இராஜ்யத்திலுள்ள தௌஸா என்னும் ஊரில் பிறந்தார். இவர் ஏனைய சந்த கவிகளைப் போன்று படிப்பறிவற்றவர் அல்ல. இவர் காப்பிய நயங்களை நன்கு அறிந்திருந்தார். 'சுந்தர விலாஸ்' என்பது இவரால் இயற்றப்பட்ட பிரசித்தமான புத்தகம். இதையன்றி இவர் 'சித்ர–காவ்ய', 'சத்ர ப்ரபந்த்', 'தூமல் ப்ரபந்த்' 'நாக பந்த்' ஆகிய காவியங்களையும் இயற்றியுள்ளார். இப்புத்தகங்கள் இவரது காப்பிய நயத்திற்கு எடுத்துக்காட்டாய் அமைந்துள்ளன.

மலூக்தாஸ் : இவர் இலஹாபாத்தைச் சேர்ந்த கடா என்னும் கிராமத்தைச் சேர்ந்தவர். ஏனைய கவிகளைக் காட்டிலும் இவரது பாஷை சிறந்ததாக உள்ளது. இவர் இயற்றிய நூல்கள் 'ரத்னகான்', 'ஞானபோத்' என்பவையாகும்.

**அக்ஷர அனன்ய:** இவர் ததியா சமஸ்தானத்தைச் சேர்ந்த ஸேனுஷரா என்னும் கிராமத்தைச் சேர்ந்த காயஸ் பிராமண வகுப்பைச் சார்ந்தவர். இவர் கி.பி. 1767ல் பிறந்ததாகக் கருதப்படுகிறது. சில காலம் இவர் ததியாவின் அரசனான பிருத்விசந்தின் திவானாகப் பணியாற்றி வந்தார். சின்னாட்கள் சென்ற பின்னர் இவர் துறவு வாழ்க்கை மேற்கொண்டார். மகாராஜா சத்ரஸால் இவரிடம் தீக்ஷை பெற்றதாகவும் வரலாறு கூறுகிறது. இவர் யோகத்தைப் பற்றியும், வேதாந்தத்தைப் பற்றியும் பல நூல்கள் இயற்றியுள்ளார். அவற்றின் 'ராஜயோக்', 'விஞ்ஞான யோக்', 'த்யான யோக்', 'சித்தாந்த போத்', 'ப்ரம்மஞான்' முதலியவை குறிப்பிடத்தக்கவை. இவர் 'துர்கா ஸப்தசதி'யைச் செய்யுள் நடையில் மொழி பெயர்த்துள்ளார். சந்த் கவிகளுக்குள்ளேயே இவர் கல்வி அறிவிலும் சாஸ்திர அறிவிலும் மேம்பாட்டு விளங்கினார்.

**சந்த் பாபாலால் :** இவர் மாலவப் பிரதேசத்தைச் சேர்ந்தவர். இவர் கத்ரி வகுப்பைச் சேர்ந்தவர் என்றும், தன்னுடைய பத்தாவது வயதிலே துறவறம் பூண்டதாகவும் கூறப்படுகிறது. இவரது குரு பாபா சேதன் என்பவர்.

**ப்ராணநாத் :** ப்ராணநாத் கி.பி. 1732ல் காடியாவாடைச் சேர்ந்த ஜாம்நகர் என்னுமிடத்தில் ஓர் க்ஷத்திரியக் குடும்பத்தில் தோன்றினார். சிறு வயதிலிருந்தே இவர் சாதுக்களின் சேர்க்கையை நாடினார். தேவசந்த் என்பவர் இவருக்கு ஆன்மீக நெறியில் செல்ல ஊக்கமூட்டினார். இவர் சிலகாலம் சத்ரஸாலின் அரண்மனையில் தங்கியிருந்தார். பிறகு இவர் பல இடங்களிலும் சுற்றி மக்களுக்குச் சிறந்த ஆதர்சங்களை போதித்தார். இவரது சம்பிரதாயம் 'தாமீ சம்பிரதாயம்' என்னும் பெயரால் பிரசித்தி பெற்று விளங்கியது. இவரால் இயற்றப்பட்ட நூல்கள் 14 என்று கருதப்படுகிறது. அவை 'ராம க்ரந்த்' 'ப்ரகாஷ் க்ரந்த்' 'ஷட்ருது', 'கலஸ்' 'சம்பந்த்', 'கிரதன்', 'குலாஸ்', 'கேல் பாத்', 'ப்ரகரண் இலாஹீ துல்ஹன்', 'ஸாகர் கயாமத் நாமா' என்பவையாம்.

ஜகஜீவன் தாஸ்: சந்த் கவிகளுள் மிகவும் சிறப்புடன் விளங்கிவர் பாராபங்கி ஜில்லாவில், ஸாதஹா கிராமத்தில் ஸரயூ நதிக்கரை அருகிலுள்ள கோட்வாவிற்கு இரண்டு கல் தொலைவிலுள்ள ஓர் இடத்தில், க்ஷத்திரியக் குடும்பத்தில் பிறந்தார். இவர் விஸ்வேஸ்வர் பூரி என்பவருடைய சீடர். இவரால் இயற்றப்பட்ட நூல்கள் 'சப்த ஸாகர்' 'ஞான ப்ரகாஷ்' 'ப்ரதமகாந்த்' 'ஆகம் பத்ததி', 'மஹா ப்ரலய்', 'ப்ரேம காந்த்', 'அகலிநாஷ்' முதலியவையாகும்.

தரணீதாஸ் – தரணீதாஸ் கி.பி.1689ல் மாஞ்ஜீ ஜில்லாவில் ஸவவாரன் என்னுமிடத்தில் ஒரு காயஸ்த குடும்பத்தில் பிறந்தார். சிறு வயதிலேயே இவரது உள்ளத்தில் துறவு மனப்பான்மை துளிர்த்தது. பின்னர் இவர் விவேகானந்தரின் சீடரானார். 'ரத்னாவளி' என்னும் புத்தகத்தில் இவர் தன்னுடைய குருவைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இவரால் இயற்றப்பட்டப் பிரசித்தி பெற்ற நூல்கள் 'பிரேம ப்ரகாஷ்' 'சப்த ப்ரகாஷ்', 'ரத்னாவளி' என்பவையாகும்.

தரியாதாஸ் – தரியாதாஸ் கி.பி. 1788ல் தோன்றினார். இவர் 106 வருடங்கள் உயிர் வாழ்ந்தார் என்று கூறப்பட்டுள்ளது. இவர் இயற்றிய நூல்கள் 'ப்ரேம மூல்'. 'ஞானரத்ன', 'பக்தி ஹேது', 'மூர்த்தி உகாட்', 'சப்த', 'ஞானஸ்ரோதய', 'விவேக ஸாகர்', 'தரியா ஸாகர்', 'ஞான தீபக்', 'ப்ரஹ்ம விவேக்', 'அமர் ஸார்', 'நிர்பய ஞான்', 'ப்ரஹ்ம விவேக்', 'அமர் ஸார்', 'நிர்பய ஞான்', 'ஸகஸ்ராணி', 'ஞான ஞானமூல்', 'யக்ஞ ஸமாதி' முதலியவை. இவரது நெறிமுறைகள் அதிகமாகப் பரவிய இடங்கள் பீஹாரும், உத்திரப் பிரதேசமுமாகும்.

இவர்களைத் தவிர ஞான நெறியில் தோன்றிய கவிகளில் பல்டூதாஸ், தோம்பர் தாஸ், தரியா ஸாஹப், துலஸீ ஸாஹப், பீகா ஸாஹப் முதலியவர்கள் சிறந்து விளங்கினார்கள். இலக்கியக் கண்கொண்டு நோக்குங்கால் இவர்களால்

இயற்றப்பட்ட நூல்கள் மேம்பட்டு விளங்காவிடினும், ஹிந்து–முஸ்லீம் என்ற வேற்றுமை உணர்ச்சியை மக்களின் உள்ளங்களிலிருந்து விரட்டி, அனைவரையும் அன்பில் ஆழ்த்தின. கீழ்வகுப்பு மக்கள் இவர்களால் அதிகப் பயனைப் பெற்றனர். நலிந்து, மெலிந்த உள்ளங்களில் உற்சாகமூட்டி ஊக்குவித்தனர் இந்த கவிஞர்கள். இதனால் ஹிந்தி இலக்கிய வரலாற்றில் இவர்களுக்கும் சிறந்த இடமுண்டு. இவர்களது நோக்கம் காப்பியங்கள் இயற்றுவதல்ல. அதனால் காவிய சாஸ்திர உரைகல்லில் உரைத்துப் பார்க்கும்போது இவர்களது காவியங்கள் மாற்றுக் குறைந்து தோன்றினாலும், பாவனை, பக்தி என்னும் உரைகல்லில் உரைத்துப் பார்க்குங்கால் இவர்களது நூல்கள் உயர்ந்து சிறந்து விளங்குகின்றன.



# அன்பு நெறி அல்லது ஸூஃபி சம்பிரதாய இலக்கியம்

பாரத நாட்டிலே முகலாயர்களுடைய ஆதிக்கம் நிறுவப்பட்டதும் ஹிந்துக்களும், முகம்மதியர்களும் ஒருங்கே ஆழ்ந்த அன்பை வளர்க்கப் பெரிதும் அவாவுற்றனர். அதிகார வர்க்கத்தினரில் ஒரு சாரார் அடிமைத்தளையில் பிணைக்கப்பட்டிருந்த இந்தியர்களுக்கு ஒன்று தங்களது முகலாய மதத்தை ஏற்க வேண்டும் அல்லது மரணத்தைத் தழுவவேண்டும் என்று ஆணையிட்டனர். ஆனால் மற்றொரு சாரார் ஹிந்துக்களை அவர்கள் வழியில் செல்லவிட்டு நாட்டில் அமைதியையும் அன்பையும் நிலை நாட்டினர். அப்படிப்பட்ட முகலாய அரசர்களில் ஷேர்ஷாஹ் குறிப்பிடத்தக்கவர். ஒருபுறம் அவர் ஸூஃபி மதத்தை அனுசரித்து வந்தாலும், ஹிந்துக்களுடைய தர்மத்தையும், அவர்களது பண்பட்ட பழக்க வழக்கங்களையும், உயரியக் கருத்துக்களையும் பெரிதும் ஆதரித்தார். முக்கியமாகப் பிரேம காவியங்கள் இஸ்லாமியர்களையும், ஹிந்துக்களையும் இணைக்கும் அன்புப் பாலமாக அமைந்தது.

இந்தியாவில் முகலாயர்களுடைய அரசாட்சி நிறுவப் பட்ட பிறகு அவர்களை இந்நாட்டிலிருந்து வெளியேற்றுவது இயலாத காரியமாயிருந்தது. அதைப் போன்றே முகம்மதியர்களுக்கும் ஹிந்துக்களைப் பூண்டுடன் அழித்து ஓர் புதிய இராஜ்ஜியத்தை நிறுவுதல் என்பதும் இயலாத செயலே. இருவரும் தமக்கிடையே வெறுப்பையும், வேற்றுமை உணர்ச்சியையும் வளர்த்துக்கொண்டு அமைதியாக வாழ்வது எங்ஙனம்! ஆகவே இருசாராருக்கும் இடையே அன்பும், அமைதியும் உண்டாக்க வேண்டிய தேவையை அனைவரும் உணர்ந்தனர். இந்நேரத்தில் தான் சில முகமதிய கவிகள் அன்பெனும் ஆழ்ந்த, அசைக்க முடியாத ஆதாரத்தைக்

கொண்டு இலக்கிய வானில் அவதரித்தனர். அவர்கள் ஹிந்துக்களிடையே பலகாலமாகப்பரவி இருந்த புராணக் கதைகளுடன் தங்களது கருத்துகளையும் புகுத்தி சிறந்த காவியங்களை இயற்றினார். இவர்கள் தங்களது உயரிய கதைகள் மூலம் மக்களின் மனதிலே படிந்த மாசைத் துடைத்து அவர்களது இதய வீணையில் அன்பு நாதத்தை எழுப்பினர். இவர்கள் ஹிந்துக்களின் வாழ்க்கையிலேயுள்ள உயர்ந்த பண்பாடுகளையும், தங்களது உதாரமான இதயத்தையும் திரட்டி, மக்களிடையே புழக்கத்திலிருந்த அவதி பாஷையிலேயே காவியமாக்கித் தந்தனர்.

இந்த பிரேம காவியங்களைப் பற்றிய விவரம் நமக்கு சாரணக்கவிகளின் காலத்திருந்தே கிடைக்கின்றன. இங்கு கொடுங்கோல் மன்னனான அலாவுதீன் கில்ஜி அரசாண்டு கொண்டிருந்த பொழுதே முல்லா தாஊத் என்பவர் 'சத்தாவத்' என்னும் நூலை இயற்றியதாக வரலாறு விளம்புகின்றது. அக்காலத்திலேயே ஹிந்துக்களிடம் அன்பு பூண்ட முகம்மதியர்கள் இந்நாட்டில் இருந்தனர்.

முல்லாதாஊதைத்தான் நாம் இப்பரம்பரையின் முதற்கவியாகக் கொள்ளவேண்டும். இவருக்குப் பிறகு பல கவிகள் தோன்றினார்கள். ஆனால் அவர்களில் ஜாயஸிதான் அதிகப் பேரும்புகழும் பெற்று விளங்கினார். ஜாயஸியின் பத்மாவத்துக்கு முன்பே ஸ்வப்னவதி 'முக்தாவதி', 'மிருகாவதி', 'கண்டராவதி', 'மதுமாலதி', 'பிரேமாவதி', போன்ற பல நூல்கள் இயற்றப்பட்டன. இப்பரம்பரையில் தோன்றிய கவிகள் அனைவருமே தங்களது நூலை பாமரமக்களும் உய்ந்துணரும் வகையில் பேச்சு வழக்கிலிருந்த 'அவதி' பாஷையிலேயே இயற்றினர்.

குத்பன் – இவர் சிஷ்தி சம்பிரதாயத்தைச் சார்ந்த ஷேக்புரஹன் என்பவரின் சீடர். இவர் கி.பி. 1501ல் தனது பிரசித்தி பெற்ற நூலாகிய 'மிருகாவதி'யை இயற்றினார்.

இவருக்கு முன்பே முல்லா தாஊத் என்பவரால் 'சந்தாவத்' என்னும் நூல் இயற்றப்பட்டிருந்தபோதிலும் அது தற்போது கிடைக்கப் பெறாததால் குதுபனின் மிருகாவதியைத்தான் இப்பரம்பரையின் முதற்காவியமாகக் கருதுகிறார்கள்.

இதன் கதை பின்வருமாறு:-

சந்திரகிரியை ஆண்டுவந்த மன்னனான கணபதிதேவ் என்பவரின் புதல்வன், கஞ்சனநகரை ஆண்டு வந்த ரூபமுராரி என்பவரின் மகளான மிருகாவதி என்பவளின் அழகினைக் கேள்வியுற்று மையலுற்றான். இந்த அரசகுமாரி ஆகாயத்தில் பறந்து செல்லும் வித்தையை அறிந்திருந்தாள். பற்பல இன்னல்களுக்கு இலக்காகி அரசகுமாரன் மிருகாவதியின் அரண்மனையை அடைந்தான். ஆனால் ஒருநாள் அவனை ஏமாற்றிவிட்டு மிருகாவதி எங்கோ பறந்து சென்று விட்டாள். அரச குமாரன் அவளைத் தேடி அலைந்துகொண்டு செல்லும் போது ஆழ்கடலால் சூழப்பட்ட ஓர் மலைப் பிரதேசத்தை அடைந்தான். அங்கு ருக்மிணி என்னும் அழகியை கொடிய இராட்சதன் ஒருவனிடமிருந்து காப்பாற்றினான். இதனால் இன்புற்ற அவளது தந்தை ருக்மிணியை அவனுக்கே மணமுடித்தார். மிருகாவதியை தேடிக்கொண்டு அரசகுமாரன் கடைசியாக அவள் அரசுபுரியும் நாட்டிற்கே போய்ச் சேர்ந்தான். அங்கு அவன் பன்னிரண்டு ஆண்டுகள் தங்கி இருந்தான். பிறகு தன் தந்தையின் அழைப்பைப் பெற்று அவன் மிருகாவதியையும், ருக்மிணியையும், அழைத்துக்கொண்டு தனது நாட்டை அடைந்து ஆனந்தமாக அரசாண்டு வந்தான்.

மஞ்சன் – இவரது பிறப்பு, வளர்ப்பைப் பற்றிய யாதொரு விஷயமும் விவரமாக விளக்கப்படவில்லை. இவரால் இயற்றப்பட்ட 'மதுமாலதி' என்னும் நூலிலிருந்து இவரது மென்மையான கற்பனையையும், உயரிய உள்ளத்தையும் அறிய முடிகிறது. மிருகாவதியைக் காட்டிலும் இந்நூலின் கற்பனைக் கனிவும், வர்ணனை வனப்பும் நயம்பட அமைந்துள்ளது.

இதன் கதை பின் வருமாறு :-

கனேஸர் நகரின் அரசனான சூரஜ்பானின் புதல்வனான மனேஹர் ஒருநாள் நிலா முற்றத்தில் நித்திரையிலாழ்ந்திருக்கும் போது வானுலக மங்கையர்கள் அவனை எடுத்துச் சென்று மஹாரஸ் நகரின் அரசகுமாரியான மதுமாலதியின் சித்திரச் சாலையில் விட்டு விடுகின்றனர். விழித்தெழுந்ததும் ஒருவரை ஒருவர் கண்டு காதல் கொள்கின்றனர். அன்புப் பெருக்கினால் இன்புற்ற இருவரும் நீண்டநேரம் அளவளாவிக் கொண்டே மீண்டும் துயில் கொள்கின்றனர். வானுலக மங்கையர்கள் அரசகுமாரனை முன்போலவே அவனது அரண்மனை நிலா முற்றத்தில் விட்டு விடுகின்றனர். துயில் கலைந்து காலையில் எழுந்ததும் இருவரும் ஒருவரை ஒருவர் நினைத்து ஏக்கமுற்றனர். பிரிவாற்றாமையைத் தாளமுடியாத அரசகுமாரன் வீடுவாசலைத் துறந்து தன் காதலியைத் தேடிக் கொண்டு கடல் வழியே பயணமானான். கடலைக் கடந்து கரை சேர்ந்த அவன் ஓர் கானகத்தை அடைந்தான். அங்கு மஞ்சத்தில் படுத்துறங்கும் மங்கையொருத்தியைக் கண்டான். அவள் சிதபிஸராம்பூரின் அரசஞன சித்திரசேனனின் மகள் பிரேமா என்றும், ராக்ஷஸன் ஒருவனால் கவரப்பட்டு அங்கு கொண்டுவரப்பட்டுள்ளாள் என்றும் அறிந்தான். அக்கொடிய அரக்கனைக் கொன்று அவன் பிரேமாவைக் காப்பாற்றினான். பிரேமா அரசகுமாரனின் வரலாற்றை அறிந்துகொண்டு மதுமாலதி தனது தோழி என்றும், அவள் இருக்குமிடத்தை தான் காட்டுவதாகவும் கூறி அவனைத் தனது தந்தையிடம் அழைத்துச் செல்கிறாள். பிரேமாவின் தந்தை அவன் செய்த உதவியைப் பெரிதும் பாராட்டித் தன் மகளை அவனுக்கே ஈந்து மணம் புரிவிக்க விரும்புகிறார். ஆனால் பிரேமா மனோஹரைத் தனது சகோதரனாக பாவிக்கிறாள். மதுமாலதி மனோஹரை மணக்க விருப்பம் கொள்கின்றள் ஆனால் மதுமாலதியின் தாய் இதை விரும்பாததால் மதுமாலதியை சபித்து ஒரு பறவையாக்கி விடுகின்றாள். பறவையாக மாறிய மதுமாலதி தாராசந்த் என்பவனிடம் பிடிபடுகிறாள். தாராசந்த்

ஒரு தங்கக்கூண்டிலே பறவையை அடைத்து மஹாராஜாவிடம் எடுத்துச் செல்கின்றான். மதுமாலதியின் தாயார் மனம் மாறி மறுபடியும் பறவைக்கு மதுமாலதியாக உருவமாற்றம் அளிக்கின்றாள். எல்லோரும் மனோஹரைத் தேடிச் செல்கின்றனர். மனோஹரை ஒரு பிச்சைக்காரனாக திரியக் காண்கின்றனர். பிறகு மனோஹரனுக்கும் மதுமாலதிக்கும் விவாஹம் நடத்தப்படுகின்றது. கதை இங்கு முடிந்து விடுகின்றது.

**மலிக்முகம்மத் ஜாயஸி** – அன்பு நெறியில் தோன்றிய கவிகளுள் இவர் மிகவும் முக்கியமானவர். இவரது வாழ்க்கை வரலாற்றைப் பற்றிய தெளிவான விவரங்கள் யாதும் கிடைக்கப் பெறவில்லை. இவர் ராய்பரேலியைச் சேர்ந்த ஜாயஸ் நகரில் வசித்து வந்தார். ஸையத் முஹிஉத்தீன் என்பவர் இவரது ஆசிரியராவார். ஜாயஸி வேதாந்தத்தில் சிறந்த அறிவு பெற்று விளங்கினார். இவர் நீண்டகாலம் காஜிபூர், போஜ்பூர் முதலியவற்றின் மன்னனான ஜகத்தேவின் அவைக் கவிஞராக ஆதரிக்கப்பட்டு வந்தார். பிறகு இவர் அமேடி அரசனிடம் தன் வாழ்நாள் முழுவதும் இருந்தார். அங்குதான் இவரது சமாதி நிறுவப்பட்டுள்ளது. இவரது மிகப் பிரசித்தமான நூல் பத்மாவதி கி.பி.1540–ல் இயற்றிப்பட்டது.

ஜாயஸி ஸூஃபி சித்தாந்தத்தில் ஈடுபாடு கொண்டிருந்ததைப் போன்றே ஹிந்து தர்மத்திலும் ஈடுபாடு கொண்டிருந்தார். இவ்விரண்டு மதக் கொள்கைகளையும், குறிக்கோள்களையும் இவர் தெளிவுற உணர்ந்திருந்தனர். அத்துடனின்றி ஹிந்து தர்மத்திலுள்ள பிரசித்தி பெற்ற வரலாற்றினையும் நன்கு கற்றுணர்ந்திருந்தார். மக்களது தர்மசிந்தையைத் தூண்டி அவர்களைத் திருப்திப்படுத்தும் வகையை நன்கு அறிந்து அதில் வெற்றியும் கண்டார். இவர் புற அழகு பெறாவிடிலும், அக அழகு பெற்று விளங்கினார். இவரது புறக்கண்களிலொன்று ஊனமடைந்திருந்தாலும். இவரது அகக்கண் ஆற்றல் பெற்று ஒளி வீசியது.

இவர் இப்போது சமூகத்தில் பரவியிருந்த இராமன் கிருஷ்ணன் முதலியவர்களைப் பற்றிய கதைகளைத் தன்னுடைய நூலுக்கு ஆதாரமாகக் கொள்ளாமல், ஸூஃபி மத சித்தாந்தங்களை எளிய, 'தெள்ளிய நடையில், மக்களின் மனத்தைக் கவரும் வண்ணம் அழகுபட, நயம்பட சித்தரித்தார். ஸூஃபி மத சித்தாந்தங்களை ஹிந்துமத பண்பாடுகளுடன் பிணைத்துப் புதிய முறையில் எழுதியதுடன் மட்டும் நில்லாமல் சரித்திரச் சம்பந்தமான நிகழ்ச்சிகளையும் இணைத்துத் தன் கதைகளுக்குப் புத்துயிரூட்டினார். இந்த சரித்திர நிகழ்ச்சிகள் சித்தூரைச் சார்ந்த இராஜபுத்திர அரசர்களின் ஹிந்து ஆதர் சங்களுக்கு எடுத்துக் காட்டாக விளங்கின. மக்கள் இவற்றைப் பெரிதும் விரும்பிப் போற்றி வந்தனர். இதனால் தான் ஜாயஸியின் கதை மக்களால் மிகவும் விரும்பி ஏற்கப்பட்டது.

இதை மிகவும் பேணிப்பாதுகாத்து வருவதாலேயே இதனுடைய மகிமை தெள்ளென விளக்குகிறது. இந்தக் காவியம் பாரசீக லிபியில் எழுதப்பட்டுள்ளதால்தான் அக் காலத்தில் பரவியிருந்த அவதிபாஷை பாரசீக எழுத்துக்களில் பிழைத்து உயிர் வாழ முடிந்தது. இந்திய இலக்கிய வரலாற்றிலேயே பழம்பெரும் கவியின் காவியம் அவரால் இயற்றப்பட்டதைப் போன்றே சற்றேனும் மாற்றமில்லமல் நமக்குக் கிடைத்துள்ளதெனில் அது ஜாயஸியின் 'பத்மாவத்'தே ஆகும்.

ஜாயஸியின் 'பத்மாவத்' பல சிறப்புகளை உடையது. முதலாவதாக அது ஸூஃபி சித்தாந்தத்தை மனதைக் கவரும் வகையில் எளிய நடையில் விளக்கியிருப்பதாகும். இரண்டாவதாக இக்கதை இராமன், கிருஷ்ணன் இவர்களது வரலாறுகளிலிருந்து வேறுபட்டுக் கதை உருவில் அமைந்துள்ளதாகும். மூன்றாவதாக இதில் தார்மீக விஷயத்தில் சகிப்புத்தன்மை மிகவும் உயர்ந்து விளங்குவதாகும். முஸல்மானாக இருந்தபோதிலும் ஜாயஸி இந்து தர்மத்தின் உயரிய நோக்கங்கள் ஒட்டித்தனது கதையை அமைத்துள்ளார்.

நான்காவதாக இக்காவியக் கலையின் சிறந்த எடுத்துக் காட்டாக விளங்குவதாகும். இப்படிப் பல சிறப்புக்களைக் கொண்ட காவியம் மக்களின் மனத்தில் அழியாத இடத்தைப் பெற்றதெனில் ஐயப்பட யாதுமில்லை.

பத்மாவதியின் கதைச் சுருக்கம் :-

சிங்களத்தீவின் மன்னன் கந்தர்வஸேனின் மகளான பத்மாவதி அழகிலும், அறிவிலும், குணத்திலும் தன்நிகரற்று விளங்கினாள். அவளுக்கு ஏற்ற கணவன் எங்கும் கிடைக்கவில்லை. அவளிடம் தங்கநிறம் படைத்த ஹீராமன் என்னும் ஒரு கிளி இருந்தது. அது பேசும் திறன் படைத்துச் சிறந்த பண்டிதனாக இருந்தது. ஒரு நாள் அது அழகிற் சிறந்த அரசகுமாரியிடம் அவளுக்கு ஏற்ற வரன் வாய்க்காததை பற்றிப் பேசிக்கொண்டிருந்தது. அரசன் அதன் கூற்றைக் கேட்டுக் கோபமடைந்தான். அரசனிடம் கொண்ட பயத்தினால் அது ஒரு நாள் யாருக்கும் சொல்லாமல் பறந்து சென்றுவிட்டது. இதை அறிந்த பத்மாவதி அழுது புலம்பினாள்.

கிளி பறந்து சென்று ஒரு வேடனின் கையில் சிக்கியது. அவன் அதை சித்தூரின் கடைவீதிக்குக் கொணர்ந்து ஒரு பிராமணனிடம் விற்றுவிட்டான். அந்த பிராமணனுக்கு ஒரு லக்ஷ ருபாய் அளித்துவிட்டு அந்நாட்டுமன்னன் ரத்னசேன் அதைப்பெற்றான். நாளடைவில் ரத்னசேன் அதை மிகவும் நேசிக்கத் தலைப்பட்டான். ஒருநாள் அரசன் வேட்டைக்குச் சென்றிருந்தபோது அவனது மனைவி நாகமதி கிளியிடம் வந்து எனக்கு ஈடான அழகி உலகத்தில் யாரேனும் உண்டோ என்று கேட்டாள். அவள் தன் அழகினால் ஆணவமும், செருக்கும் கொண்டிருந்தாள். இந்த உலகிலேயே தான் தான் சிறந்த அழகி என்பது அவள் கருத்து. ஆனால் கிளி அவள் கேட்ட கேள்விக்கு பரிகாசமாகச் சிரித்துக்கொண்டே பதில் கூறியது. சிங்களத் தீவின் அரச குமாரியின் அழகை வர்ணித்துவிட்டு அது உனக்கும் அவளுக்கும் இருட்டுக்கும் நிலவுக்கும் உள்ள வித்தியாசம் உள்ளதே என்று கூறியது. அது மன்னனிடம்

மங்கையின் எழிலை வர்ணித்து அவன் மனதை மாற்றிவிடப் போகிறதே என்னும் பயத்தில் அதைக்கொன்று விடும்படி ராணி உத்திரவிட்டாள். ஆனால் சேடி அரசனுக்குப் பயந்து அதைக் கொல்லாமல், தன்னுடைய வீட்டிலேயே மறைத்து வளர்த்து வந்தாள். திரும்பியவுடன் கிளியைக்காணாத மன்னன் மிகவும் துயருற்றான். அங்குள்ளோர் மீது கடும்கோபம் கொண்டான். கிளி மன்னனுக்கு முன்னிலையில் கொண்டு வரப்பட்டது. அதன் வாயிலாகவே மன்னன் நடந்தனைத்தும் அறிந்து கொண்டான். பத்மினியின் அழகைக் கேள்வியுற்ற மன்னன் மயங்கி மூர்ச்சையுற்றான். கடைசியில் அரசன் அவளைக் காணவேண்டும் என்னும் பேரவாவினால் தூண்டப் பட்டு அரச போகத்தைத் துறந்து அவளைத் தேடிக்கொண்டு சந்நியாசி வேடத்தில் கிளம்பிவிட்டான். அவனுக்கு முன்னால் வழிகாட்டிக் கொண்டு ஹீராமன் சென்றது. அவனுடன் பதினாறாயிரம் இளைஞர்கள் சந்நியாசி வேடத்தில் சென்றனர்.

கலிங்க நாட்டிலிருந்து கிளம்பிய இந்த சந்நியாசிகள் கூட்டமானது மரக்கலம் ஏறி பற்பல இன்னல்களுக்கு உட்பட்டு கடைசியில் சிம்ஹலத் (சிங்களம்) தீவை அடைந்தது. அங்கு சென்றடைந்ததும் அரசன் மற்ற சந்நியாசிகளுடன் ஒரு சிவன் கோயிலில் தங்கி பத்மாவதியை தியானித்துக் கொண்டும், அவள் பெயரை ஜபித்துக் கொண்டுமிருந்தான். ஹீராமன் பத்மாவதியிடம் சென்று எல்லா விஷயங்களையும் விவரமாகக் கூறியது. மன்னனின் மாசுமறுவற்ற தூய அன்பினால் கவரப்பட்டு பெரிதும் அகமகிழ்ந்து அன்பினால் நெக்குருகு கினாள். ஸ்ரீபஞ்சமியன்று பத்மாவதி சிவபூசை செய்வதற்காகக் கோவிலுக்குச் சென்றாள். ஆனால் அரசன் அவளது அழகில் மயங்கி மூர்ச்சையுற்று விட்டான். அவளை நன்கு பார்க்கக்கூட முடியவில்லை அரசனால். மூர்ச்சை தெளிந்ததும் மன்னன் மிகவும் மனம் வருந்தினான். இதை அறிந்த பத்மாவதி நீ நல்ல சந்தர்ப்பத்தை நழுவ விட்டு விட்டாய், மறுபடியும் என்னைக் காண விரும்பினால் இந்த நெடி துயர்ந்த,

வானளாவிய கோட்டையை கடந்துவா; அப்போது தான் என்னைக் காண இயலும் என்று கூறி அனுப்பினாள். சிவபிரானது அருளைப் பெற்று அரசன் இரவோடு இரவாகத் தன் தோழர்களுடன் கோட்டைக்குள் புக ஆரம்பித்தான். இதற்குள் பொழுது புலர்ந்துவிடவே அவன் பிடிக்கப்பட்டு விட்டான். அரசன் கந்தர்வசேனனின் உத்திரவுப்படி ரத்ன சேனைத் தூக்கிலிட அழைத்துச் சென்று கொண்டிருந்தனர். அதற்குள்ளாக அவனது பதினாறாயிரம் வீரர்களும் வந்த விட்டனர். கந்தர்வசேனனின் படைகள் அனைத்தும் முறியடிக்கப்பட்டன. சந்நியாசிகளின் நடுவில் சிவபெருமானைக்கண்ட மன்னன் அவர் பாதங்களில் வணங்கி யெழுந்து பத்மாவதி உங்கள் சொத்து, நீங்கள் விரும்புபவருக்கு அவளை அளியுங்கள் என்று கூறிவிட்டான். இவ்விதமாக ரத்னசேனுக்கும், பத்மாவதிக்கும் இனிது திருமணம் நடந்தேறியது. சின்னாட்களுக்குப் பின்னர் பத்மாவதியுடன் மன்னன் சித்தூர் கோட்டைக்குத் திரும்பினான்.

ரத்தினசேனின் அவையில் யக்ஷிணி வித்தையில் கைதேர்ந்த இராகவ சேன் என்னும் பண்டிதன் இருந்தான். அவையிலுள்ள ஏனைய கவிகளை அவமானப் படுத்த வேண்டும் என்னும் எண்ணத்தினால் அவன் தன் யக்ஷிணி வித்தையின் மூலம் பிரதமையன்று மூன்றாம்பிறை சந்திரனைக் காட்டிவிட்டான். அரசனுக்கு இச்செய்தி எட்டியதும் அரசன் அவனை நாடு கடத்திவிட்டான். இதனால் கொதிப்புற்ற இராகவ சேன் அரசனைப் பழிவாங்கவேண்டும் என்னும் எண்ணத்துடன் தில்லியை ஆண்டு வந்த அரசன் அலாவுதீனிடம் அடைக்கலம் புகுந்தான். தான் பரிசாகப்பெற்ற பத்மாவதியின் கங்கணம் ஒன்றை அரசனுக்கு காட்டி அவளது அழகை வருணித்து உலகத்திலேயே அவளைப் போன்ற அழகி கிடையாது என்று கூறி மன்னனின் மனத்தில் ஆவலைத் தூண்டிவிட்டான். அலாவுத்தீன் பத்மினியைத் தன்னிடம் அனுப்பிவிடுமாறு எழுதிய கடிதத்தைக் கண்டு அரசன்

ரத்னசேனன் சீற்றமுற்று படை திரட்ட ஆரம்பித்தான். அலாவுதீன் நீண்ட நாட்கள் கோட்டையை முற்றுகையிட்ட வண்ணமிருந்தான். ஆனால் அதைத் தகர்ப்பது அத்தனை எளிதாக இல்லை. ஆகையால் கடைசியில் அவன் சூழ்ச்சி மூலம் ஓர் ஒப்பந்தம் செய்துகொள்ள முன்வந்தான். அரசன் அதை ஏற்றுக்கொண்டு அலாவுதீனுக்கு ஒரு விருந்தளித்தான். விருந்து முடிந்து மன்னனுடன் சதுரங்கம் ஆடிக்கொண்டிருந்த போது அலாவுதீன் எதிரில் வைக்கப்பட்டுள்ள நிலைக் கண்ணாடியில் பத்மினியின் எழிலுருவைக் கண்டு மூர்ச்சையுற்றான். அங்கிருந்த அலாவுதீன் விடைபெற்றுச் செல்லும்போது அவனை வழியனுப்ப வெளிவாசல் வரை வந்த மன்னனை பாதுஷாவின் மாறுவேடம் தரித்த சிப்பாய்கள் சூழ்ந்துகொண்டு கைதுசெய்து தில்லிக்குக் கொண்டு சென்றனர்.

இதை அறிந்த பத்மினி மிகவும் துயருற்றளாயினும், ஒரு சிறந்த வீரத்திருமகளைப் போன்று தன் அன்புக் கணவனைக் காப்பாற்ற வழி வகுத்தாள். கோரா, பாதல் என்னும் இரு சிறந்த வீரர்கள் 700 பல்லக்குகளில் ஆயுதம் தரித்த சிப்பாய்களை மறைத்துக்கொண்டு தில்லியை அடைந்தனர். பத்மினி சிறிது நேரம் தான் கணவனைச் சந்தித்து அளவளாவிய பிறகு அந்தப்புரத்திற்கு வந்து சேருவாள் என்று பாதுஷாவுக்குச் செய்தி அனுப்பப்பட்டது. அலாவுதீனின் அனுமதி கிடைத்தும் ஓர் மூடப்பட்ட பல்லக்கு அரசனின் சிறைச்சாலைக்கு அருகில் வைக்கப்பட்டது. அதிலிருந்து ஒரு கொல்லன் வெளிப்பட்டு அரசனின் விலங்குகளைத் தகர்த்தெறிந்தான் அரசனின் விலங்குகளை தகர்த்தெறிந்தான். ரத்னசேன் தயாராக இருந்த குதிரையின் மீது ஏறி வெளியேறி விட்டான். பாதுஷாவின் படைகள் பின்தொடர்ந்து வருவதை அறிந்த மூப்பினால் உடல் தளர்ந்த கோரா சிறிதும் மனம் தளராது பாதுஷாவின் படைகளை எதிர்த்து முறியடித்தான். வீரனான பாதல் மன்னனைக் காத்து சித்தூருக்குக் கொணர்ந்து சேர்த்தான். சித்தூர் வந்து சேர்ந்ததும் பத்மினி கும்பல்நேர்

அரசனான தேவபாலிடமிருந்து படையெடுக்கும் செய்தி வந்திருப்பதை அறிவித்தாள். இதை அறிந்ததும் ரத்னசேன் பெரும் படையுடன் கும்பல்நேரை முற்றுகையிட்டான். இருவருக்குமிடையே கடும்போர் மூண்டது. இரு அரசர்களும் போரில் வீரகதி அடைந்தனர்.

ரத்னசேனின் சவம் சித்தூருக்குக் கொண்டுவரப்பட்டது. அவனது மனைவிகளான நாகமதியும், பத்மினியும் சிரித்துக் கொண்டே சிதையில் அமர்ந்து சிந்தை கவர்ந்தவனுடன் வானுலகமடைந்தனர். அலாவுதீன் தனது பெரும் படையுடன் சித்தூருக்கு வந்து பார்த்தபொழுது அங்கு சாம்பலைத் தவிர வேறெதுவும் இருக்கவில்லை. அலாவுதீன் பெரிதும் ஏமாற்றமுற்று தன் நகரை அடைந்தான்.

முன்பே கூறப்பட்டுள்ளதைப் போல் பிரேம கதைகள் பரம்பரையில் பத்மாவத் தலைசிறந்ததாகவும், ஆழ்ந்த கருத்துக்கள் கொண்டதாகவும், எளிய நடையிலும் அமைந்துள்ளது. ஏனைய ஸூஃபி கவிகளின் கதைகளைக் காட்டிலும் இது சிறப்பாக அமைந்ததற்குக் காரணம் யாதெனில் இதில் சாதனை முறைகளைப் பற்றியும், அதைக் கடைபிடிப்பதில் உண்டாகும் துன்பங்கள், சித்தி அடையும் வழிகள் ஆகியவற்றை வர்ணித்திருப்பதுமேயாகும். இத்துடனின்றி இக்காவியம் ஸம்ஸ்கிருத பிரபந்த காவியங்களைப் போன்று காதை முறையில் இயற்றப்படாமல். பாரசீக மொழியின் மஸ்னவி நடையில் இயற்றப்பட்டிருந்த போதிலும் இதில் சிருங்காரம், வீரம் முதலிய ரஸங்களை வர்ணித்திருப்பது இந்திய காவிய முறையையே வழுவி வந்துள்ளது. இவ்விதம் பல சிறப்பிகளை உடைய இந்நூல் பலராலும் போற்றப்பட்டு வருகிறது.

**உஸ்மான்** – இவர் ஜஹாங்கீர் காலத்தில் இருந்தவர். காஜிபூரைச் சேர்ந்தவர் இவர் ஹாஜி பாபாவின் சீடராவார். உஸ்மான் கி.பி. 1613இல் 'சித்ராவலி' என்னும் நூலை இயற்றி

னார். இந்நூல் பெரும்பாலும் ஜாயஸியின் 'பத்மாவத்'தைத் தழுவியே இயற்றப்பட்டுள்ளது. பல இடங்களில் ஜாயஸியின் சொற்றொடர்களையே கையாண்டுள்ளார். ஆனால் கதை முற்றிலும் கவியின் கற்பனையாகும்.

நேபாள அரசனான தரணீதர் மக்கட்செல்வத்தை அடைவவதற்காக கடும் நோன்பு நூற்று சிவ–பார்வதியின் அருளால் 'சுஜான்' என்னும் ஆண்மகவை ஈன்றெடுத்தனர். வாலிப பருவம் அடைந்த சுஜான் ஒருநாள் வேட்டையாட கானகமேதி அங்கு வந்த வழியை மறந்து, களைப்புற்று ஒரு கோயிலை அடைந்து அயர்ந்து தூங்கிவிட்டான். அக்கோயிலுக்குரிய தேவன் அவனைக் காக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டான். ஒரு நாள் அந்த தேவன் ரூபநகரின் அரசகுமாரியான சித்ராவலியின் பிறந்த நாள் விழாவுக்குத் தன் நண்பன் ஒருவனுடன் சென்றான். போகும்போது அவன் சுஜானையும் தன்னுடன் அழைத்துச் சென்றான். தகுந்த இடம் கிடைக்காததால் தேவர்கள் சுஜானை சித்ராவலியின் சித்திரச்சாலையில் விட்டுவிட்டுத் தாங்கள் மட்டும் உற்சவம் பார்க்கச் சென்றனர். அரசகுமாரன் அங்கு மாட்டப்பட்டிருந்த சித்ராவலியின் சித்திரத்தைக் கண்டு சிந்தை பறிகொடுத்தான். தன் படம் மொன்றையும் தீட்டி அவள் படத்திற்கருகில் மாட்டிவிட்டு நித்திரையிலழ்ந்து விட்டான். தேவதைகள் மறுபடியும் அவனைக் கோயிலில் கொண்டு விட்டுவிட்டனர். தூக்கம் கலைந்த அரச குமாரனுக்கு சித்திராவலியைப் பற்றிய நிகழ்ச்சி கனாவைப் போன்று தோன்றியது. ஆனால் வர்ணம் தோய்ந்த தன் கைகளைப் பார்த்தவுடன் அவனுக்கு எல்லாம் விளங்கிவிட்டது. சித்திராவலியை நினைத்து அவன் மறுக ஆரம்பித்தான். அரண்மனையை அடைந்தும் கூட அவன் மனம் சித்ராவலியின் நினைவிலேயே நிலைத்துவிட்டது. கடைசியில் அவன் தனது நண்பனான சுபுத்தியுடன் அக்கோயிலை அடைந்து அங்கு ஓர் அன்னச் சத்திரம் அமைத்தான்.

ராஜகுமாரியும் அவனது சித்திரத்தைக் கண்டு மையலுற்று மதி மயங்கினாள். அலிகளான தனது வேலைக்காரர்கள் சிலரை சந்நியாசி வேடத்தில் அரசகுமாரனைத் தேடும் பொருட்டு அனுப்பினாள். அவர்கள் அலைந்து திரிந்து கடைசியில் அன்னச் சத்திரத்தை அடைந்தனர். அரசகுமாரனைச் தங்களுடன் ரூபநகருக்கு அழைத்துச் சென்றனர். அங்கு அரசகுமாரன் சிவன் கோயில் ஒன்றில் அரசிளங்குமாரியைச் சந்தித்தான். இச்சமயத்தில் ரூபதாரின் ராணியால் அனுப்பப் பட்ட சூழ்ச்சிக்காரன் ஒருவன் அரசகுமாரனைக் குருடாக்கி ஓர் குகையில் அடைத்துவிட்டான். அங்கு அவனை ஓர் மலைப்பாம்பு விழுங்கியது. ஆனால் அது அரசகுமாரனின் விரகதாபத்தைப் பொறுக்கமாட்டாமல் அவனை வெளியே உமிழ்ந்துவிட்டது. அங்கு ஓர் காட்டுவாசி அவனுக்கு ஒரு மை அளித்தான். அதன் மகிமையில் அரசகுமாரன் மீண்டும் கண்ணொளி பெற்றான். பற்பல இன்னல்களுக்கு ஆளாகி அரச குமாரன் கடைசியில் சசாரகட் என்னும் நகரத்தை அடைந்து அதை ஆண்டு வந்த அரசனின் மகளான கமலாவதியின் தோட்டத்தை அடைந்து அங்கு இளைப்பாறிக் கொண்டிருந்தான். அப்போதுதான் தோழிகளுடன் அங்கு வந்த அரசகுமாரி கமலாவதி அவனைக்கண்டு மோகமுற்று தன் அரண்மனையில் அவனை விருந்துண்ண அழைத்தாள். அவன் உணவருந்திக் கொண்டிருக்கும் போது தனது இரத்தின மாலையை அவனருகில் வைத்து விட்டுக் திருட்டுக் குற்றம் சாட்டி அவனைக் கைது செய்து விட்டாள் ராஜகுமாரி கமலாவதி. இச்சமயத்தில் கமலாவதியின் அழகைச் செவியுற்ற சோஹில் அரசன் அவளை அடையும் பொருட்டு சாரகாட்டின் மீது முற்றுகைவிட்டான். அரசகுமாரன் சுஜான் மிகுந்த திறமை யுடன் போராடி அவனை அடித்து விரட்டினான். கடைசியில் சுஜான் சித்ராவலியைச் சந்திக்கும் வரையில் கமலாவதியுடன் மணவாழ்க்கை நடத்துவதில்லை என்று உறுதிபூண்டு அவளைக் கைப்பிடித்தான். அவளையும் அழைத்துக் கொண்டு அவன் கிழ்நகரை நோக்கித் தீர்த்தயாத்திரை கிளம்பி விட்டான்.

சித்ராவலியினால் அனுப்பப்பட்ட மாறுவேடம் தரித்த தூதுவர்கள் கிரிநாரில் சுஜானைக் கண்டனர். உடனே இச் செய்தி சித்ராவலிக்கு எட்டியது. சித்ராவலி ஒரு தூதுவனிடம் கடிதமொன்றை அளித்து அவனை சாகரகூடுக்கு அனுப்பினாள். அவன் அங்கு சுஜானை சந்தித்து சித்ராவலியின் கடிதத்தைக் கொடுத்து அவனை ரூபநகருக்கு அழைத்துச் சென்றான். இதற்குள்ளாக கதை கூறி பிழைத்து வந்த ஒரு நாடோடி ரூபநகரை அடைந்து சித்ராவலியின் தந்தையிடம் ஸோஹில் அரசனின் சண்டையைப் பற்றிய பாட்டுக்களைப் பாடிக் காட்டினான். இதை செவிமடுத்த அரசனுக்குத் தன் மகளின் திருமணத்தைப் பற்றிய கவலை உண்டாயிற்று. அவன் பல நாட்டு அரசகுமாரர்களின் படங்களையும் சேகரித்துக் கொண்டுவரும்படி நான்கு ஓவியர்களை நான்கு திக்குகளிலும் அனுப்பினான். இதற்குள்ளாக சித்ராவலி அனுப்பிய தூதன் சுஜானை அழைத்துக் கொண்டு ரூபநகரை அடைந்து அரசகுமாரனை ஓரிடத்தில் நிறுத்திவிட்டு இச்செய்தியை அரசகுமாரிக்குத் தெரிவிப்பதற்காக விரைந்தான். அதற்குள் இராணி தன் சேடி மூலம் இவ்விஷயமறிந்து அத்தூதுவனை வழியிலேயே கைது செய்து விட்டாள். தூதுவன் வெகு நேரமாகியும் திரும்பாததைக் கண்ட சுஜான் உரத்தக் குரலில் சித்ராவலியின் பெயரை கூற ஆரம்பித்தான். சித்ராவலியின் தந்தை அவனைக் கொன்றுவிடும்படி மதம்பிடித்த யானையை ஏவினான். ஆனால் சுஜான் அதை நொடியில் கொன்று விட்டான். அதை அறிந்த அரசன் அவனை முறியடிக்க ஓர் பெரும் படை திரட்டிக் கொண்டிருக்கையிலேயே அவனால் அனுப்பப்பட்ட ஓவியர்களில் ஒருவன் சுஜானின் சித்திரத்துடன் அவ்விடம் வந்து சேர்ந்தான். அப்படத்தைக் கண்ட மன்னன் தன் மகளின் மனம் கவர்ந்தவன் அவனே என்பதை அறிந்து மிக்க மகிழ்ச்சியுடன் இருவருக்கும் மணம் முடித்தான்.

சின்னாட்கள் சென்ற பின்னர் கமலாவதி சுஜானின் பிரிவாற்றாமையால் பெரிதும் மனம் நொந்து ஹம்ஸமிஸ்ரன் என்பவனை சுஜானிடம் தூது விடுத்தாள். அவன் வண்டை உவமையாக்கி சுஜானுக்கு கமலாவதியின் பிரிவுத் துயரை உய்த்து உணர வைத்தான். சுஜான் சித்திராவலியுடன் தன் நாட்டிற்குத் திரும்புகையில் வழியில் கமலாவதியையும் சந்தித்து உடன் அழைத்துச் சென்றான். பிறகு அவன் தன் நாடான நேபாளத்தை அடைந்து மனைவிமார் இருவருடனும் இனிது இல்வாழ்க்கை நடத்தி வந்தான்.

இந்நூல் பெரிதும் ஜாயஸியின் 'பத்மாவத்' தின் காவிய நடையையே தழுவி எழுதப்பட்டுள்ளது. கவி சுஜானை அறிஞனாகவும், கமலாவதியையும், சித்ராவலியையும் அறியாமை அறிவுடமை இவற்றுக்கு எடுத்துக்காட்டாகவும், கல்வியறிவைப் பெற விரும்புபவன் அறியாமையை ஒழித்து அறிவுடையை மேற்கொண்டால்தான் பயன்பெற இயலும் என்றும், அதற்காகவே அவன் சித்ராவலியை அடையும்வரை கமலாவதியிடமிருந்து விலகியே இருந்ததாகவும் விளக்கப்பட்டிருக்கிறது. இதில் சிருங்கார ரஸத்தின் இரு பாகங்களையும் கவி தெளிவுற வர்ணித்துள்ளார். அத்துடனின்றி இதில் ஆறு பருவங்களைப் பற்றியும் அழகாக சித்தரித்திருக்கிறார். இந்நூலும் 'பத்மாவத்' தைப் போலவே மக்களால் பெரிதும் விரும்பிப் படிக்கப்பட்டு வந்தது.

ஷேக் நபி : இவர் ஜோன்புர் ஜில்லாவில் தோஸ்புருக்கு அருகிலுள்ள மஷ் என்னும் கிராமத்தில் கி.பி. 1619–இல் தோன்றினார். இவர் 'ஞானதீப்' என்னும் நூலை இயற்றியுள்ளார்.

அன்பு நெறியைப் பரப்பி வவந்த ஸூபி கவிகளின் காலம் ஷேக் நபியுடன் முடிவடைந்ததாகக் கூறப்படுகிறது. இவர்தான் ஸூபி காவிய பரம்பரையின் கடைசிக் கவியாகக்

கருதப்படுகிறார். ஆயினும் காப்பிய உலகத்தில் ஒரு நடை முறைத் தோன்றிய பிறகு அதைத் தழுவி அவ்வப்பொழுது சில நூல்கள் இயற்றப்படுகின்றன. ஆனால் அவை மக்களின் மனதை அதிகமாகக் கவருதில்லை. 'ஞான தீப்'க்குப் பிறகு இக்காவிய நடையை ஒட்டிச் சிறு கதைகள் எழுதப்பட்டன. அவற்றைப் பற்றி கீழே குறிப்பிடப்பட்டுள்ளது.

காஸிம் ஷாஹ் : இவர் தரியாபாத்தில் பிறந்தார். இவரால் எழுதப்பட்ட புத்தகம் ஜவராஹிர் என்பதாகும்.

நூர்முகம்மத் : இவர் தில்லியை ஆண்ட முகம்மத் ஷாஹ் காலத்தைச் சேர்ந்தவர். இவர் பாரசீக பாஷையில் சிறந்த பண்டிதர். இவர் ஹிந்தியிலும் நன்கு தேர்ச்சி பெற்றிருந்தார். இவர் பாரசீக மொழியில் 'ரௌஜதுல் ஹகாயக்' என்னும் நூலை இயற்றியுள்ளார். அத்துடனின்றி கி.பி. 1744–இல் இவர் ஹிந்தியிலும் 'இந்திராவதி' என்னும் காப்பியத்தை இயற்றியுள்ளார்.

ஸூஃபி காவிய பரம்பரையில் தோன்றிய கவிஞர்கள் அனைவருமே முகம்மதியர்கள். ஒரே ஒருவர்தான் ஹிந்து மதத்தைச் சார்ந்தவர். பஞ்சாப்பைச் சேர்ந்த ஸூர்தாஸ் என்னும் இவர் ஷாஜஹானின் காலத்தில் 'நள தமயந்தி கதை' என்னும் நூலை இயற்றினார்.

இவர்களுக்குப் பின்னரும் அவ்வப்பொழுது இந்நடையில் சில சிறு நூல்கள் இயற்றப்பட்டுள்ளன. அவற்றில் குறிப்பிடத்தக்கவை 'சதுர் முகுட் கீ கதா' 'யூசுப் ஜுலேகா' என்பவையாகும்.



# இராம பக்தி இலக்கியம்

கபீர், ஜாயஸி போன்ற கவிகள் உருவமற்று எங்கும் வியாபித்துள்ள பரமனைப் புகழ்ந்து பாடினார். உருவமற்று கடவுளின் கற்பனை உயர்ந்த ஞானத்திற்கு எடுத்துக்காட்டாக இருந்தது. பண்பட்ட மனத்தின்கண் பரமனின் உருவத்தைப் பிரதிபலிக்கச் செய்ய அது துணையாக இருந்தது. ஆனால் அந்தக் கற்பனையிலே உலக வாழ்க்கையை உய்விக்கவோ, மேம்படுத்தவோ கூடிய திறமை இல்லை. நிச்சயமான குணத்தையும், உருவத்தையும் கொண்ட இலட்சியத்தைப் பின் பற்றும்பொழுது கூட திசை தவறித் தடுமாறித் தவிக்கும் மக்கள் உருவமற்ற கடவுளின் வழிபாட்டினால் அதிகமாகப் பயனை அடையவில்லை. மக்களது உள்ளத்தே உறைந்திருக்கும் காதலைக் கசியச் செய்து, கண்ணீராகப் பெருகச் செய்து அவர்களைச் சிறந்த மனிதர்களாகச் செய்வதற்காகவே பாரினிலே மானிடராய்ப் பிறப்பெடுத்து, வாழ்க்கைச் சுழலிலே சிக்குண்டு, விதியின் விளையாட்டிற்கு இலக்காகி, இன்பமும், துன்பமும் கறங்கு போல் சுழன்றுவரும் நிலையினை அனுபவித்து உய்வுபெற்ற உத்தமர்களை மக்கள் கடவுளாகப் பாவிக்க ஆரம்பித்தனர். பாரதப் பண்பாடு உலகத்திலேயே தலைசிறந்த குறிக்கோள்களை நமக்கு ஈந்துள்ளது. உருவத்தால் கட்டுபட்டு, பாசத்தால் பிணைக்கப்பட்டு நமது உள்ளக் கோயிலிலே உறைவிடம் தேடி இக வாழ்வில் நிறைவையும், உய்வின் வழியையும் நமக்கு அளிக்கப் பல்வேறு காலத்தில், பல்வேறு உருவத்தில் கடவுள் தோன்றினார் என்று நாம் கொள்கின்றோம். அப்படித் தோன்றிய அவதாரங்களுள் சக்கரவர்த்தித் திருமகனாகப் பிறந்து, தனயனாகப் சிறந்து, அரக்கர்களைப் பூண்டோடு ஒழித்து,அயோத்தியில் அன்பு சாம்ராஜ்யத்தை நிலைநாட்டிய இராமபிரானை நாம் மிகவும் போற்றுகின்றோம்.

ஒழுக்கத்திற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கும் இராமபிரானைக் தெய்வமாக மதித்துப் போற்றிவரும் பழக்கம்

பதினான்காம் நூற்றாண்டு வாக்கில்தான் முழு வளர்ச்சியை அடைந்தது. அந்தக் காலத்தில் வடநாடு இஸ்லாம் மதத்தின் இரக்கமற்ற ஆதிக்கத்தினால் பற்பல இன்னல்களுக்கு ஆளாகியிருந்தது. தென்னாட்டிலே கி.பி. 1016–ஆம் ஆண்டிலிருந்து கி.பி. 1137–ஆம் ஆண்டு வரை உயிர் வாழ்ந்த வைணவ மதத்தலைவரான ஸ்ரீ இராமானுஜாசாரியாரின் பரம்பரையில்தான் இராமனுடைய வழிபாட்டிற்கு ஒரு பாதை வகுக்கப்பட்டது. இரராமனுஜரின் தத்துவ சித்தாந்தம் 'விசிஷ்டாத்வைதம்' என்ற கூறப்படுவது.

'விசிஷ்டாத்வைத'த் தத்துவப்படி பரம்பொருளைச் சேதன. அசேதன என்னும் அம்சங்களாகப் பிரித்து சேதன அம்சத்திலிருந்து ஜீவனும், அசேதன அம்சத்திலிருந்து இயற்கையும் தோன்றியதாகக் கருதுகிறோம். எல்லா சேதன, அசேதன அம்சங்களுக்கும் தலைவனாக நாராயணன் விளங்குகின்றான். அவனுடைய அவதாரமே இராமன் என்று 'விசிஷ்டாத்வைத' தத்துவப்படி விளக்கப்படுகின்றது.

இராமானுஜருக்குப் பின் தோன்றிய இராமாநந்தர் என்பவர் இராமனுடைய வழிபாட்டினை சாதி, மத பேதம் பாராது எல்லோருக்கும் உபதேசிக்க ஆரம்பித்தார். இராமாநந்தர் தென்நாட்டில் பிறந்து, வட நாட்டிலே தன்னுடைய ஆழ்ந்த அறிவின் மூலமாக ஒரு மதத் தலைவராகப் புகழ் பெற்றார். இராமாநந்தரின் காலத்திற்கு முன் பக்தி என்பது பரவலாக எல்லா மக்களுக்கும் போதிக்கப்படவில்லை. வடமொழி கற்றறிந்த பிராமணர்களே பக்திக்கு அதிகாரிகளாகக் கருதப்பட்டனர். ஆனால் இராமாநந்தர் மூடக் கட்டுப்பாடுகளைத் தகர்த்தெறிந்து, மக்கள் மொழியினிலே பக்திப் பிரசாரம் செய்ய ஆரம்பித்தார். இராமாநந்தர் 'ஸ்ரீ இராமார்சன் பத்ததி' என்ற நூலை இயற்றி இராமனுடைய வழிபாட்டிற்கு, எல்லோராலும் ஏற்கத்தக்க வழியினை வகுத்துக் கொடுத்தார்.

இஸ்லாம் மதத்தவரின் வருகையினால் அக்காலத்திலே நாட்டிலே ஒழுக்கமின்மை பரவலாக இருந்தது. தேசமெங்கும் சீர்கெட்ட சூழ்நிலையினிலே குழப்பமும், கொந்தளிப்பும், கலகமும், கலவரமும் மலிந்து கிடந்தன. இம்மாதிரியான ஒரு நிலையினிலே தருமசீலனான, ஒழுக்கத்திற்காகத் தன் வாழ்வையே அர்ப்பணித்த உத்தமனான இராமனின் இலட்சியத்தை மக்கள் முன் வைத்து, மக்களின் ஒழுக்கத்திலே ஒரு திருப்பம் கொண்டு வரவேண்டிய தேவையை சில பக்த கவிகள் உணர்ந்தனர். புலன்களின் இன்பத்தைவிட பக்தியிலே பரம இன்பம் நிலையாக உள்ளது என்பதை நினைவுறுத்த வேண்டிய ஒரு பொறுப்பு ஏற்பட்டது. இக்காலத்திலே தோன்றிய தலைசிறந்த கவிஞர் ஆவார் பக்த துளஸீதாஸ். துளஸீதாஸின் பெயரைக் கேள்விப் படாதவர்களே இந்நாட்டில் யாரும் இரார். ஹிந்தியிலே இலக்கியமேது என்று கிண்டலாகக் கேள்விக் குறிஎழுப்பும் அறிஞர்கள் கூட துளஸீதாஸ் என்று ஒரு கவிஞர் இருந்தார் எனபதை ஒப்புக்கொள்கின்றனர்.

துளஸீதாஸ் ராஜாபூர் என்ற கிராமத்திலே சரயு பாரீண பிராமணர்கள் குலத்திலே கி.பி. 1497ம் ஆண்டு தோன்றினார். இவரது தகப்பனார் பெயர் ஆத்மாராம், தாயார் பெயர் ஹுலஸீ. இவரது தாயார் இவர் குழந்தையாக இருக்கும் பொழுதே மறைந்துவிட்டார். ஆகவே இவரது தகப்பனார் இவரை முனியா என்ற வேலைக்காரியின் பொறுப்பிலே விட்டு விட்டார். முனியாவும் துளஸீதாஸ் ஐந்து வயதாகியிருக்கும் பொழுது இறந்து விட்டாள். துளஸீதாஸ் தெருவினிலே அனாதையாகத்திரிய ஆரம்பித்தார். இராமனந்தருடைய பரம்பரையில் மதகுருவாக வந்த நரஹரிதாஸ் அவர்கள் துளஸீதாஸின் நிலைகண்டு இரக்கம் கொண்டு அவரைத் தன்னோடு அழைத்துச் சென்றார். முதன்முதலாகத் துளஸீ தாஸின் பிஞ்சு மனத்தினிலே இராம பக்தியைப் புகட்டினவர் நரஹரிதாஸ் அவர்களே. இளமைப் பருவத்தையடைந்த பிறகு

துளஸீதாஸ் காசியிலுள்ள பஞ்சகங்காகாட் என்ற இடத்தில் வசிக்கும் சேஷசநாதன் என்ற ஒரு மிகப் பெரிய பண்டிதரின் சீடராக ஆனார். சேஷசநாதன் சம்பிரதாய முறைப்படி துளஸீதாஸிற்கு வேதம். புராணம், ஆகியவைகளைக் கற்பித்தார். பதினைந்து வருடம் கங்கைக் கரையினிலே வசித்து ஞானக்கரை கண்ட பிறகு துளஸீதாஸ் தன் பிறந்த ஊரான ராஜாபூருக்குத் திரும்பினார். அங்குள்ள தீனபந்துபாடக் என்பவரின் மகளான ரத்னாவளியை மணம் புரிந்தார். துளஸீதாஸின் மனத்திலே இராமபக்தியை அழியாச் சின்னமாக்கிய பெருமை ரத்னாவளியைச் சாரும். ஒரு தடவை ரத்னாவளியின் பிரிவாற்றமையினால் வருந்திய துளஸீதாஸ் இரவிலே யமுனை நதியை கடந்துப் பிறந்தகத்திலிருக்கும் ரத்னாவளியைச் சந்திக்கச் சென்றார். ஆனால் புலனுக்கு இலக்காகி ஒரு உடலைப் பெரிதும் மதித்து ஓடிவந்த துளஸீதாஸின் மதியீனத்தை மனைவி ரத்னாவளி வன்மையாகக் கண்டித்தாள். மனைவிக்காக உள்ள இந்த அன்பும் ஆர்வமும் துடிப்பும் தவிப்பும் கடவுள் இராமனுக்காக இருந்தால் எத்துணைச் சிறப்பாகவிருக்கும்? பெண்ணுக்கும், பெண்தரும் போதைக்கும் பிணைப்பட்ட உள்ளம் மன்னுக்குத் தலைவனான மாசிலா இராமனை துதித்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்? மனைவியின் கண்டிப்பு துலஸீதாஸின் கண்களைத் திறந்தது, மறுநாள் காலையே வீடுவாசலை விட்டுவிட்டுத் துறவறம் பூண்டு இராமன் புகழ்பாடியவாறு துளஸீதாஸ் கிளம்பிவிட்டார்.

காசியைத் தன் வாசஸ்தலமாக்கிக்கொண்டு அங்கிருந்தவாறு இராமாயண உபந்நியாசங்கள் செய்து கொண்டிருந்தார். உபந்நியாசம் செய்யுங் காலையில் அவர் மனதில் பலமுறை வடமொழியிலுள்ள இராமாயணத்தை எத்துணைப் புகழ்ந்து பாடினாலும் மக்கள் மனத்தில் அது பதியாது என்ற எண்ணம் தோன்றியது. ஆகவே மக்கள் மொழியிலே இராமபிரானின் கதையைப் பாடவேண்டுமென்ற அவர் உள்ளத்திலே மேலோங்கி நின்றது. இராமனுடைய

வாழ்க்கையுடன் சம்பந்தப்பட்ட இடங்களைத் தரிசிக்கும் பொழுதெல்லாம் அவருடைய மனத்திலே ஒரு தெய்வீக உணர்ச்சி பொங்கி வந்தது. கங்கைக் கரையிலே வீற்றிருந்து உபந்நியாசம் செய்வதால் மட்டும் பக்தியைப் பரப்ப முடியாது. மக்களின் நோக்கிலே ஒரு மாறுதலைக் கொண்டு வரமுடியாது என்பதை அவர் அறிந்திருந்தார். அக்காலத்தில் வழக்கிலிருந்து வரும் மொழியிலே துணிவுடன் கவிதை இயற்றும் ஆற்றல் ஒரு சிலருக்கே இருந்தது. வடமொழியன்றி வேறு மொழியில் கவிதை இயற்றுவதை ஈனமாகக் கருதிவந்த மனநிலை அப்போது மக்களிடையே இருந்தது. துளஸீதாஸ் இந்த மனநிலையின் பிணைப்பிலிருந்து நோக்கிப் பல்வேறு செய்யுள் முறைகளில் எழுத முற்பட்டார். காணுமிடமெல்லாம் இராமனின் கரிய நிறத்தைக் கண்டு அவன்மீது காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி நின்னையன்றி வேறொன்றும் அறியேன் என்று பரவசமாகப் பாட ஆரம்பித்தார் துளஸீதாஸ். அவரது உள்ளத்தின் உணர்ச்சி ஊற்றிலிருந்து பெருக்கெடுத்த இராமபக்தி கீழ்கண்ட நூல்களாக வடிவு பெற்றது. இராம கீதாவலீ, இராமசரிதமானஸ், வினய பத்திரிகா, இராம லலா நாஹசூ, பார்வதீ மங்கள், ஜானகி மங்கள், தோஹாவலீ, கிருஷ்ண கீதாவலீ, சத்சயீ, பாஹுக, வைராக்கிய சந்தீபினீ, இராமாக்ஞா ப்ரஸ்ன், பர்வை ராமாயண.

இராம கீதாவலீ– இது அக்காலத்தில் மதுராவைச் சுற்றி ஷௌரஸேனப் பிரதேசத்தில் பேசப்பட்டு வந்த ‘விரஜ பாாஷா’ என்ற வழக்கு மொழியிலே எழுதப்பட்டது. இது இராமாயணக் கதையைச் சுருக்கமாகக் கூறுகின்றது. இதன் கண் இராமருடைய பிறப்பு, அவருடைய பள்ளிப் பிராயத்திய விளையாட்டுகள் முதலியவைகள் விரிவாக விவரிக்கப் பட்டுள்ளன. இங்கு கவி மிகவும் நுண்ணிய கற்பனையைச் சொல் வடிவமாக்கித் தந்திருக்கின்றார். சீதையும், இராமனும் நகரைவிட்டுக் கானகம் ஏகும் வழியிலே அங்குள்ள பலதரப் பட்ட மக்களுடன் நடத்தும் பேச்சு வார்த்தைகள் மிகவும்

அழகாக வர்ணிக்கப்பட்டுள்ளன. வாத்ஸல்ய பாவத்தை வெளியிட்டுக் கிருஷ்ணனைப்போல் இராமனையும் நம் கண்முன் பிள்ளைக்கனி அமுதாகக்கொண்ட வந்தது நிறுத்தி விடுகின்றார். சொல் நயமும், ஒலி நயமும் இணைந்து இந்நூலின் செய்யுட்கள் நமது நுகர்ச்சி இன்பத்தை நூறு மடங்காக்குகின்றன. இயற்கையோடு இயற்கையாய், உள்ளுணர்வோடு ஒன்றி நமது மனத்திலே ஒரு தெய்வீக நிறைவை உண்டு பண்ணுகின்றன.

கவிதாவலீ–இது 'விரஜ பாாஷை'யில் ஏழு காண்டங்களில் இயற்றப்பட்ட இராமாயணக் காவியமாகும். இதன் கண்கவி இராம பக்தியின் மகத்துவத்தையும், தனது சுயசரிதையின் சில அம்சங்களையும் சேர்த்துள்ளார். காசியிலே தோன்றிய மகாமாரி நோயின் காரணமாக ஏற்பட்ட பயங்கர விளைவுகளையும் விளக்கமாக விவரித்துள்ளார். காடு நோக்கிச் செல்லும் இராமனது அழகையும், முதன் முறையாக வீடுவிட்டு வெளியே காலடி எடுத்து வைக்கும் சீதையின் தவிப்பையும், சீதையின் தவிப்பைக் கண்ட இராமனின் இதயத் துடிப்பையும் எத்துணை அழகாக வருணித்துள்ளார்!

**पुर तें निकसी वधू धरि धीर दिये मग में डग द्वै,**
**झलकीं पडी भाल कनी जल की पुटि सूखि गये मधुराधर वै।**

**फिर बूझति हैं चलनो अब केतिक पर्नकुटी करिहौ कित है,**
**तियकी लखि आतुरता पिय की अँखियाँ अति चारु चलीं जल च्वै।।**

வீடுவிட்டு வெளிக் கிளம்பி வீதியிலே வந்த பின்னர்.
ஈரடிதான் எடுத்து வைத்தாள் இராகவனின் மணத்துணையாள்

மேடுவிட்டுக் கீழ் பாயும் நீர்தனைப்போல் வியர்வை ஓட,
ஓடுபோல் உலர்ந்தனவே அமுதம் நிகர் அவள் அதரம்,
காடு எங்கே, குடிசை எங்கே காணிலனே என்று கூறி,
வாடி நிற்கும் மனையாளைக் கண்டதுமே
ஓடிவரும் ஓடைபோலப் பெருகினவே அண்ணல் கண்கள்

கவிதாவலியிலே பால காண்டத்திலிருந்து இலங்கா காண்டம் வரையிலும் உள்ள கதை வருணிக்கப்பட்டுள்ளது. இலங்கையைத் தீக்கொள்ளும் படலம் இக்காப்பியத்திலே மிகவும் அழகிய முறையில் வருணிக்கப்பட்டுள்ளது.

இராம லலா நஹசூ-இது சோஹர் என்ற செய்யுள் நடையில் இயற்றப்பட்ட ஒருநூல் இராமர் பூணூல் பூண்ட உற்சவத்தை இது விவரிக்கின்றது. இன்னும் வடக்கே கல்யாண காலங்களிலும், பூணூல் பூட்டும் உற்சவங்களிலும் இது பாடப்படுகின்றது.

பார்வதி மங்கல்–164 செய்யுட்களிலே சிவன் பார்வதி இவர்களது திருமண வைபவம் இந்நூலில் வருணிக்கப்பட்டது. மும்மைசார் உலகுக்கெல்லாம் மூலமான முக்கண்ணனை மணமுடிக்கத் தவக்கோலம் பூண்ட உமையைச் சோதிக்கச் சிவபிரான் பிரம்மசாரியாக அவள் முன் தோன்றும் காட்சியையும், உமை அவர்களிக்கும் பதில்களையும் மிகவும் அழகிய நடையில் புனைந்துரைத்துள்ளார்.

ஜானகீ மங்கல்–இதன்கண் இராமபிரானின் விவாக வைபவம் வருணிக்கப்பட்டுள்ளது.

தோஹாவலீ–இந்நூலில் பக்தனது நிலை, பக்தியின் பிரபாவம், இராம இராஜ்ஜியத்தின் கற்பனை, கவியினது சுயசரிதை, தாசியின் வரலாறு, அக்காலச் சமூகத்தின் நிலை ஆகியவை பற்றிய பல செய்யுட்கள் காணப்படுகின்றன. இராமன் மீது தனக்குள்ள இணையற்ற அன்பைக் கவி மிகவும் அழகாகச் சித்தரித்துள்ளார்.

கிருஷ்ண கீதாவலீ–இந்நூலின் கண் கிருஷ்ணனின் பிள்ளைப் பிராயத் திருவிளையாடல்கள், இந்திரனின் கோபம், கோவர்தன மலையைக்குடையாக்கியபடலம், கோபிகைகளின் விரகதாபம், உத்தவரின் தூது, வண்டுப்பாடல், திரௌபதியின் துகிலுரிப்படலம் ஆகியவைகள் கூறப்பட்டுள்ளன. உருவமற்றக்

கடவுளின் வழிபாட்டைக் கண்டித்து, ஸகுணபரம்பரையைப் போற்றி இதில் துளஸீதாஸ் அநேக செய்யுட்களை இயற்றியுள்ளார்.

வைராக்கிய சந்தீபினீ - தோஹா, ஸோரட்டா என்ற இருவகைக் செய்யுள் முறையில் இயற்றப்பட்ட இந்நூலில் இராமபிரானது மகிமை, சாதுக்களின் மேன்மை ஆகியவை வருணிக்கப்பட்டுள்ளன.

இராமாக்ஞா ப்ரஸ்ன-இதில் லவ குசர்களின் பிறப்பு, சீதையின் மறு வனவாசம், மண்ணில் அடைக்கலம் புகுதல் ஆகிய நிகழ்ச்சிகள் விவரிக்கப்பட்டுள்ளன.

பரவை ராமாயண்-பரவை என்ற செய்யுள் நடையிலே இராம காதையின் சில முக்கியமான பகுதிகள் இதில் வரையப்பட்டுள்ளன. சீதையின் அழகை அடிமுதல் முடிவரை பாங்குற உரைத்துள்ளார். இதனிடை பற்பல பொருள் நயம் பொலிவுறும் அணிகளை நாம் காண்கிறோம்.

விநயபத்ரிகா-இராம சரித மானஸ"க்குப் பிறகு துளஸீதாஸின் மிகச் சிறந்த நூலாக இது கருதப்படுகிறது. துளஸீதாஸின் பணிவுக்கும், விநயத்திற்கும் இந்நூல் ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகின்றது. இதன்கண் கவி துளஸீதாஸின் இராமனுடைய அரசவையை நம் அகக்கண் முன் கொண்டு வந்து நிறுத்திவிடுகின்றார். மையோ மரகதமோ மறிகடலோ மழைமுகிலோ வென வையகமே வியக்குமாறு இராமன் அமர்ந்திருக்க, ஓவியம் உயிர் பெற்றது போல் அருகினிலே சீதை வீற்றிருக்க, மன்புகழ் பெருமை, மரபுளோர் புகழ்கள் எல்லாம் தன் புகழ் ஆக்கிக்கொண்ட பரதன் அருகினிலே நின்றிருக்க, அன்று அண்ணனும் அண்ணியும் துயிலுங்கால் கங்குலின் எல்லை காணக் கண்ணிமை கொட்டாதவாறு காத்திருந்த இலக்குமணன் கண்களில் ஆனந்த நீர் சேர நின்றிருக்க, அஞ்சிலே ஒன்றுபெற்றான் அண்ணலின் அருமலர்ச்சேவடியில் பணிந்திருக்கக் காணும் கண்

கொள்ளாக்காட்சியைச் செவ்வனே சித்தரித்து விடுகின்றார் துளஸீதாஸ். பணிவும் பண்பும் அன்பும் உருக்கமும் இந்நூலின் கண் அழகாகச் சித்தரிக்கப் பட்டுள்ளன. கவி சீதை இலக்குமணன் பரதன் சத்ருக்னன், அனுமான் ஆகியவர்களின் துதிபாடித் தன்னுடைய பணிவையும் பக்தியையும் தெரியப் படுத்துகின்றார். பிறகு கடவுளிடம் தன் குற்றங்குறைகளை மறந்து ஆட்கொள்ளுமாறு வேண்டுகின்றார். இந்நூலிலே உருக்கமும் ஒலி நயமும் சேர்ந்து படிப்பவர்களின் மனத்திலே ஒரு நிரந்தரமான பிரபாவத்தை உண்டு பண்ணிவிடுகின்றது. விநயபத்திரிகா ஹிந்தியின் சிறந்த நூல்களுள் ஒன்று என்பதில் சற்றும் ஐயமில்லை.

இராமசரிதமானஸ் : மனிதனின் தெய்வத்தன்மையை விவரிக்கும் இதிகாச புத்தகங்களுக்குள் தலைசிறந்ததாகக் கருதப்படுவது இராமயணமே. இது இந்நாட்டிலக்கியத்தில் மட்டுமின்றி உலக இலக்கியத்திலேயே முதல் பொருங் காப்பியமாகக் கருதப்படுகின்றது. கிரௌஞ்ச பட்சிகளுக்குள் ஒன்று வேடனால் வீழ்த்தப்பட்டது கண்டு கருணையினால் உருவாகிய வால்மீகியின் உள்ளத்தின் ஓட்டமே இராமாயணம். வால்மீகியினால் எழுதப்பட்ட வடமொழி இராமாயணத்திற்குப் பிறகு தமிழில் `எழுதப்பட்ட கம்பராமாயணம் தான் சிறந்த இராமயண நூலாகக் கருதப்படுகிறது. கம்பராமாயணம் இயற்றப்பட்டு 700 ஆண்டுகட்குப் பின்னர் துளஸீதாஸ் அவர்களால் 'இராம சரிதமானஸ்' என்ற பெயர் கொண்ட ஹிந்தி இராமாயணம் இயற்றப்பட்டது. வால்மீகி தன் காலத்திலேயே வாழ்ந்த மாசற்றப் பேரரசனின் புகழைப் பாடினார். கம்பரோ வெனின் இந்திய கலாசாரத்திற்கு அடிப் படையான ஒரு சக்கரவர்த்தியைப் புகழ்ந்து பாடலியற்றினார். ஆனால் துளஸீதாஸோ மனித உருவிலே திரு அவதாரம் எடுத்த நாராயணனின் புகழ் பாடினார். 'இராம சரித மானஸ்' என்ற இந்நூலிலே முதன் முறையாக இராமனுக்குத் தெய்வத் தன்மை கற்பிக்கப்பட்டது. துளஸீதாஸ் இராமனின்

வாழ்க்கையை வருணிக்கும் பொழுது தன் அடியிலும் வெளி படுத்துகின்றார். மானஸின் முதற் காண்டத்தில் பாதிக்கும் மேற்பட்ட பகுதி கடவுளின் அவதாரத்தைப் பற்றியும், நேர்மை, அஞ்சாமை, ஒழுக்கம் ஆகியவற்றைகளை உலகத்திலே நிலைநாட்ட வேண்டிய தேவையைப் பற்றியும் விவரிக்கின்றது. துளஸீதாஸை நாம் ஒரு சிறந்த கவிஞர் என்றோ அல்லது எல்லாம் கற்றறிந்த அறிஞர் என்றோ மட்டும் கருதாமல் உள்ளமே இராம மயமான ஒரு பக்தர் என்றும் கருதுகின்றோம். இராமனின் தெய்வத் தன்மையை விவரித்து மக்களின் மனத்திலே சீரான ஒழுக்கத்தை நிலைநாட்டு வதற்காகத்தான் துளஸீதாஸ் இராமாயணத்தை இயற்றினார். இதன் ஒவ்வொரு செய்யுளிலும் நேர்மையும், ஒழுக்கமும் நிறைந்த வாழ்க்கைக்கு இன்றியமையாத இலட்சியங்களை வலியுறுத்துகின்றார். அக்காலத்திய சமுதாயத்தில் வெகுவாக இருந்து வந்த தெய்வபக்தியின்மை, ஒழுக்கமின்மை ஆகியவை களை அணைபோட்டுத் தடுத்து நிறுத்துவதற்காகத்தான் துளஸீதாஸ் இராமாயணத்தை இயற்றினார் என்று கூறுபவர்களும் உண்டு. ஆனால் அவர் எந்த நோக்கத்துடன் இக்காவியத்தை இயற்றியிருந்த போதிலும் இது இலக்கியத் திற்கு ஒரு தலை அணியாகவும், சமுதாயத்தின் சீர்கேட்டிற்கு ஒரு சாவுமணியாகவும், ஆற்றலிழந்து, அறிவிழந்து, அஞ்சி நிற்கும் மக்களை உய்விக்கும் ஆலயமணியாகவும், நீதியையும், நேர்மையையும் தட்டியெழுப்பும் ஆராய்ச்சி மணியாகவும் திகழ்கின்றது. சொல்நயம், பொருள்நயம், ஒலி நயம் ஆகிய மூன்றுமே இக்காவியத்தின் கண் எங்கும் மேம்பட்டு விளங்குகின்றன. பாத்திரப் படைப்பிலே கவியினது ஆற்றல் பாங்குறப் பொலிகின்றது. இராமாயணப் பாத்திரங்களின் புனிதத்தன்மைக்குச் சற்றும் ஊறு நேராவண்ணம் இராவணன் போன்ற தீய பாத்திரங்களின் படைப்பிலும், அளவுக்கு மீறிய ஆத்திரத்தையோ அல்லது வெறுப்பையோ வெளியிடாமல் துளஸீதாஸ் நயம்பட உரைத்துள்ளார். இராமன் ஆண்டவன்

என்பதையும், தான் அவனுக்கு அடிமை என்பதையும், தான் ஒவ்வொரு அடியிலும் வலியுறுத்தியுள்ளார்.

கம்பராமாயணத்தின் கற்பனையை இவர் பற்பல இடங்களில் புகுத்தியுள்ளார் என்பதிலிருந்து இவர் கம்பராமாயணத்தைப் பற்றியும் அறிந்திருந்தார் என்பது புலனாகிறது. களவியல் பற்றிய கம்பனின் கவிதைகளைப் பின்பற்றி இவரும் இராமன் சீதை களவியலை நயம்பட உணர்த்தியுள்ளார். அண்ணலும் நோக்க, அவளும் நோக்கக் காணும் அன்பின் அளவிலா மோன நிலையை மேம்பட விளக்கியுள்ளார்.

கூனியைப் பற்றிக் கூறும் பொழுதும் அவளுடைய நிலையில் மாசு கற்பிக்காதவாறு பழியைக் கலைமகளின் தலையில் சுமற்றிக் கதையை வளர்த்துச் செல்கின்றார். குகன், சுக்கிரீவன், ஆஞ்சநேயன், விபீஷணன் ஆகிய பாத்திரங்களின் மனத்திலே அளவிடமுடியாத இராம பக்தியை புகுத்தி அவர்களுடைய பக்தியை ஆதாரமாகக் கொண்டு தன்னுடைய பக்தியைக் காண்பித்துள்ளார். கிரியர்ஸன் தன்னுடைய "மோடர்ன் வர்நாகுலர் லிடரேசர் ஆப் ஹிந்துஸ்தான்' என்ற நூலில் கூறியபடி காதைகளாலோ, புராணங்களாலோ மற்ற தெய்வ வழிபாட்டு முறைகளாலோ, ஆயிரமாண்டிற்கு மேற்பட்ட காலத்தில் பரப்பட்ட பக்தி துளஸீதாஸின் இராமாயணத்தினால் மட்டும் ஒரு சில ஆண்டுகளில் எல்லோருடைய மனத்திலும் வேரூன்றுமாறு பரப்பப்பட்டது. துளஸீயினுடைய இராமாயணத்தில் விநயம் வெளியிடப்பட்டது போல் வேறு எந்த நூலிலுமே வெளியிடப்படவில்லை. வைஷ்ணவ பக்தி, சைவ பக்தி இரண்டிற்கும் இடையேயுள்ள வேறுபாடுகளைத் தகர்தெறியச் சிவனை இராம பக்தராகவும், இராமனைச் சிவபக்தராகவும் சித்தரித்துள்ளார். இராமன் மேல் இவர் கொண்ட அன்பு வேறு எந்த பாத்திரத்தின் மேலும் யாராலும் எக்காலத்திலும் கொள்ளப்படவில்லை. இந்திய இலக்கியத்தின்

ஒரு தலைசிறந்த நூல் "இராம சரித மானஸ்' என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

அக்ரதாஸ் : இவர் இராமாநந்தரின் சிஷ்ய பரம்பரையில் கிருஷ்ணதாஸ் பயஹாரி என்பவரின் சீடரும், "பக்தமால்" என்ற பிரசித்தி பெற்ற நூலை வரைந்த நாபாதாஸின் குருவுமாவார். கிருஷ்ணதாஸ் பயஹாரி தன்னுடைய காலத்தில் தலைசிறந்து விளங்கிய கிருஷ்ண பக்தர்கள் எண்மருள் ஒருவராகக் கருதப்பட்டு கோஸ்வாமீ விட்டல்நாத் அவர்களின் 'அஷ்டசாப்' என்ற நூலில் இடம் பெற்று கௌரவிக்கப் பட்டவர். ஆனால் வியக்கதக்க வகையில் தன்னுடைய குருவிற்கு மாறாக அக்ரதாஸ் அவர்கள் இராமனிடம் பக்தி கொண்டவராக விளங்கினார். இவர் அஜ்மீரைச் சேர்ந்த கால்டா என்ற இடத்தில் வசித்து வந்தார். இவருடைய நூல்கள் 'ஹிதோபதேஷ் உபாக்யான் பாவனீ', 'த்யான மஞ்சரீ', 'இராம த்யான மஞ்சரீ', 'குண்டலியா', என்பவையாகும். 'ஹிதோப தேஷ் உபாக்யான பாவனீ' என்பது இவருடைய தலைசிறந்த நூலாகக் கருதப்படுகிறது. இந்நூல் குண்டலியோ என்ற யாப்பில் எழுதப்பட்டதாகும். இந்த யாப்பு இந்நூலில் மிகச் சிறப்பாகக் கையாளப்பட்டிருப்பதால் 'குண்டலியா இராமயணம்' என்ற பெயராலேயே இந்நூல் சிறப்புப் பெற்று விட்டது. நூலின் பெயருக்கேற்ப இதில் ஐம்பத்தி இரண்டு சூத்திரங்களே இருக்கவேண்டியிருக்க அறுபத்து எட்டு செய்யுட்கள் அடங்கியிருப்பதால் பிற்காலத்தில் செருகுக் கவிகள் சேர்க்கப்பட்டிருக்கலாம் என்று தோற்றுகிறது 'இராமயண மஞ்சரீ' என்ற நூலும் பெரிதும் பிரசித்தி பெற்றுள்ளது. இதில் அறுபத்து ஒன்பது செய்யுட்களில் இராமனுடைய வடிவழகு, ஸரயூ நதிக் கரையில் அமைந்துள்ள அயோத்திமாநகரின் எழில் தோற்றம் ஆகியவை வருணிக்கப்பட்டிருக்கின்றன.

நாபாதாஸ்: ஆதவனின் ஒளியில் தாரகைகள் ஒளியிழந்து மறைந்து விடுவதுபோல் இராம பக்தி பரம்பரையில்

பிற்காலத்தில் தோன்றிய கவிகள் துளஸீதாஸ் அவர்களின் சிறந்த கவித்திறனுக்கு முன் சிறந்து விளங்கமுடியவில்லை. இருந்தபோதிலும் நாபாதாஸ் அவர்கள் 'பக்தமால்' என்ற தம் நூலின் காரணமாக அமரத்தன்மை பெற்றுவிட்டார். இவர் அக்ரதாஸ் அவர்களின் சீடராவார். தம்முடைய குருவினால் உற்சாக மூட்டப் பெற்றவராய் இவர் 'பக்தமால்' என்ற நூலின் வாயிலாக இருநூறு பக்த கவிகளை உலகிற்கு அறிமுகப் படுத்தியிருக்கிறார். சூத்திர உருவில் ஒவ்வொரு கவியைப் பற்றி ஒரே செய்யுளில் கூறப்பட்டிருப்பதால் இந்நூல் எளிய நடையில் அமையவில்லை. முன்னூற்றுப் பதினாறு செய்யுட் களைக் கொண்ட இந்நூலில் கவிகளைப் பற்றிய பூரணமான வாழ்க்கை வரலாறு கூறப்படாமல் பக்தியின் சிறப்பைக் காட்டக்கூடிய நிகழ்ச்சிகளே வருணிக்கப்பட்டிருக்கின்றன. பிரியதாஸ் என்பவரின் விரிவுரை மூலமாகவே இந்நூல் பொருள் அறியக்கூடியதாக இருக்கின்றது. பக்தர்களிடையே இந்நூல் பெரிதும் மதிக்கப்படுகிறது.

நாபாதாஸ் துளஸீதாஸ் அவர்களின் காலத்தைச் சேர்ந்தவராவார். இவர்கள் காலத்தில் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சி அக்காலத்து பக்த கவிகளின் மனப்பான்மையைக் காட்டுவதாக அமைந்துள்ளது. ஒரு முறை துளஸீதாஸைச் சந்திக்க எண்ணி நாபாதாஸ் காசி சென்றிருந்தார். ஆனால் துளஸீதாஸ் தியானத்தில் ஆழ்ந்திருந்ததால் சந்திக்க இயலாமல் திரும்ப நேர்ந்தது. தியானம் கலைந்து இச்செய்தி துளஸீதாஸ் பெரிதும் மனம் வருந்தித் தானே நாபாதாஸைச் சந்திக்க எண்ணிப் பிருந்தாவனம் சென்றார். அச்சமயம் சாதுக்களுக்கு விருந்து படைக்கப்பட்டுக் கொண்டிருப்பதைக் கண்டு துளஸீதாஸ் சாதுக்களின் வரிசையில் ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டுவிட்டார். நாபாதாஸ் தன்னைக் கர்வம் படைத்தவர் என்று எண்ணி விடக்கூடாது என்பதே அவர் நோக்கம். உணவு படைக்கப்பட்ட பொழுது உணவை ஏற்கப் பாத்திரம் இல்லாததால் துளஸீதாஸ் சட்டென்று சென்று ஒரு

சாதுவின்பாத அணியை எடுத்துவந்து அதில் உணவை ஏற்று உண்ண ஆரம்பித்தார். இதைக் கண்ணுற்ற நாபாதாஸ் உளம் நெகிழ்ந்து துளஸீதாஸை மார்புறத்தழுவிக் கண்ணீர் பெருக்கினார். இவர் தன்னுடைய நூலில் துளஸீதாஸை வால்மீகியின் அவதாரம் என்று கூறியிருக்கின்றார். அவதி மொழியில் ஒன்றும், விரஜபாஷையில் ஒன்றுமாக 'அஷ்டயாம்' சம்பந்தமான மேலும் இரு நூல்கள் இவரால் எழுதப்பட்டதாக அறியப்படுகின்றது. இவருடைய இயற்பெயர் நாராயணதாஸ் என்பதாகும். இவர் 'டோம்' என்ற சக்கிலிய மரபைச் சேர்ந்தவர்.

இராம பக்தி பரம்பரையில் மேலும் பல கவிகள் தோன்றியிருக்கின்றார்கள். அவர்களில் பிராணசந்த் சௌஹான், ஹிருதயராம், வேணீமாதவதாஸ், ராய்மல் பாண்டே, பெருங்காப்பியத்தை ஹிந்தியில் நாடக உருவில் சாதித்த ஒரே கவி பிராணசந்த் சௌஹான் ஆவார். இவருடைய நூலான 'இராமாயண மஹாநாடக்' என்பது சிறு மாறுதலுடன் அரங்கில் நடிக்கக் கூடியதாக அமைந்துள்ளது. ஹிருதயராம் அவர்கள் ஹனுமந் நாடக் என்ற சமஸ்கிருத நூலை ஹிந்தியில் மொழிபெயர்த்துள்ளார். பக்த சிரோமணி துளஸீதாஸ் அவர்களின் வாழ்க்கை வரலாற்றை 'கோஸாயீ சரித்ர' என்ற பெயரில் வரைந்து வேணீமாதவதாஸ் புகழ் பெற்றுவிட்டார். துளஸீதாஸின் 'ஹனுமான் பாஹுக்' என்ற நூலைக் தழுவி 'ஹனுமான் சரித்ர' என்ற நூலை ராய்மல் பாண்டே அவர்கள் இயற்றியுள்ளார். பிரியதாஸ் அவர்கள் நாபாதாஸின் 'பக்தமால்' என்ற நூலுக்கு விரிவுரை வரைந்து பெரும்பணியைப் புரிந்துள்ளார். பிற்காலத்திலும் அதாவது யாப்பணி அல்லது சிருங்கார இலக்கியகாலம், மேலும் புத்துணர்ச்சி இலக்கிய காலத்திலும் இராமயணத்தைத் தழுவிப் பல நூல்கள் ஹிந்தியில் எழுதப்பட்டுள்ளன. அவற்றைப் பற்றிப் பின்னால் விரிவாகக் கூறப்படும்.



# கிருஷ்ண பக்தி இலக்கியம்

"சீதையின் சிந்தை கவர்ந்த குணக்குன்றாம் இராமனின் புகழ்பாடி முக்தியை அடையும் வழியினை எவ்விதம் இராமா நந்தர் வகுத்து அருளினாரோ அவ்விதமே கார்வண்ணன் கண்ணனின் துதிபாடி உய்யும் வகை உணர்த்தினார் வல்லபர். பரம்பொருளை அடைவதற்குப் பக்குவம் நிறைந்த மனமும், தூய பக்தியும், கரையிலாக் காதலும் மிக மிகத் தேவையானது என்று வலியுறுத்தினார் அவர். கொண்டல் வண்ணனின் கோல உருவிலே சிந்தை மயங்கிச் செய்கை மறந்து ஒன்றி நிற்கும் கோபிகைகளின் அன்பிலே நாம் இந்நிலையைத்தான் காண்கின்றோம். பரம்பொருளின் புகழ்பாடி அவனை அடைவதற்கு அவனுடைய அருள் அவசியமாக இருக்கிறது என்று வல்லபாச்சாரி யார் கூறியுள்ளார். இதனால்தான் இவருடைய சம்பிரதாயம் 'புஷ்டி மார்கம்' என்று அழைக்கப்படுகிறது.

வல்லபர் பாரதத்தின் பல பாகங்களிலும் சுற்றித் தன்னுடைய கொள்கையைப் பரப்பியதுடன், சாஸ்திர சம்பந்தமான தர்க்கங்களிலும் தலைசிறந்து விளங்கினார். கடைசியில் இவர் மதுராவை அடைந்துத் தனது தருமபீடத்தை நிறுவி வல்லப சம்பிரதாயத்திற்கு வழி வகுத்தார். இந்த சம்பிரதாயத்தின் வழிபாட்டு முறையில் அன்பிற்கும், போகத்திற்கும், களியாட்டத்திற்கும் முக்கியத்துவம் கொடுக்கப் பட்டது. ஆகவே, இக்காலத்தில் தோன்றிய பக்தர்கள் காதலாகிக் கசிந்துருகிக் கண்ணனைப் போற்றிய பாடல்களில் அன்பு வெள்ளம் கரை புரண்டோடியது. இப்பக்திப் பண்கள் பாரத மக்களின் பழுதடைந்த மனத்தைப் பண்படுத்தி, வாழ்க்கையில் இன்பத்தையும், பேரானந்தத்தையும் நல்கின. ஏனைய சம்பிரதாயங்களைச் சார்ந்தவர்கள்கூட இப்பக்தி நெறி யினால் பெரிதும் கவரப்பட்டனர். இவர்கள் மகாபாரதத்தில் வருணிக்கப்பட்டுள்ள அரசியல் நீதியில் தேர்ந்தவரும், வீர

தீர பராக்கிரமம் படைத்தவருமான கிருஷ்ணனைத் தங்களது வழிபாட்டிற்கு ஏற்கவில்லை. ஆனால் பாகவதத்தில் வருணிக்கப்பட்டுள்ள ஆயர்பாடியில் ஆநிரை மேய்த்துக் கொண்டு ஆய்ச்சியரின் உள்ளம் கவர்ந்த கார்மேக வண்ணனையே காமுற்று ஏற்றனர். ஆகவே, இப்பரம்பரையில் தோன்றிய கவிகள் கண்ணனது பிள்ளைப்பிராய விளையாட்டுகளுக்கும், கோபிகளுடன் நடத்திய ராஸ லீலைகளுக்கும்தான் முக்கியத்துவம் கொடுத்துள்ளனர். அத்துடனின்றி அளவற்ற அழகிய குணங்களுடன் ஆதியஞ் சோதியாய்ப் பரமபதத்தில் வீற்றிருக்கும் பெருமான் ஆன்மாக்கள் மீது வைத்த அளப்பரிய அன்பினால், கருணையால், மானிட உருத்தரித்து மாநிலத்தில் வந்துதித்து உலக மக்களுக்கு அன்பின் சிறப்பை எடுத்துக் காட்டவேவ அவதரித்தான் என்பது இச்சம்பிரதாயத்தின் கொள்கை ஆகவே இக்காலத்தில் இயற்றப்பட்ட கவிதைகள் அன்பிற்கும், காதலுக்கும் எடுத்துக் காட்டாக விளங்குகின்றன.

இவ்வாறு வடநாட்டில் கண்ணன் புகழ் பரவுவதற்கு காரணமாக இருந்தவர்கள் தென்னகத்தைச் சேர்ந்த ஆழ்வார்களே யாவர். ஒருத்தி மகனாகப் பிறந்து ஒருத்தி மகனாக வளர்ந்து ஓங்கி உலகளந்த உத்தமன் புகழை ஓங்கச் செய்ய இவர்கள் தெள்ளிய தமிழிலே இனிய பக்திப் பாடல்களை இயற்றினர். இவர்களது கனிந்த பக்தி விந்திய மலையைக் கடந்து வடக்கிலும் பரவ ஆரம்பித்தது.

இவ்விதம் வடநாட்டில் தோன்றிய சிறந்த பக்தர்கள் வீர காப்பிய காலத்திலேயே வாழ்ந்து வந்தனர். கிருஷ்ணபக்தி பரம்பரையில் முதன் முதல் தோன்றியவராகக் கருதப்படுபவர் மிதிலைக் குயில் வித்யாபதியாவார். கண்ணனின் காதலில் கனிந்து இக்குயில் இசைத்த இனிய பண்கள் பாமர மக்களின் மனத்திலும் பக்தியைக் கிளர்த்தெழச் செய்தன. ஆனால் இவரது பாடல்களில் நாம் பெரிதும் ஜயதேவரது கீதகோவிந்தத்தின் சாயலை காண்கிறோம். கோவர்தன மலையை குடையாக்கி

கோகுலம் காத்த கோவிந்தனின் மையலில் மதுவுண்ட வண்டைப்போல் மயங்கி நிற்கும் இராதையின் ஒப்பிடற்கரிய எழிலையும், கண்ணன்பாற்கொண்ட அவளின் அளப்பரிய அன்பையும் ஜயதேவரைப் போன்றே வித்யாபதி அவர்கள் சீரிய முறையில் சித்தரித்துள்ளார். வேய்ங்குழலோனின் பிரிவைத்தாள இயலாத இராதையாகத் தானே ஆகி அவளது விரகதாபத்தையும், அவளைக் காணாத கண்ணனது கலக்கத்தையும் அழகிய முறையில் விளக்கியுள்ளார் அவர்.

**यदि हरिस्मरणे सरसे मनो, यदि विलासकलासु कुतूहलम्।**
**मधुर कोमल कान्त पदावली, श्रुणु तदा जयदेव सरस्वतीम्।।**

என்றபடி எவ்வாறு ஜயதேவர் அவர்கள் மக்களின் மனநோயைப் போக்கி முக்திப்பயன் தரக்கூடிய ஹரிஸ்மரணம் என்னும் மருந்தைக் காதற்களியாட்டங்கள் என்னும் தெவிட்டாத தேனைக்கலந்து தன் கீதகோவிந்தத்தின் மூலமாக அருளித் தந்தாரோ அதே போன்று வித்யாபதி அவர்களும் தன்னுடைய பதாவலீ என்னும் நூலில் காதலின்பத்தைச் சித்தரிப்பதின் மூலம் படிப்போர் உள்ளங்களில் பக்திப் பெருக்கை ஊற்றெடுக்கச் செய்திருக்கின்றார்.

இப்படியாக ஸ்ரீவல்லபாச்சாரியார் அவர்களால் நிறுவப் பட்ட புஷ்டிமார்க்கம் நாளொரு பக்தனையும், பொழுதொரு பாடலையும் பெற்றுத் தழைத்தோங்கி வந்தது. தனது தந்தை தோற்றுவித்த தருமநெறியைத் தழைத்தோய்ங்கச் செய்யும் பொறுப்பை ஏற்றார், அவரது அருமை மைந்தரான விட்டல் தாத். இவர் தன்னுடைய காலத்தில் தலைசிறந்து விளங்கிய பக்தர்கள் எண்மரைத் தேர்ந்தெடுத்து 'அஷ்டசாப்' என்ற பெயரில் பக்தர்கள் குழாம் ஒன்றை அமைத்தார். இவர்கள் ஸீர்தாஸ், கும்பன்தாஸ், பரமானந்ததாஸ், கிருஷ்ணதாஸ், சீதஸ்வாமி, கோவிந்தஸ்வாமி, சதுர்புஜதாஸ், நந்ததாஸ் என்பவர்களாவர், இக்கவிகளுள் மிகவும் மேன்மை பெற்று விளங்கியவர் பக்தஸூர்தாஸ் ஆவார். ஸூர்தாஸ் – பக்தி

இலக்கியத்தில் ஸூர்தாஸ் துளஸீதாஸ் இருவரும் சூரிய சந்திரர்களாகப் பிரகாசிக்கின்றார்கள். கிருஷ்ணபக்த கவிகளுள் ஸூர்தாஸின் ஸ்தானம் மிக உயர்ந்ததாகும். ஸ்வாமி விட்டல் நாத் அவர்கள் ஸீர்தாஸை முதற்கண் வைத்து அஷ்டசாப் என்ற பிரசித்தி பெற்ற பக்தர் குழாமை நிறுவினார். இவர் புஷ்டி மார்க்கத்தை ஸ்தாபித்து பிரேம லக்ஷணா பக்தியை வலியுறுத்திக் கூறிய ஸ்வாமி வல்லபாச்சாரியார் அவர்களின் தலையாய சீடராவார். ஸ்ரீவல்லபாச்சாரியருடன் தொடர்பு ஏற்படுவதற்கு முன் இவர் ஆக்ராவிலிருந்து மதுரா செல்லும் மார்கத்தில் 'கஊகாட்' என்ற இடத்தில் வசித்துவந்தார். அக் காலத்தில் தன்னுடைய தாழ்மையை எடுத்துக்கூறி கடவுளின் அருளை வேண்டிப்பல பாடல்கள் இயற்றிருந்தார். கோவர்தன மலையின்மீது பகவான் ஸ்ரீநாத்தின் ஆலயம் அமைக்கப்பட்ட பின்னர் ஒரு சமயம் வல்லபர் கஊகாட்டில் தங்க நேர்ந்த பொழுது ஸூர்தாஸைக் சந்தித்து அவருடைய பாடல்களைக் கேட்டு மகிழ்ந்தார். அப்பொழுது முதல் வல்லபரால் உற்சாக மூட்டப்பட்டவராய் தாழ்ந்து. இரங்கிக் கடவுளின் அருள்பாடி பாடல்கள் இயற்றுவதை விடுத்து லீலா மூர்த்தியான கண்ணனின் திருவிளையாடல்களை வருணித்துப்பாட ஆரம்பித்தார். மேலும் வல்லபாச்சாரியாரின் விருப்பத்தை ஏற்று பகவான் ஸ்ரீநாத்தின் ஆலயத்தில் பூஜா காலங்களில் துதிப் பாடல்களை இயற்றிப் பாடி வந்தார். இவ்வரலாறு 'சௌராஸீ வைஷ்ணவன் கீ வார்த்ததா' என்ற நூலின் வாயிலாக அறியப் படுகின்றது. ஸூர்தாஸ் கோவர்தன மலையில் தங்கியிருந்து ஸ்ரீநாத்தின் கோயிலில் பக்தி பாடல்கள் பாடும் பணியில் ஈடுபட்டிருந்தார் என்பதற்குச் சான்றுகள் ஸூர்தாஸின் 'ஸூரஸாராவலீ' என்ற நூலிலும் காணக்கிடக்கின்றன. மேலும் வல்லபாச்சாரியாரின் புதல்வரான விட்டல்நாத் அவர்ாகளின் முன்னிலையில் கோவர்தன மலையின் அடிவாரத்தில் பரஸோலி என்ற கிராமத்தில் ஸூர்தாஸ் உயிர் நீத்தார் என்ற விவரமும் சௌராஸி வைஷ்ணவன் கீ வார்த்தாவின் மூலமாக அறியப்படுகின்றது. மேலே கூறப்பட்ட பல நிகழ்ச்சிகளையும்

ஆதாரமாகக் கொண்டும் மேலும் பல சான்றுகளைச் சுட்டியும் இராமசந்திர சுக்ல அவர்கள் ஸூர்தாஸின் காலத்தைக் கி.பி. 1483 முதல் 1563 முடிய வரையுறுத்திருக்கின்றார்.

ஸூர்தாஸ் அவர்கள் 'ஸாஹித்ய லஹரீ' என்ற தன்னுடைய நூலில் தன்னுடைய வம்ச பரம்பரையைப் பற்றிக் கூறியிருக்கின்றார். அதன்படி அவர் வீரகாப்பிய காலத்தின் தலைசிறந்த நூலான 'பிருத்வீராஜராஸோ'வை எழுதிய மகாகவி சந்தபர்தாயின் வம்சத்தில் தோன்றியவராகின்றார். இவருடைய தந்தையின் பெயர் ஹரீசந்த் என்பதாகும். இவருக்கு ஆறு சகோதரர்கள் இருந்தனர். ஆனால் அவர்கள் முகம்மதியர்களை எதிர்த்துப் போரில் கொல்லப்பட்டனர். குருடரான ஸூர்தாஸ் தனியராகி ஆதரவற்ற நிலையில் பல நாட்கள் அலைந்து திரிந்து கொண்டிருந்தார். ஒருநாள் அவர் தவறி கிணற்றில் விழுந்துவிட்டார். வெளியேற வழியறியாத வரராய் அவர் ஏழு நாட்கள் அக்கிணற்றிலேயே கிடந்தார். ஏழாவது நாள் கண்ணன் காட்சியளித்து அவருக்குக் கண் பார்வையையும் அளித்து அருளினார். கண்ணனைக் கண்ட கண்களினால் மாயைசூழ் உலகத்தைக்காண விரும்பாதவராய் ஸூர்தாஸ் தன் புறக்கண்களினால் முன்போலவே குருடராயிருப்பதையே விழைந்தார். இந்நிகழ்ச்சி பற்றி மேலும் கீழ்வருமாறு கூறப்படுகிறது. கண்ணன் ஓர் இடையனாக வந்து கிணற்றிலிருந்து ஸூர்தாஸைக் கரை சேர்த்து மறைந்தார். அவ்விடையன் கண்ணனே என்று அறிந்து கொண்ட ஸூர்தாஸ் மிக்க கர்வத்துடன் கண்ணனை விளித்துக் கீழ்க்கண்டவாறு கூறினார்.

**बाँह छुडाये-जात हो, निबल जानिके मोहि।**
**हिरदे ते तब जाओगे, मर्द बदौगे तौहि ।।**

என்னை பலமற்றவன் என்றறிந்து என் கைப் பிடியினின்று உன்னை விடுவித்துக்கொண்டு செல்கின்றாய். என் உள்ளப்பிடியிலிருந்து விடுவித்துக்கொண்டு நீ செல். அப்பொழுது உன்னை ஆண் மகனாக மதிப்பேன் இவ்வாறே ஸூர்தாஸின் வாழ்க்கையில் நிகழ்ந்த பல நிகழ்ச்சிகளைப்

பற்றி மேலும் பல வதந்திகள் உலவி வருகின்றன. அவைகளை நம்புவதற்குப் பலமான ஆதாரம் கிடைக்கவில்லை. ஆனால் ஸூர்தாஸ் குருடராக இருந்தார் என்பது அவருடைய நூல்களின் வாயிலாகவே அறியப்படுகின்றது. மேலும் அவர் சிறந்த பக்தராகத் திகழ்ந்தார் என்பதும் இவ்வரலாறுகளினால் நிரூபணமாகின்றது.

ஸூர்தாஸ் அவர்கள் எழுதியதாகக் கருதப்படும் நூல்களாவன – ஸூர்ஸாகர், ஸூர ஸாராவலீ, ஸாஹித்ய லஹரீ, நல தமயந்தீ, ப்யாஹ்லோ, இவற்றுள் கடைசி இரு நூல்கள் கிடைக்கவில்லை என்பதோடு அவை ஸூர்தாஸால் எழுதப்பட்டவை என்பதும் சந்தேகத்திற்கு இடமானதாகும். ஸூர்ஸாகர் என்னும் நூலே முக்கியமானதாகும். இந்நூல் ஸ்ரீமத் பாகவதத்தைத் தழுவி எழுதப்பட்டதாகக் காணப் படுகிறது. மேலும் இதில் பாகவதத்தின் பத்தாவது காண்டமே விரிவான முறையில் வரையப்பட்டிருக்கிறது. மற்ற காண்டங்கள் மிகச்சுருக்கமாகவே வருணிக்கப்பட்டிருக் கின்றன. இந்நூல் பாகவதத்தைப் போலவே பல காண்டங்களைத் தாங்கி அமைந்துள்ள போதிலும் இதில் வருணிக்கப்பட்டுள்ள பல்வேறு நிகழ்ச்சிகளும் தனிப்பாடல் முறையிலேயே சித்தரிக்கப்பட்டுள்ளன. இதிலிருந்து அறியப்படுவது யாதெனில் ஸூர்தாஸ் அவர்கள் ஸ்ரீநாத்தின் ஆலயத்தில் அவ்வப்பொழுது விஷ்ணுவின் பல்வேறு அவதாரங்கள், முக்கியமாகக் கிருஷ்ணாவதாரத்தில் கண்ணனின் பல்வேறு லீலைகள் பற்றிப் பாடல்கள் இயற்றிப் பாடிவந்ததைத் தொகுத்து நூலாக வெளியிடப்பட்டிருக்கிறது என்பதேயாம். இவ்வாறு ஸூர்தாஸ் இயற்றிய பாடல்கள் ஒன்றரை லக்ஷத்திற்கும் மேலாகும் என்று கூறப்படுகிறது. ஆனால் இதுவரை ஐயாயிரம் அல்லது ஆறாயிரம் பாடல்களே கிடைக்கப்பெற்று அச்சிடப்பட்டிருக்கின்றன.

ஸூர்தாஸின் பாடல்களில் எல்லா ரஸங்களும் இடம் பெற்றுள்ளபோதிலும் சிருங்காரம், வாத்ஸல்யம், சாந்தம் என்ற

மூன்று ரஸங்களும் சிறப்பாக வருணிக்கப்பட்டுள்ளன. ஊடல், கூடல் என்று கூறக்கூடிய (ஸம்போக், வியோக்) இருவித சிருங்கார (உவகை) நிலைகளையும் அவர் வெகு சிறந்த முறையில் எடுத்துக்கையாண்டிருக்கின்றார். மேலும் வாத்ஸல்யம் என்று ஒரு தனி ரஸம் ஏற்றுக்கொள்ளப்படாத போதிலும் பாலகிருஷ்ணனின் லீலைகளைப் பற்றிய வருணனைகளிலும், யசோதையின் தாயுள்ளத்தைச் சித்தரிப்பதிலும் வாத்ஸல்ய உணர்ச்சியை ரஸ நிலையை அடையச்செய்து ஸூர்தாஸ் அவர்கள் இத்துறையில் மற்றெல்லாக் கவிகளையும் விஞ்சிவிட்டார். ஹிந்தி இலக்கியத்தில் மட்டுமின்றி உலக இலக்கியத்திலேயே அன்றும், இன்றும் என்றுமே இத்துறையில் தனக்கு நிகரான கவி யாருமில்லை என்பதை நிலைநாட்டி விட்டார். இவருடைய சாந்த ரஸமும் நன்கு அமைந்துள்ளது.

ஸூர்ஸாகர் என்ற நூலில் 'ப்ரமர கீத்' (வண்டுப் பாட்டு) என்ற பகுதி மிகச் சிறப்பாக அமைந்துள்ளது. இப்பகுதியில் ஒருகல்லில் இரு மாங்காய் என்ற பழமொழிக்கொப்ப கண்ணனை விட்டுப்பிரிந்த கோபிகளின் விரக நிலையைக் சித்தரிப்பதுடன் ஒரு கருவண்டை இடையில் வைத்துக் கோபிகளுக்கும் ஞானநெறி வழிபாட்டில் சிறந்து விளங்கிய உத்தவருக்கும் நடந்த விவாதத்தைச் சித்தரிப்பதின் மூலம் ஸூர்தாஸ் அவர்கள் உருவமும் குணமுமற்ற கடவுளின் வழி பாட்டு முறையின் ஸாரமற்ற தன்மையையும், குணக்கடலாம் கார்முகில்வண்ணன் கண்ணனை வழிபடுவதின் சிறப்பையும் பற்றித் தன் கருத்துக்களைத்தர்க்க ரீதியாகவும், தத்துவ ரீதியாகவும், உணர்ச்சி வாயிலாகவும் வெளியிட்டிருக்கின்றார். இப்பகுதி உலக இலக்கியத்தில் இணையற்றதாகத் திகழ்கின்றது. பிற்காலத்துக் கவிகளுக்கு 'வண்டுப் பாட்டு' என்ற ஒரு புதிய இலக்கிய நடையை வகுத்துக்கொடுத்தது. இவ்வாறு ஸூர்தாஸ் அவர்கள் தம்முடைய நூல்களின் வாயிலாக ஹிந்தி

இலக்கியத்தின் சிறப்பைப் பெரிதும் ஓங்கச் செய்திருக்கின்றார். இவர் உலக மகா கவிகளுள் ஒருவராவர்.

நந்ததாஸ் : இவர் ஸுர்தாஸின் காலத்தில் வாழ்ந்து வந்தார். 'அஷ்டசாப்' என்ற நூலில் ஸுர்தாஸுக்குப் பிறகு சிறந்த பக்த கவியாக இவர் கௌரவிக்கப்பட்டுள்ளார். நாபாதாஸ் அவர்களின் 'பக்தமால்' என்ற நூலில் இவரைச் சந்திரதாஸ் என்பவரின் சகோதரராகக் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் கோகுல்நாத் அவர்களால் எழுதப்பட்ட 'தோ ஸௌ பாவன் வைஷ்ணவோன் கீ வார்த்தா' என்ற நூலின் வாயிலாக இவருடைய வாழ்க்கை வரலாறு பின்வருமாறு அறியப் படுகிறது. நாபாதாஸ் கோஸ்வாமி துளஸீதாஸ் அவர்களின் சகோதரர் ஆவார். ஒருமுறை துவாரகை செல்லும் வழியில் இவர் ஸிந்துநத் என்ற கிராமத்தில் கத்ரி வகுப்பைச் சேர்ந்த ஓர் அழகியின் மீது மையலுற்று அவளைப் பின்பற்றி அவளுக்குத் தொந்திரவு கொடுத்து வந்தார். இந்நிலையில் அவரைக் கண்ட விட்டல்நாத் அவர்களின் நன்மொழிகளினால் மனம் மாறி, மோகம் நீங்கி ஸ்ரீகிருஷ்ணனின் சிறந்த பக்தராக ஆனார். இராமனிடத்தில் ஒன்றிய பக்தி கொண்ட துளஸீதாஸ் அவர்களுக்குத் தன் சகோதரர் கிருஷ்ணனை வழிபடுவது பிடிக்கவில்லை. இது பற்றித் தன் வருத்தத்தைத் தெரிவித்து அவர் தன் சகோதரர் ஸ்ரீமத் பாகவதத்தை எழுதவேண்டும் என்று விரும்பினார். (நந்ததாஸ் ஸ்ரீமத்பாகவதத்தை ஹிந்தியில் எழுதி முடித்ததாகவும், இதனால் மூலத்தின் பெருமை குன்றி அதன் மதச் சிறப்பு அழிந்துவிடும் என்று ஆச்சார்ய விட்டல்நாத் அவர்கள் கருதியதின் காரணமாக இவர் தம்முடைய நூலை யமுனை நதியில் ஆழ்த்திவிட்டார் என்றும் நந்ததாஸின் 'ப்ரமரகீத்' அப்பெரிய நூலின் எஞ்சியுள்ள ஒரு பகுதியே என்றும் சிலர் கருதுகின்றனர்) நிற்க ஒரு முறை துளஸீதாஸ் தன் சகோதரருடன் கூட பிருந்தாவனம் சென்றார் என்றும் அங்கு கோயிலில் பகவான் கிருஷ்ணனின் உருவச் சிலைக்கு முன் தாம் தலைவணங்க மறுத்துக் குழலுக்குப்

பதில் வில்லும் அம்பும் தாங்கி நின்றால் தாம் பணிவதாகக் கூற எல்லோரும் வியக்கும் வகையில் கண்ணனின் உருவச் சிலை இராமனாகக் காட்சியளித்தாகவும் இந்த நூல் கூறுகிறது. ஆனால் தம்முடைய பல நூல்களின் வாயிலாகத் தம் உள்ளத்தின் பரந்த தன்மையைக் காட்டியிருக்கும் துளஸீதாஸ் அவர்கள் பக்தி நெறியில் இவ்வாறு குறுகிய மனப்பான்மை கொண்டிருக்க மாட்டார் என்பது தெள்ளென விளங்கும். ஆகவே, 'தோ ஸௌ பாவன் வைஷ்ணவோன் கீ வார்த்தா' என்ற நூலில் நந்ததாஸைப் பற்றிக் கூறியுள்ளவை முற்றிலும் உண்மை என்று நம்புவதில்லை. 'சிவஸிம்ஹ ஸரோஜ்' என்ற நூலில் நந்ததாஸ் எட்டா ஜில்லாவில் ஸோரா என்ற கிராமத்தில் கி.பி. 1528ல் பிறந்தார் என்று கூறப்பட்டிருக்கிறது. இதுவே துளஸீதாஸ் அவர்கள் பிறந்த இடம் என்று சிலர் கருதுவதால் இருவரும் சகோதரரர்கள் என்ற தவறான முடிவு தோன்றியிருக்கலாம். மேலும் இருவரும் காசியில் வசித்து வந்த சேஷஸநாதன் என்ற குருவை நாடிக் கல்வி பயின்றதாகவும் அறியப்படுகிறது. நிற்க

நந்ததாஸ் ஸூர்தாஸுக்கு அடுத்தபடியாகச் சிறந்த கவியாக விளங்கினார். இவருடைய கவித்திறனைப்பற்றி "மற்ற கவிகள் சாதாரண பொற்கொல்லர்கள் என்றால், நந்ததாஸ் இரத்தினங்கள் இழைக்கும் பொற்கொல்லராவார்." என்ற புகழுரை வழங்கி வருகிறது. கருத்துக்கேற்ற சொற்களைத் தேர்ந்தெடுத்துத் தக்க இடத்தில் அமைத்து மொழிக்கு மெருகு கொடுப்பதில் இவருக்கு இணை இவரேயாவார். இவருடைய கவிதைகள் பொருட் செறிவும் ஒலிநயமும் பெற்றுத் திகழ்கின்றன. இவர் எழுதிய நூல்கள் இராஸ பஞ்சாத்யாயீ, ப்ரமரகீத் (வண்டுப் பாட்டு), அநேகார்த்த மஞ்சரீ, மான மஞ்சரீ, நாமமாலா, இரஸ மஞ்சரீ, சியாம ஸகாயீ, ருக்மிணீமங்கல், பாஷா தசம ஸ்கந்த முதலியன. இவற்றுள் ப்ரமரகீத் மக்களிடை பெருவழக்குப் பெற்றுள்ளது. இராஸ பஞ்சாத்யாயீ என்ற நூலும் மிகப்பிரசித்தி பெற்றதாகும். இந்நூலில் சிருங்கார ரஸம் தெய்வீகத் தன்மை பெற்று மிளிர்கின்றது.

'அஷ்டசாப்' என்ற சிறந்த கிருஷ்ண பக்தகவிகள் எண்மருள் ஸூர்தாஸ், நந்ததாஸூக்கு பிறகு முறையே கிருஷ்ணதாஸ், பரமானந்ததாஸ் இருவரும் வல்லபாச்சாரியார் அவர்களின் சீடர்களாவர். இவர்களுடைய கவிதைகளும் மிக்க இனிமை பெற்று விளங்குகின்றன. ஏனைய கவிகள் கும்பன்தாஸ், சதுர்புஜதாஸ், சீதஸ்வாமி, கோவிந்தஸ்வாமி என்போராவர். இவர்கள் நால்வருமே ஸ்ரீவல்லபாச்சாரியாரின் புதல்வரான விட்டல்நாத் அவர்களின் சீடராவர். கும்பன்தாஸ் நூல் யாதும் எழுதாவிட்டாலும் உதிரிக்கவிதைகள் பல எழுதியுள்ளார். சதுர்புஜதாஸ் அவர்களின் துவாதசயஷ். பக்திப்ரதாப், ஹிதஜூ கோமங்கல் என்ற மூன்று நூல்கள் நமக்குக் கிடைக்கின்றன. சீதஸ்வாமி முதலில் மதுராவில் வசித்துவந்த ஒரு தனவந்தர். இவர் பண்டா (புரோஹிதர்) வகுப்பைப் சேர்ந்தவர். ஆனால் ஸ்வாமீ விட்டல்நாத் அவர்களிடம் தீக்ஷை பெற்று இவர் துறவு வாழ்க்கையை மேற்கொண்டார். இவர் தன் கவிதைகளில் கண்ணன் திருவிளையாடல்கள் புரிந்த இடமான விரஜபூமியிடம் தன் ஆழ்ந்த அன்பை வெளியிட்டிருக்கின்றார். இவருடையகவிதைகளை மக்கள் பெரிதும் விரும்பிப்பாடுகின்றார்கள். பொதுவாக இக்கவிகள் எல்லோருமே சிறந்த பாடர்களாகத் திகழ்ந்ததோடு தன் உள்ளத்தில் எழும் உணர்ச்சிகளை இனிய மொழியில் தன்னுடைய நூல்களின் வாயிலாக வெளியிட்டு வந்தார்கள்.

ஸ்ரீமத் வல்லபாச்சாரியாரின் புஷ்டி மார்க்கத்தைப் போலவே இராதா வல்லபீய சம்பிரதாயம், கௌடியா சம்பிரதாயம், டட்டீ சம்பிரதாயம் என்ற நான்கு வேறுபட்ட வைஷ்ணவ சம்பிரதாயங்கள் அக்காலத்தில் சிறப்பாகத் திகழ்ந்து வந்தன. இச்சம்பிரதாயங்களைச் சேர்ந்த பல பக்த கவிகளும் அவ்வப்பொழுது தங்களது இனிய பாடல்களினால் ஹிந்தி இலக்கியத்தை அலங்கரித்திருக்கின்றார்கள். இவர்களில் முக்கியமானவர்கள் ஸ்ரீஹித ஹரிவம்ஸ, ஸ்ரீ ஹிதபிருந்தாவன் தாஸ், ஹரிதாஸ், மீரா, ரஸ்கான், கனாநந்த் ஆவர். மேலும்

பாத்ஷாஹ் அக்பரின் தர்பாரில் சிறந்து விளங்கிய ரஹீம், கங்ககவி பனாரஸீதாஸ், ஸேனாபதி, நரோத்தமதாஸ் போன்ற சில கவிகளும் ஹிந்தியில் சிறந்த கவிதைகளை இயற்றி யுள்ளார்கள். இவர்களில் முக்கியமான சில கவிகளைப்பற்றிக் கீழே குறிப்பிடுவோம்.

ஸ்ரீ ஹிதஹரிவம்ஸ் – இவர் இராதாவல்லபீய சம்பிரதாயத்தை ஸ்தாபித்தவர். இராதை கனவில் தோன்றி இவருக்கு மந்திரதீக்ஷை அளித்ததாகக் கூறப்படுகிறது. இச் சம்பிரதாயத்தில் கண்ணனைவிட இராதைக்கே அதிக மஹத்துவம் கொடுக்கப்பட்டிருக்கிறது. தன்னைத் தோழி யாகவோ, வேலைக்காரி (தாசி)யாகவோ கொண்டு வழிபடும் முறையே இதன் முக்கியமான கொள்கையாகும். 'ஹித சௌராஸீ' என்ற இவருடைய நூல் சங்கீதத்தின் இனிமையும் ஓட்டமும் பெற்று மிகச்சிறந்ததாக விளங்குகிறது. தம்முடைய நூலின் இனிமை காரணமாகவே இவர் ஸ்ரீ கிருஷ்ணனின் வேய்ங்குழலின் அவதாரமாகக் கருதப்படுகின்றார். இவர் சமஸ்கிருதத்தில் சிறந்த வித்வானாகத் திகழ்ந்ததோடல்லாமல் காவ்ய சாஸ்திரத்தையும் நன்கு அறிந்தவராக விளங்கினார். 'இராதா ஸுதா நிதி' என்ற நூல் சமஸ்கிருதத்தில் இவர் எழுதியதேயாகும்.

ஸ்ரீஹித பிருந்தாவன் தாஸ்: – இவர் 'ஹித' ( இராதா வல்லபீய) சம்பிரதாயத்தைச் சேர்ந்த முக்கியமான கவிகளுள் ஒருவராவார். இவரிடமிருந்த பேரன்பின் காரணமாக இச்சம்பிரதாயத்தைச் சேர்ந்தோர் இவரை 'பிருந்தாவன் சாசா' என்று அழைத்து வந்தனர். இவர் நான்கு இலக்ஷம் பாடல்கள் இயற்றியுள்ளதாகக் கூறுகிறார்கள். தன் பாடல்களில் இவர் கண்ணனின் லீலைகளை விரிவாக வருணித்திருக்கின்றார். இனிய முறையில் சொற்களை நயம்பெற அமைத்து மொழிக்கு மெருகு தீட்டியிருக்கின்றார் இவர்.

ஸ்வாமி ஹரிதாஸ் :– இவர் முதலில் நிம்பார்க்க சம்பிரதாயத்தைச் சேர்ந்தவராயிருந்தார். பின்னர் அதிலிருந்து

பிரிந்து 'டட்டீ' சம்பிரதாயத்தை ஸ்தாபித்தார். அக்பருடைய காலத்தில் இவர் முதிர்ந்த பக்தராகவும், சங்கீதக் கலையில் நன்கு தேர்ச்சி பெற்றவராகவும் திகழ்ந்தார். அக்பரின் அவைப்பாடகரும் மிக்கப் புகழ்பெற்றவரமான தான்ஸேன் இவரைத் தன் குருவாக மதித்து வந்தார். பாத்ஷாஹ் அக்பரே ஒருமுறை சாதுவாக மாறுவேடம் பூண்டு தான்ஸேனுடன் இவருடைய பாடலைக் கேட்பதற்காக இவருடைய இல்லத்திற்குச்சென்றார் என்றும், தான்ஸேன் வேண்டுமென்றே ஓர் இராகத்தைத் தவறான முறையில் பாட அதை ஹரிதாஸ் அவர்கள் திருத்திப் பாடிய பொழுது அக்பர் அவர் பாடலைக் கேட்டுப் பெருமகிழ்ச்சி கொண்டு அவருக்குத் தன் காணிக்கைளைச் செலுத்திக் கௌரவிக்க விரும்பியதாகவும், அதை ஏற்க இவர் மறுத்து விட்டதாகவும் அறியக்கிடக்கின்றது. இவருடைய கவிதைகள் இசை நயம் பெற்றுப் பல இராகங்களில் பாடத்தக்கவையாக அமைந்துள்ளன. 'ஸ்வாமீ ஹரிதாஸ் கே பத்', 'ஸ்வாமி ஹரிதாஸ் வாணீ' என்ற நூல்கள் இவருடைய பாடல்களின் தொகுப்புகளாகும்.

மீராபாயீ–ஹிந்தி இலக்கியச் சோலையில் இடைவிடாது கண்ணன்புகழ் பாடிவந்த தீங்குயில் ஆவாள் மீரா. கண்ணனது காதலிலே கசிந்துருகி காலமெல்லாம் அவன் புகழ் பாடி கொண்டு, சாதுக்களின் சேவையிலே தன் வாழ் நாட்களைக் கழித்துக் கார்வண்ணனுடன் இரண்டறக் கலந்து விட்டமாதர் திலகம் இவள். ஜோத்பூர் இராஜ்யத்திலுள்ள மேட்தா என்னு மிடத்தில் பெருமை வாய்ந்த இராடௌர் வம்சத்தில் இவள் பிறந்தாள். ஜோத்பூரை அமைத்த இராணுா ஜோதா என்பவர் இவளுடைய முப்பாட்டனார் ஆவர்ர். சிறந்த வீரனாகத் திகழ்ந்த இராணா இரத்தின சேனின் ஒரே குலக் கொழுந்தாக விளங்கினாள் மீரா. மங்கைப்பருவம் அடைந்ததும் உலக வழக்கத்தையொட்டி இவளுடைய திருமணம் உதயபூரை ஆண்டு வந்த ஸீஸோதயா வம்சத்தை சேர்ந்த மகாராணாவின் குமாரனான போஜனுடன் நடந்தேறியது.

மீரா தன்னுடைய பிள்ளைப்பருவம் முதற்கொண்டே கண்ணனின் பக்தியில் ஈடுபட்டிருந்தாள். விவாகத்திற்குப் பின் சில நாட்களிலேயே இவளுடைய பக்திக்கு வழி விடுத்து போஜராஜனின் மறைவினால் அவள் தன்னை விதவையாகக் கருதவில்லை. மேலும் அவள் தனது நேரத்தையெல்லாம் வேய்ங்குழலோனின் வேணுகான மகிமையைப் பாடுவதிலும். நாடிவரும் சாதுக்களைப் பேணி உபசரிப்பதிலுமே கழித்து வந்தாள். அரச குடும்பத்தைச் சேர்ந்த மீரா சாதுக்களுடன் கலந்து பழகுவதையும், பாடுவதையும் அவளுடைய உற்றார் உறவினர் விரும்பவில்லை. தங்களது குலப்பெருமையைக் காப்பாற்ற எண்ணி மீராவைக் கொல்வதற்கு பல முயற்சிகள் செய்தனர். ஆனால் ஒவ்வொரு முறையும் கண்ணனின் கருணை அவளை அணைத்துக் காத்தது. கொடிய கருநாகம் ஸாலிக்ராமமாக மாறியதும், நஞ்சு கலந்த பால் அமுதமாக ஆனதுமான பல வரலாறுகள் மீராவின் பாடல்களிலிருந்து அறியப்படுகின்றன. உறவினர்களின் கொடுமைகளைப் பற்றித் துளஸீதாஸ் அவர்களின் கருத்தை அறிய விரும்பிய பொழுது துளஸீதாஸ் மீராவிற்கு கீழ்க்கண்டவாறு பதிலளித்தாகத் தெரிகிறது. அதாவது இராமனும் ஜானகியும் யாருக்குப் பிரியமில்லையோ அவர்கள் நமக்கு மிக்கப் பிரியமானவர் களாயிருந்த போதிலும், கொடிய விரோதியாக எண்ணி அவர் களை விட்டு விலகவேண்டும் என்பதாம். சில நாட்களுக்குப் பிறகு மீரா சித்தூரில் வசிக்க விரும்பாமல்பட்ட மரங்களையும் தளிர்த்தெழச் செய்யும் வேணுகானனைத் தேடித் துவாரகைக்குச் சென்று விட்டாள் என்றும் அங்குக் கண்ணனுடன் இரண்டறக் கலந்து விட்டதாகவும் கூறப் படுகிறது.

நீலவண்ணனின் பக்தியில் ஊறிய மீராவின் உள்ளத்திலிருந்து பொங்கிப் பெருகிய பாடல்கள் அவளது விவரகதாபத்தையும், பரமாத்மாவுடன் இரண்டறக் கலக்க விரும்பும் ஜீவாத்மாவின் தவிப்பையும் தெள்ளென விளக்குகின்றன. சிருங்காரம் என்னும் மசி கொண்டு மீரா

தன் உள்ளத்தில் எழுந்த உணர்ச்சிகளை வெளிப்படுத்தி இருக்கிறாள். இவளுடைய பாடல்களில் விரக உணர்ச்சியும், ஆத்ம ஸமர்ப்பண உணர்ச்சசியுமே மேலோங்கியிருப்பதை நாம் காண்கிறோம். 'நரஸீஜீ காமாயரா', 'கீத கோவிந்த டீகா', 'ராக கோவிந்த', 'ராக ஸோரட் கே பத்' என்ற நான்கு நூல்கள் மீரா எழுதியதாகக் கூறப்படுகிறது.

கங்க்:- அக்பரது அவையிலே விளங்கிய கவி இரத்தினங்களுள் இவரும் ஒருவராவார். இவர் பீர்பல்லின் சிறந்த நண்பராக விளங்கினார். 'கவித்த' என்ற செய்யுள் நடையிலே இவர் பல செய்யுட்கள் இயற்றியுள்ளார். அக்பரது ஈகை குணத்தையும், போர்த்திறனையும் பற்பல கவிதைகளிலே இவர் விளக்கியுள்ளார். இராமன், கண்ணன் ஆகிய இருவருடைய பக்தியிலும் திளைத்திருந்தார் இவர் என்பதற்கு இவரது பல கவிதைகள் சான்றாக விளங்குகின்றன. நெருப்பைப் போல் தெறிந்தெழும் சொற்களைக் கையாண்டு அக்பரின் வீரத்தைப் பற்றி இவர் இயற்றிய கவிதைகள் சீர்பட அமைந்ததுள்ளன. இவருடைய நடையிலே எளிமை இல்லாவிடினும் சொல் நயம் நிரம்பி இருப்பதால் எளிதில் நம்மைக் கவர்ந்துவிடுகிறது.

ரஹீம்: சமயப் பிணைப்பைத் தகர்த்தெறிந்து ஹிந்துக்களின் தனிப் பெரும் தெய்வங்களான கண்ணனையும், இராமனையும் புகழ்ந்து மனமுருகிப் பாடிய இஸ்லாமிய கவிகள் பலர் உள்ளனர். அவர்களுள் முதன்மை இடம் பெறுபவர் ரஹீம் ஆவார். அப்துர் ரஹீம் கான்கானா என்ற இயற்பெயரைக்கொண்ட இவர் அக்பரின் மாமனான பைராம் கானின் மைந்தனாவார். இவர் கி.பி.1556ஆம் வருடம் தில்லியில் பிறந்தார். அக்பரது அரண்மனையிலேயே இவர் வளர்ந்தார். ஹிந்தி, துருக்கி, பாரசீகம், வடமொழி ஆகிய நான்கு மொழி களையும் முறைப்படி பயின்று சிறந்த பாண்டித்தியம் பெற்றிருந்தார். அக்பருடைய சேனைத் தலைவராகப்

பணியாற்றி வந்த இவர் அக்பருக்காக குஜராத் முதலிய பல பிதேசங்களை ஜயித்துக் கொடுத்திருக்கின்றார். இவர் அக்காலத்திய மிகப் பெரிய வள்ளலாகக் கருதப்பட்டு வந்தார். பாரிபோல் வாரி வாரி வழங்கியே இவர் ஏழ்மைப்பட்ட காலமும் உண்டு. உபதேசம், சிருங்காரம், பக்தி என்ற மூன்று பாவங்களை இவர் தம் கவிதைகளிலே செவ்வனே சித்தரித் துள்ளார். பாபரால் துருக்கி மொழியில் எழுதப்பட்ட 'துஸ்கே பாபரி" என்ற நூலை பாரசீக மொழியில் மொழிபெயர்த்தது இவர்தான். கீழ்கண்ட நூல்கள் இவரால் இயற்றப்பட்டன. 'ரஹீம் சத்சயீ" "பரவை நாயிகா பேத" 'சிருங்கார ஸோரடா' 'மதநாஷ்டக்' 'ராஸ பஞ்சாத்யாயீ' 'கேட கௌதுகஜாதகம்' இவைகளுள் கடைசி நூலானது பாரசீகம் சமஸ்கிருதம் இரண்டும் கலந்த மொழியிலே இயற்றப்பட்டுள்ளது. இம் மாதிரியான நூல்கள் பொதுவாக மணிப்ரவாள நூல்கள் என்று கூறப்படுகின்றன. மேற்கூறிய நூலில் ஜோதிஷ சாஸ்திரத்தின் மிகச் சிக்கலான விஷயங்களைப் பற்றியெல்லாம் ரஹீம் விரிவாகவும் தெளிவாகவும் எழுதியுள்ளார். இராமனையும், கண்ணனையும் புகழ்ந்து இவர் அநேக கவிதைகளை இயற்றியுள்ளார். இதைத் தவிர பாரதீய இலக்கிய, புராண பரம்பரையில் வரும் வேறு பல விஷயங்களைப் பற்றியும் தம் நூல்களின் கண் விளங்கியுள்ளார். இவர் எந்த மொழியில் இயற்றினாலும் அம்மொழியின்கண் தனக்குள்ள இயல்பான பாண்டித்தியத்தை வெளிப்படுத்தியுள்ளார். அணிகளை அழகாகப் புகுத்தி ஒரு நிறைவை உண்டுபண்ணும் வகையில் இவர் தம் கவிதைகளை இயற்றியுள்ளார். வாழ்க்கையின் அனுபவங்களைப் படம் பிடித்துக் காண்பிப்பதில் இவருக்கு நிகர் எவருமில்லை என்பது திண்ணம். ஹிந்தி மொழிக்குச் சிறந்த இலக்கிய சேவை செய்த இவர் கி.பி. 1626ம் வருடத்தில் உயிர் நீத்தார்.

ரஸ்கான் : கிருஷ்ணபக்தியில் திளைத்த இஸ்லாமிய கவிஞர்களில் தலைசிறந்தவர் இவர். தில்லியில் உள்ள

பட்டாணிய குலத்தில் பிறந்தார். இளமைப்பருவத்திலிருந்தே ஏதோ ஒரு சக்தியினால் உந்தப் பெற்றவராய் கிருஷ்ணனுடைய வாழ்க்கை சம்பந்தப்பட்ட பல இடங்களைக் கண்டு பரவசமடைய ஆரம்பித்தார். வல்லப சம்பிரதாயத் தலைவரான கோஸ்வாமி விட்டல் நாத்திடம் தீக்ஷை பெற்று கண்ணன் புகழ்பாட ஆரம்பித்தார். இவர் 'ப்ரேமவாடிகா', 'சுஜான் ரஸ்கான்' என்ற இரு நூல்களை இயற்றினார். 'பிரேம வாடிகா' என்ற நூலிலே ஐம்பத்திரண்டு செய்யுட்களிலே சுத்தமான களங்கமற்ற அன்பின் பல்வேறு நிலைகளையும். அதனால் ஏற்படும் தூய இன்பங்களையும் இவர் விவரித்துள்ளார் 'சவையா' என்ற செய்யுள் முறையை மிகவும் சிறந்த முறையில் கையாண்ட பெருமை இவரைச் சாரும். பக்தி, சிருங்காரம் வாத்ஸல்யம் என்ற செய்யுள் முறையை மிகவும் சிறந்த முறையில் கையாண்ட பெருமை இவரைச் சாரும் பக்தி, சிருங்காரம், வாத்ஸல்யம் என்ற மூன்று தெள்ளிய நீரோட்டம் போன்ற சொல்லோட்டமும், அன்றலர்ந்த மலர்போன்ற உணர்ச்சித் தூய்மையும் இவருடைய கவிதையிலே நாம் காணுகின்றோம். அணிகளை முத்துக்கோத்தாற்போல் நடு நடுவே பிரயோகித்துள்ளார். "சுஜான் ரஸ்கான்' என்ற நூலில் நூற்றிருபது செய்யுட்களிலே கண்ணனின் சிறப்பையும், அவன் பால் கொண்ட பக்தியின் மேன்மையையும் விளக்கியிள்ளார். சுத்தமான கலப்பற்ற ஹிந்தி மொழியெழுதுவதில் இவருக்கு நிகராக ஒரு சிலரேயுள்ளனர். பக்தி காலத்திய கவிகளுள் இவருக்கு விசேஷ பெருமையுண்டு என்பது மிகையாகாது.



*முதல் பாகம் முற்றிற்று*

# யாப்பணி அல்லது சிருங்கார இலக்கியம்

இஸ்லாமிய அரசர்களின் கொடுங்கோன்மையினால் அனலிடை புழுப்போலத் துடித்த பாரத இதயம் பக்தியிலே அமைதிகண்டு பரமனின் பரவசமாகப் பாடி வந்தது. உருவமற்ற நிலையிலே அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் பரவி யிருந்த பரந்தாமனின் புகழைப் பாடினார் கபீர்தாஸ் போன்ற ஞானக்கரை கண்ட கவிஞர்கள். மழைவண்ணத்தண்ணல் இராமனின் புகழ்பாடி மோக்ஷத்தின் வழிதேடினர் துளஸீ தாஸ் போன்ற கவிஞர்கள். முகில்வண்ணன் முரளீதரனின் துதி பாடினர் ஊனக் கண்ணிழந்து ஞானக்கண் கொண்டு நோக்கிய ஸுர்தாஸ் போன்ற கவிஞர்கள். கண்ணன் காட்டிய வழியைத் தேடும் கவிஞர்களின் பாடல்களிலே பக்தியின் பரவசத்தைக் காட்டிலும் சிருங்காரமதிகமாகப் பொங்கியது என்று கூறினால் மிகையாகாது. இராதையின் உலகை மயக்கும் பேரழகிலே, கண்ணனின் கனிரஸம் போல் இனிக்கும் சொல் வண்ணத்திலே, யமுனை நதிக்கரையினிலே, மயக்கம் தரும் கதம்ப மரங்களின் நிழலிலே இன்பத்தின் எல்லையை வர்ணிக்க முயன்றார் புலவர்கள். ஆகவே பக்தி காலத்திற்குப் பிறகு வரும் கவிதைகளிலே சிருங்காரத்தின் வளர்ச்சியையே நாம் காணுகின்றோம். அரசவையிலே அலங்கார மேடையிலே காமரஸம் பொங்கும் கவிதைகள் அதிகமாக இயற்றப்படுவது இயல்பல்லவா? மதுவும் மாதுவும் மகிழ்ந்தளிக்கும் போதையிலே, இல்லாமையின் தொல்லையற்ற இனப்புரிப் பாதையிலே, இராஜபோகத்துடன் வாழ்ந்த கவிஞர்கள் சிருங் கார கீதம் பாடுவதோடு காப்பியங்களின் யாப்பணி போன்ற அம்சங்களைப் பற்றி விரிவுடன் விளக்கிக்கூற ஆரம்பித்தனர். ஆகவேதான் ஹிந்தி இலக்கியத்தில் இக்காலத்தைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது யாப்பணி காலமென்றோ, சிருங்கார கால மென்றோ குறிப்பபிடுகின்றோம். பக்தி காலத்தில் இயற்றப்

பட்ட இலக்கியங்களிலும் சிருங்காரமிருந்து வந்தது. ஆனால் அக்காலத்தில் சிருங்காரத்தை முக்கியமாகக்கருதாமல் பக்தியை பிரதிபலிக்கச் செய்ய அதையும் ஒரு கருவியாக உபயோகித்து வந்தனர். சிருங்கார காலத்திலோவெனில் சிருங்காரமே உயிரென்று கருதி அதை இலக்கியத்திலே வெள்ளம்போல் கரை புரண்டோடச் செய்தனர். பக்தி காலத்தில் சுத்த இலக்கியப் புத்தகங்கள் அதிமாக எழுதப்பட்டு வந்தன. இலக்கியப் புத்தகங்களுக்குப் பிறகு யாப்பணி போன்ற இலக்கண அம்சங்களை விரிவாகக் கூறும் சிருங்கார காப்பியங்கள் இயற்றப்பட்டன. சுருங்கக்கூறின் யாப்பணி காலம் அல்லது சிருங்கார காலம் ஏற்படுவதற்குக் காரணமான சூழ்நிலைகள் கீழ்கண்டனவே :

1. பக்தி கால இலக்கியத்திலே தோன்றிய சிருங்கார ஓட்டமும், அதனால் தோன்றிய பெருக்கம்.
2. ஹிந்தி கவிஞர்களுக்கு அரசவையில் கிடைத்த அமோக ஆதரவு.
3. வடமொழி இலக்கிய பரம்பரையைப் பின்பற்றும் இயல்பு.
4. இலக்கிய காலத்திற்குப் பிறகு இலக்கண காலம் தோன்றும் இயல்பு.
5. அக்கால வாழ்க்கையிலே பரவலாக இருந்து வந்த ஆடம்பரம்.

ஆசார்ய கேசவதாஸ்: (பிறப்பு–கி.பி.1555 மறைவு – கி.பி.1617)

சிருங்கார இலக்கிய காலத்தின் முதற் கவியாகக் கருதப்படுகின்றவர் ஆசார்ய கேவசதாஸ் அவர்கள். சநாட்யபிராமணர் குலத்தில் பண்டித் காசிநாத்தின் மைந்தராகத் தோன்றினர் இவர். வடமொழிப் பயிற்சி குலவழியே இவருக்குக் கிடைத்திருந்தது. இவருடைய முன்னோர்கள் சிறந்த வடமொழி கவிஞர்களாகத் திகழ்தனர். ஒரு முன்னோர் ஆயுர் வேதத்தின் சிறந்த புத்தகமாகக் கருதப் படுகின்ற 'பாவ பிரகாசம்' என்ற நூலை இயற்றினார். மற்ற

ஒரு முன்னோர் 'சீக்கிரபோதம்' என்ற வானசாஸ்திர நூலை இயற்றியுள்ளார். அந்தக் காலத்தில் வடமொழியைத் தவிர வேறு பழக்கத்திலுள்ள இலக்கிய மதிப்பற்ற மொழியிலே எழுதுவது இழிவாகக்கருதப்பட்டது. கேசவதாஸும் சமஸ் கிருதத்தை விட்டு ஹிந்தியிலே கவிதை எழுத நேரிடுகின்றதே என்ற வருத்தத்துடன் தான் தன் இலக்கிய வாழ்க்கையை ஆரம்பிக்கின்றார்.

**भाषा बोल न जानहि जिनके कुल के दास**
**भाषा कवि भो मन्दमति तेहि कुल केशवदास**

**எக்குலம் தோன்றினோர் ஹிந்தி மொழி யறியாரோ**
**அக்குலம் தோன்றி நான் ஹிந்தி கவி ஆனேனே.**

அக்காலத்தில் 'ஓட்சா' தேசத்தரசராக இந்திரஜித்சிங் என்பவரிருந்தார். இந்திரஜித்சிங் கேசவ தாஸை மிகவும் கௌரவத்துடன் போற்றி வந்தார். அவர் கேசவதாஸைத் தன் குருவாகவே கருதி வந்தார். இந்திரஜித் சிங்கின் விருப்பப்படி, கேசவ்தாஸ் முதன் முதலில் 'ரஸிகப்ரியா' என்ற புத்தகத்தை எழுதினார். அதற்குப்பிறகு இந்திரஜித் சிங்கின் நர்த்தகிகளில் ஒருவளான 'ப்ரவீண் ராய்' என்பவளுக்காக 'கவிப்ரியா' என்ற நூலை இயற்றினார். ரஸிகப்ரியா' என்ற நூல் ஒன்பதுகாப்பிய ரஸங்களை விவரித்துக் கூறுகின்றது. ஒன்பது ரஸங்களில் சிருங்காரத்தையே முக்கியமாகக் கருதி அதைப்பற்றியே அதிகமாக கவனம் செலுத்தியிருக்கின்றார். ஒரு பெண்ணுக்கும் ஆணுக்கும் உள்ளத்தால் ஏற்படும் அன்புத் தொடர்பைப் பற்றி பதினாறு அத்தியாயங்களிலே இந்த நூலில் வர்ணித்துள்ளார். சிருங்கார சாஸ்திரப்படி உள்ள வேறு வேறு காதலர்கள் காதலிகள் ஆகியவவர்கள் ஊடல், கூடல் ஆகியவைகள் இந்த நூலில் வர்ணிக்கப்பட்டுள்ளன. 'கவிப்ரியா' என்ற நூலை கேசவ்தாஸ் வடமொழியில் தண்டியெழுதிய 'காவ்யாதர்ஷம்' என்ற நூலைத் தழுவியெழுதியுள்ளார். இதில் அவர் அணிகளைக் கவிதையின் உயிராக வர்ணித்துள்ளார். பதினேழு அத்தியாயங்களில் உள்ள இந்த நூலில் பதிமூன்று

அத்தியாயங்கள் அணிகளின் சூட்சும வேறுபாடுகளை விவரிக்கின்றன. கேசவ்தாஸ் இயற்றிய ஏனைய நூல்கள் 'நகசிக', 'ரதன்பாவனி', 'ஜஹாங்கீர் ஐ ஸந்திரிகா', 'விஞ்ஞான கீதா', 'ராமசந்திரிகா' ஆகியவை. இவைகளில் ராமசந்திரிகா இவரது சிறந்த நூலாகக் கருதப்படுகின்றது. இந்த ஒரு நூலின் சிறப்பைக் கொண்டுதான் இவருக்கு மகாகவி என்ற பட்டமும் வழங்கப்படுகின்றது. இராமாயணக் கதையே இதில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. கவிதை இயற்றுவதற்காகத் தன்னால் ஏற்படுத்தப்பட்ட வழியைக் கையாண்டு அதன்படி இயற்ற முயற்சித்திருக்கின்றார் கவிஞர். ஆனால் காப்பியம் முழுதிலும் நாம் இராமனையோ, சீதையையோ அல்லது மற்ற இராமாயணப் பாத்திரங்களையோ காணாமல் கவியையே காணுகின்றோம். எந்த இராமனை துளஸிதாஸ் தெய்வமாக மதித்து உருகிப்பாடினாரோ, அதே இராமனை கேசவ்தாஸ் சாதாரண குற்றம் குறை நிரம்பப் பெற்ற மானிடனாகவே வர்ணித்துள்ளார். கேசவ்தாஸின் இந்த காப்பியம் அவருடைய ஆழ்ந்த ஞானத்திற்கு ஒரு எடுத்துக்காட்டாக இருக்கவே இயற்றப்பட்டது. இராமயணக் கதையைப் படிக்கின்றோம் என்பதை ஒரு கணம் மறந்தோமேயானால் நாம் இந்த காப்பியத்தின் அழகிலே மெய்மறந்து விடுகின்றோம். ஆனால் சில இடங்களில் ஒரு உணர்ச்சியை பிரதிபலிக்கச் செய்யும் முயற்சியிலே ஒன்றுக்கு மேற்பட்ட உருவகங்களையும் உவமானங்களையும் அடுக்கிச் சென்று அந்த உணர்ச்சியையே கவி நயமற்றதாகச் செய்துவிடுகின்றார். உவமானங்களைத் தேடும் இவரது எண்ணத்தின் ஓட்டத்தை என்ன செய்வது! ஒரு இடத்தில் ஜனக மகாராஜாவிற்கு 'அனங்கர்' என்ற பதத்தை உபயோகப்படுத்தியுள்ளார். ஜனகர் விதேஹ தேசத்தரசர். விதேஹமென்றால் வடமொழியில் தேஹமற்றவர் என்ற ஒரு பொருள் இருக்கின்றது. அனங்கர் என்றாலும் தேஹமற்றவர் என்பதுதான் பொருள். ஆனால் பழக்கத்தினால் அனங்கன் என்ற சொல் மதனனைக் குறிக்கவே உபயோகப் படுகின்றது. மதனன் எங்கே? ஜனகர் எங்கே? கேசவ்தாஸின்

'இராமச்சந்திரிகா'வின் சிறப்பு அதில் அநேக இடங்களில் கண்டுள்ள வாக்குவாதங்கள்தான். இவருடைய கவிநயம் இந்த வாக்குவாதங்களில் மிளிர்வதைக் காண்கின்றோம். கேசவ்தாஸின் மற்றொரு நூல் 'விஞ்ஞான கீதா' என்பது. இது வடமொழியில் பிரசித்த தத்துவ மேதை கிருஷ்ணமிச்ரர் எழுதிய 'ப்ரபோத சந்திரோதயம்' என்ற நூலைத் தழுவி யெழுதப்பட்டுள்ளது. இதில் மனிதனுடைய வாழ்க்கையிலுள்ள குணதோஷங்களை நன்றாக விரித்துள்ளார்.

கேசவதாஸின் கவிதைகளை ஆராய்ந்தோமேயானால் அவைகளில் கலை நுட்பச் செறிவு அதிகமாக மிளிர்வதைக் காணுகின்றோம். ஆனால் ஒரு கவிதைக்கு அத்தியாவசியமான உணர்ச்சிச் செறியை இவருடைய கவிதைகளில் குறைவாகவே காணுகின்றோம். அணிகளின் சிறப்பை நுட்பமாக விவரித்துக் கூறுவதில் இவருக்கு இணை கிடையாது. ஆனால் செயற்கைத்தன்மை அதிகமாக இருப்பதால் சில இடங்களில் மனதில் அருவருப்பை உண்டாக்கக் கூடியதாகவும் இருக்கும். சமஸ்கிருதத்திலும் ஹிந்தியிலும் முழு பாண்டித்தியம் பெற்றிருந்ததால் இவருடைய நூல்களிலே ஒரு தனிச் சிறப்பை நாம் காணப்பெறுகின்றோம். இலக்கண முறைப்படி காப்பியக் குறைகள் இவருடைய நூல்களிலே காணப்பட்டாலும் கேசவதாஸ் ஒரு சிறந்த கவிஞர் என்பதில் சந்தேகமில்லை.

**சிந்தாமணி திரிபாடி : (பிறப்பு – 1611 மறைவு – 1700)**

கான்பூர் ஜில்லாவில் உள்ள திகலாபூர் என்ற கிராமத்திலே இவர் பிறந்தார். பண்டிட் ரத்னாகர் இவர் தகப்பனார். பிரசித்தி பெற்ற ஹிந்தி கவிஞரான பூஷணும், மதிராமும் இவரது சகோதரர்கள். இவரால் எழுதப்பட்ட ஐந்து நூல்கள் கிடைக்கின்றன. 'காவ்ய விவேக்', 'கவிகுல கல்பதரு', 'காவ்ய பிரகாஷ்', 'இராமாயண சந்த்விசார்'. சமஸ்கிருதத்தில் மம்மடரால் எழுதப்பட்ட 'காவ்ய பிரகாஷ்' என்ற நூலையும் விச்வநாதரால் எழுதப்பட்ட 'சாஹித்ய தர்பண்' என்ற

நூலையும் தழுவியே சிந்தாமணியின் நூல்கள் இயற்றப் பட்டுள்ளன. இவருடையகவிதைகளிலே ஒரு இயற்கை அழகு மிளிர்வதைக் காண்கின்றோம். சிந்தாமணி மகரந்தஷாவின் அவைக்கவியாக இருந்தார். மொகலாய மன்னரான ஜஹாங்கீர் இவரை ஒரு சிறந்த கவியாக மதித்து வந்தார் என்பதே இவருடைய சிறப்பிற்கு ஒரு சான்று. இவருடைய கவிதைகளிலே அணிகள் மிகவும் அழகாக, மனதிலே ஒரு காப்பிய நிறையை உண்டு பண்ணக் கூடியவைகளாக உபயோகப்படுத்தப்பட்டுள்ளன.

**மதிராம் : (பிறப்பு–கி.பி.1617 மறைவு – கி.பி. 1700)**

சிருங்கார இலக்கியத்தின் ஒரு சிறந்த கவிஞரான இவர் புகழ்பெற்ற கவிஞரான சிந்தாமணி, பூஷண் ஆகியவர்களின் சகோதரர். முதலில் இவர் பூந்தியரசரான பாவசிங்கிடம் இருந்தார். பிறகு சம்பூநாத் ஷோலங்கி ராஜாவிடம் இருந்தார். இவரால் எழுதப்பட்ட நூல்கள் 'லலிதலலாம்', 'ரஸராஜ்' 'சந்தஸாரபிங்கள', 'ஸாஹித்யஸார்' 'லக்ஷணச்ருங்கார்', 'நிராம் ஸத்ஸயி', ஆகியவை. 'லலிதலலாம்' என்ற நூல் அணிவகைகளைப்பற்றி 444 செய்யுள்களிலே விவரித்துக் கூறுகின்றது. 'ரஸராஜ்' என்ற நூலில் எட்டுவித சிருங்கார நாயகிகளைப்பற்றி விரிவாகக் கூறப்பட்டுள்ளது. ஒரு ரஸத்தின் ப்ரபாவத்தை வர்ணிப்பதற்காக இவர் கையாண்ட முறை நமது மனதிலே திருப்தியையுண்டு பண்ணுவதாக இருக்கின்றது. 'சந்தஸாரபிங்கள' என்ற நூல் ஹிந்தியிலுள்ள செய்யுள் வகைகளைப்பற்றி கூறுகின்றது. மதிராமின் கவிதைகளிலே மொழியின் இனிமையும், தூய்மையும் நம்மைக் கவர்கின்றன. இவருடைய உவமானங்களும் உருவகங்களும் இயற்கையாக இருப்பதால் நமது மனதிலே ஒரு நிறைவையுண்டு பண்ணுகின்றன. சொல் விளையாட்டு விளையாடுவதிலோ, அடுக்கு மொழியிலோ இவர் நம்மைக் கவர முயற்சிக்கவில்லை. அனுபவத்தின் ஆதாரத்திலே பொங்கும் உணர்ச்சிகளைச் சொல்லணையினால் கட்டப்படுத்தி நம்முன் வைப்பதிலே

மதிராமிற்கு இணையேயில்லை. எளிய நடைக்கும் தெள்ளிய கருத்திற்கும் மதிராமின் கவிதைகள் ஒரு எடுத்துக் காட்டாக இருக்கின்றன.

மஹாராஜ் ஜஸ்வந்த்சிங் ஒரு சிறந்த கவிஞர். இவர் சில சிறந்த யாப்பணி நூல்களை இயற்றியுள்ளார். வடமொழியில் ஜயதேவரால் இயற்றப்பட்ட 'சந்திராலோக்' என்ற நூலைத்தழுவி இவர் எழுதியுள்ள 'பாஷா பூஷண்' என்ற நூல் மிகவும் புகழ்பெற்றது. தன்னை ஒரு கவியென்று கருதாமல் ஆடம்பரமற்ற எளிய நடையிலே தன் நூல்களை இவர் இயற்றியுள்ளார். மற்ற கவிகளுக்கு அடைக்கலம் தந்து அவர்களை ஊக்குவிப்பதிலும் ஆர்வம் காட்டிவந்தார்.

லால்: (பிறப்பு–கி.பி.1657 மறைவு – கி.பி. 1707)

இவருடைய முழுப்பெயர் கோரேலால் புரோஹித். பூஷண்கவி சிவாஜியின் புகழைப் பாடியதுபோல் லால் புந்தேல்கண்டின் அரசரான சத்ரஸாலின் கீர்த்தியைப் பாடினார். சிவாஜியும் சத்ரஸாலும் டெல்லியுலுள்ள முகலாய மன்னர்களின் சக்தியை பலவீன மாக்குவதிலே தங்கள் வாழ்நாட்களைக் கழித்தனர். லால் எழுதிய இரண்டு புத்தகங்கள் நமக்குக் கிடைக்கின்றன. 'சத்ரபிரகாஷ்' 'என்ற நூலிலே கவிஞர் புந்தேல்கண்டிலே ஆண்ட அரசர்களின் வம்ச பரம்பரையையும் அவர்களுடைய வீரதீரபிரதாபங் களையும் வரித்துக் கூறுகின்றார். சத்ரஸால், அவருடைய தகப்பனரான ராஜா சம்பத்ராய் ஆகியவர்களின் வாழ்க்கையின் ஒவ்வொரு சம்பவத்தையும் இந்த நூல் விவரித்துக் கூறுகின்றது. இந்நூலின் கண் நாம் கவியின் வர்ணனைத் திறனைச் சிறக்கக் காணுகின்றோம். வாழ்க்கைச் சரிதை வரைவதிலே தனக்கு நிகர் எவருமில்லை என்பதை இந்நூலின் மூலமாக கவி நிரூபிக்கின்றார். இவர் எழுதிய மற்றொரு நூல் 'விஷ்ணு விலாஸம்' அணிகள் ஆகியவைகளைப் பற்றி விரிவாகக் கூறுகின்றது.

**பிஹாரிலால் : (பிறப்பு–கி.பி.1603 மறைவு – கி.பி. 1663)**

ஹிந்தியின் சிருங்கார இலக்கியத்தின் தலைசிறந்த கவியாகக் கருதப்படுகின்றவர் பிஹாரிலால். இவருடைய பாடல்களின் அழகும் இனிமையும் ஸோமரஸத்தின் இனிமையை ஒத்ததாகும். இவருடைய ஒவ்வொரு பாடலும் இசைச் சுவையும், அணியழகும் ஒருங்கே அமையப் பெற்று சிருங்காரத் தேனிலே தோய்த்தெடுத்த பலாச்சுளை போல் படிப்பவர்களின் மனத்திலே காப்பிய நிறைவை உண்டுபண்ணுகின்றது. குடத்திலே கடலையே தேக்கிக் கொடுப்பது போல் ஈரடிச் செய்யுள்களிலே ஆழ்ந்த கருத்துக்களை அள்ளியளிப்பதிலே இவருக்கு நிகராக ஹிந்தி இலக்கியத்திலேயே வேறு ஒருவரும் தோன்றவில்லை. குவாலியரக்கு அருகிலுள்ள கோவிந்தபூர் என்ற கிராமத்திலே இவர் தோன்றினார். ஜயபூர் அரசரான மஹாராஜ் ஜயசிங்கின் அவையிலே இவர் கவிஞராகத் திகழ்ந்தார். சிருங்கார ரஸத்தின் தலைசிறந்த கவியாகத் கருதப்படுகின்ற இவர் தன் வாழ்நாளில் இயற்றிய நூல் 'பிஹாரி ஸத்ஸயி' என்ற ஒரே நூல்தான். நூல்களின் எண்ணிக்கையைக் கொண்டல்லாமல் குணத்தைக் கொண்டுதான் ஒருகவியின் மதிப்பு உயருகின்றது என்பதற்கு இவர் ஒரு சான்று. பிஹாரிலாலின் வாழ்க்கையே மிகவும் ரஸம் பொருந்தியதாக இருந்தது. ஜயபூரில் அரசரது மாளிகையில் இவர் முதன் முதலாகக் கவியாக நுழைந்த பொழுது அரசன் புது மனைவியின் மையலிலே மது உண்ட வண்டென மயங்கிக் கிடப்பதை அறிந்தார். உடனே கீழ்கண்ட செய்யுளை இயற்றி அரசனிடம் அனுப்பினார்.

**नहिं पराग नहि मधुर मधु नहिं विकास इहिकाल**
**अली कली ही से बंध्यो आगे कौन हवाल**

அதாவது மகரந்தமும் மதுவும் அற்று மலர்ச்சியற்று மொட்டாக இருக்கும் காலத்திலேயே மலர் மேல் வண்டு மயங்கிக்கிடந்தால் மலர்ந்த பிறகு என்ன ஆவது! பிஹாரி லாலின் இந்தப் பாடல் மன்னனின் மனத்திலே மாற்றத்தை

ஏற்படுத்தியதென்பதைச் சொல்லவும் வேண்டுமோ. கவியின் பெருமையை உணர்ந்து அரசன் அவருக்கு அவையில் ஒருதக்க இடம் கொடுத்தான். கவியின் ஒவ்வொரு பாடலுக்கும் ஒரு பொற்கிழி கொடுப்பதாக வாக்களித்த அவரது செய்யுள் இயற்றும் ஆர்வத்தை ஊக்குவித்தான். 'பிஹாரிலால் இயற்றிய ஒரே நூலான 'பிஹாரி ஸத்ஸயீ'யில் சிருங்கார ரஸத்தின் பல்வேறு நிலைகளைப்பற்றி 700க்கு அதிகமான ஈரடிச் செய்யுள்கள் உள்ளன. வடமொழிக்காப்பியப் பரம்பரை சிருங்கார ரஸத்தை ரஸங்களுக்கு அரசனாகக் (ரஸராஜ்) கருதுகிறது. சிருங்கார ரஸம் சேர்க்கை சிருங்காரம், பிரிவு சிருங்காரமென்று இரு வகையாகப்பிரிக்கப்படுகின்றது. சேர்க்கை சிருங்காரத்திலே தலைவனும் தலைவியும் சேர்ந்திருந்து காதலின் இன்பங்களைத்துய்ப்பது முறை. பிரிவு சிருங்காரத்திலே தலைவனும் தலைவியும் ஒருவரையொருவர் பிரிந்திருந்து பிரிவாற்றாமையினால் உருகி, உளம் வருந்த, உடல் மெலிய, உயிர் துடிக்க இருப்பது முறை. பிஹாரிலால் தன்னுடைய நூலிலே மேற்கூறிய சிருங்காரப்பிரிவுகளின் பல்வேறு நிலைகளின் நுண்ணிய அனுபவங்களை நன்றாக விவரித்துக் கூறுகின்றார். சமாஸவார்த்தைகளைக்கையாண்டு அவைகளின் மூலமாக பொருளை விரிவுபடுத்திக் கூறுவதிலே இவர் சிறந்தவர். எல்லா விஷயங்களையும் அறிந்து அவைகளின் சிறப்பைக் கொண்டு தன் செய்யுள்களை சிறப்படையச் செய் திருக்கின்றார். தத்துவம், சோதிடம், வைத்தியம், கணிதம், சிற்பக் கலை, சித்திரக்கலை ஆகிய விஷயங்களை மேற்கோளாகக் கொண்டு கவிகூறும் செய்யுள்களை நாம் நோக்கினோமே யானால் அவரது ஆழ்ந்த அறிவைக்கண்டு நாம் வியக்காம லிருக்க முடியாது. பல்வேறு அணிகளை மிகவும் அழகாக இடத்திற்கு தகுந்தவாறு விவரித்துள்ளார். சொற்களை அழகாக அடுக்கித்தொடுத்து கவிநயம் பொங்கச் செய்திருக்கின்றார் பிஹாரிலால். உணர்ச்சிச் செறிவை வெளிப்படுத்திக் காண்பிப்பதிலே தனக்கு ஈடில்லை என்பதையும் நிரூபித்துள்ளார். இவருடைய நூலின் மேல் முப்பதிற்கும்திகமான விரிவுரைகள் எழுதப்பட்டிருக்கின்றன.

குலபதி மிஸ்ர இவரது தகப்பனாரின் பெயர் பரசுராம் மிஸ்ர. இவர் ஜயபூர் ராஜா ராம்சிங்கின் அவையிலே கவியாகத் திகழ்ந்தார். இவரால் எழுதப்பட்ட நான்கு நூல்கள் நமக்குக் கிடைக்கின்றன. அவைகள் முறையே 'ரஸரஹஸ்ய', 'த்ரோண பர்வம்', 'நகசிக்', 'சங்கிராமஸார்', ஆகியவையாகும். இவைகளில் 'ரஸரஹஸ்ய' என்ற நூல் விசேஷ பிரசித்திபெற்றது. இந்நூல் வடமொழி நூல்களான 'காவ்யப்ரகாஷ்', 'சாஹித்யதர்பண்', ஆகியவைகளைத் தழுவி யெழுதப்படிருக்கின்றது. இதன் கண் 'த்வனி' சித்தாந்தத்தைப்பற்றி விரிவாக எழுதியுள்ளார். இந்நூலிலே கவி தன்னுடைய ஆழ்ந்த ஞானத்தை வெளிப் படுத்தியிருக்கின்றார்.

சுகதேவ் மிஸ்ர : கம்பிலா என்ற இடத்திலே பிறந்தவர். இவர் அசோதர் அரசரான ராஜா பகவந்த ராய் என்பரின் அவைக் கவியாகத் திகழ்ந்து வந்தார். ஔரங்கசீப்பின் மந்திரியான பாஜில் அலியைப் புகழ்ந்து 'பாஜில் அலி ப்ரகாஷ்' என்ற நூலை இவர் இயற்றியுள்ளார். இவர் எழுதிய ஏனைய நூல்கள் 'விருத்தவிசார்', 'சந்தவிசார்', 'ரஸார்ணவ', 'அத்யாத்ம பிரகாஷ்' ஆகியவைகள்.

காளிதாஸ்: வடமொழியில் சிறந்து விளங்கிய கவி காளி தாஸரின் பெயர் கொண்ட இவர் கான்பூரிலே கான்யகுப்ஜ பிராமணர் குலத்திலே தோன்றினார். இவர் பீனா அரசரான ஜோக்ஜித்சிங் அவையிலே கவியாக இருந்தார். இவரால் இயற்றப் பட்ட நூல்கள் 'வதூ விநோத்' 'காளிதாஸ் ஹஜாரா' 'ஜஞ்ஜிரா', ஆகியவை. 'ஜஞ்ஜிரா' என்ற நூல் சங்கிலித் தொடர்புச் செய்யுள் முறையிலியற்றப்பட்டுள்ளது. இவருடைய கவிதைகளிலே நாம் இனிமை மிளிர்வதைக் காண்கின்றோம்.

**மஹாகவிதேவ் : (பிறப்பு 1673)**

சிருங்கார இலக்கியத்திலே புகழ்பெற்ற கவி பிஹாரி லாலுக்கு சரி நிகராகக் கருதப்படுகிறவர் மஹாகவி தேவ். கான்ய குப்ஜ குலத்தில் உதித்த பிராமணரான இவர் பதினாறு வயதிலிருந்தே கவிபாட ஆரம்பித்துவிட்டார். இவர் முதன்

முதலாக எழுதிய நூல் 'பாவவிலாஸ்' என்பதாகும். இந்தநூல் ஔரங்கசீப்பின் பிள்ளையான ஆஜம்ஷாவினால் புகழப் பட்டது. தேவ் ஒரே அரசனின் அவையில் அடைக்கலம் புகாமல் பல அரசர்களை நாடிச் சென்று அவர்களைப் புகழ்ந்து நூல்களை இயற்றியுள்ளார். இவரால் ஏறக்குறைய 72 நூல்கள் இயற்றபட்டுள்ளன என்று கூறப்படுகிறது. ஆனால் கீழ்கண்ட 27 நூல்களே நமக்குக் கிடைக்கின்றன. 'பாவ விலாஸ்', 'அஷ்டயாம்', 'பவானி விலாஸ்', 'சுந்தரி சிந்தூர', 'சுஜான் வினோத்', 'ப்ரேம் தரங்க்', 'ராக ரத்னகர்', 'குசல விலாஸ்', 'தேவ் சரித்ர', 'ப்ரேம சந்திரிகா', 'ஜாதி விலாஸ்', 'ரஸவிலாஸ்', 'காவ்ய ரஸாயன', 'சுகசாகர தரங்க', 'தேவமாயா ப்ரபஞ்ச', 'நாடகம்', 'விருக்ஷ விலாஸ்', 'ப்ரம்ம தர்சன்', 'பச்சீஸி', 'தத்வதர்சன் பச்சீஸி', 'ஆத்ம தர்சன் பச்சீஸி', 'ஜகத்தர்சன் பச்சீஸி', 'ரஸானந்த லஹரி', 'ப்ரேம தீபிகா', 'ஸுமில வினோத்', 'ராதிகா விலாஸ்', 'நீதிசதக்', 'நகசிக', முதலியவை.

தேவின் நூல்களிலே நாம் அதிகமாக சிருங்காரத்தையும், உலகப் பற்றுதல் இன்மை (விரக்தி)யையுமே காண்கின்றோம். இவருடைய வர்ணனைகளிலிருந்து நாம் இவர் பாரதம் முழுவதும் சுற்றி பற்பல பாகங்களின் இயல்புகளை அறிந்தவர் என்று அறிகிறோம். பாரதத்தின் வெவ்வேறு பாகங்களிலுள்ள பெண்களின் நடை, உடை, பாவனைகளை பற்றியுள்ள இவருடைய வர்ணனைகள் மனதைக் கவரக்கூடியதாக இருக் கின்றன. காட்டாற்றின் ஓட்டம் போன்றுள்ள இவருடைய மொழியின் ஓட்டம் நம்மைப் பெரிதும் கவருகின்றது. இவருடைய கற்பனைகள் மிகவும் அழகு பொதிந்தவையாக இருக்கின்றன. நவரஸங்களைப் பற்றி அழகாக, தெள்ளிய நடையிலே இவர் விளக்கியுள்ளார். வெவ்வேறு பருவங்களில் தோன்றும் மனநிலைகளையும், மாற்றங்களையும் இவர் சிறப்பாக எடுத்துரைத்திருக்கின்றார். பொய்யான காயத்தைத் துறந்து மெய்யான பரமனுடன் இரண்டறக் கலப்பதே மனிதனின் முக்கியக் குறிக்கோளாக வேண்டும் என்பதைக் தன்னுடைய தத்துவ நூல்களிலே வலியுறுத்தியுள்ளார்.

ஹிந்தி இலக்கியத்திலே இவர் தனிமதிப்புடன் போற்றப்படும் ஓர் அறிய கவிஞர்.

தோஷ: சிருங்கபேரபுரம் என்ற ஊரில் தோன்றிய இவர் 'சுதாநிதி' என்ற யாப்பிலக்கண நூலை இயற்றியுள்ளார். இந்நூலின் கண் நவரஸங்களையும், உணர்ச்சியின் உதயம், ஒட்டம், மறைவு ஆகியவைகளைப் பற்றியும் சிருங்கார நாயகிகளின் வேறுபாடுகளைப் பற்றியும் விளக்கியுள்ளார். இவர் இயற்றிய வேறு இருநூல்கள் 'விநய சதக்', 'நகசிக' ஆகியவைகள்.

ஸ்ரீபதி : யமுனை நதிக்கரையில் உள்ள கால்பி என்ற இடத்திலே இவர் வசித்துவந்தார். யாப்பிணி நூல்கள் இயற்றும் ஆசார்யர்களில் முக்கியமான ஒருவராக இவர் கருதப்பட்டு வந்தார். இவரால் இயற்றப்பட்ட கீழ்கண்ட நூல்களை நாம் காணுகின்றோம். 'விக்ரம விலாஸம்', 'கவிகல்பத்ருமம்', 'சரோஜ கலிகா', 'அலங்கார கங்கா', 'காவ்ய சரோஜ்', 'ஸ்ரீபதி யின் லட்சணங்கள் உதாரணங்கள் ஆகியவைகள் முதிர்ந்த ஞானத்திற்கு எடுத்துக் காட்டாக இருக்கின்றன.

உதயநாத் கவீந்திர: இவர் அமேதி ராஜாவான ராஜா ஹிம்மத் சிங்கின் அவையிலே கவியாக இருந்தார். இவரால் எழுதப்பட்ட ஒரு நூல் நமக்குக் கிடைக்கின்றது. அது "ரஸசந்திரோதயம்' என்பது. இந்நூலின்கண் நாயகிகளின் வேறுபாடுகளைப் பற்றிக் கூறியுள்ளார்.

ரஸலீன்: சையது குலாம் நபீ என்ற இயற்பெயர் கொண்ட இவர் ஹர்தோயி என்ற இடத்தில் வசித்து வந்தார். இவர் அரபு பாரசீக மொழிகளிலே பெரிய வித்துவானக விளங்கினார். இவரால் இரண்டு ஹிந்தி நூல்கள் எழுதப் பட்டன 'அங்கதர்பண்', 'ரஸப்ரபோத்', 'அங்கதர்பண்' என்ற நூலிலே 177 செய்யுட்களில் நாயகியின் உடலழகை வர்ணித்துள்ளார். 'ரஸப்ரபோத்', என்ற நூலில் நவரஸங்களின் விசேடங்களைப் பற்றி விளக்கியுள்ளார். ரஸலீனின்

சொற்சிறப்பு புகழத்தகுந்தது. அடுக்குமொழி தொடுப்பதிலும் இவர் சிறந்து விளங்கினார்.

தூல்ஹகவி : உதயநாத் கவிந்திரின் மகனும் காளிதாஸ் கவியின் பேரனுமான இவர் ஒரு சிறந்த கவியாவார். இவர் எழுதிய நூல் 'கவி குல கண்டாபரண்'' என்பதாகும். வடமொழியில் உள்ள 'சந்திராலோக்' என்ற நூலைத்தழுவி எழுதப்பட்டுள்ள இந்நூலின்கண் அணிகளின் விளக்கங்கள் நன்றாகக் கூறப்பட்டுள்ளன.

ஆசார்ய பிகாரிதாஸ்: ப்ரதாப்கட் ஜில்லாவில் உள்ள ட்யோங்கா என்ற கிராமத்திலே இவர் பிறந்தார். யாப்பணி காலத்திய சிறந்த ஆசார்யர்களில் ஒருவராக இவரும் கருதபடுகின்றனர். இவரால் எழுதப்பட்ட கீழ்கண்ட நூல்களை நாம் காண்கின்றோம். 'நாமப்ரகாஷ்', 'ரஸசாராம்ச' 'சந்தார்ணவபிங்கல', 'காவ்ய நிர்ணய' என்ற நூல் வடமொழியில் எழுதப்பட்டுள்ள 'காவ்ய பிரகாஷ்' என்ற நூலைத் தழுவியெழுதப்பட்டுள்ளது. இவருடைய கவித்திறமை அக்காலத்தில் இருந்த பல்வேறு சிற்றரசர்களால் மிகவும் பாரட்டப்பட்டது.

குமாரமணிபட்: வடமொழியில் ஒரு சிறந்த கவிஞராகத் திகழ்ந்த இவர் 'ரஸிக ரஸால்' என்ற ஒரு ஹிந்தி யாப்பணி நூலை இயற்றியுள்ளார். இந்நூலும் 'காவ்ய ப்ரரகாஷ்' என்ற வடமொழி நூலைத் தழுவித்தான் எழுதப்பட்டுள்ளது.

சோமநாத்: இவர் பரத்புர் அரசரான பதன் சிங்கின் மகனான ப்ரதாப் சிங்கிற்காக 'ரஸபீயூஷநிதி" என்ற நூலை இயற்றினார். இந்நூலின்கண், காவ்யங்களின் வேறுபாடுகள், நவரஸங்கள், அணிகள் ஆகியவைகளைப்பற்றி விரிவாக விவரித்துள்ளார். இவர் எழுதிய மற்றற நூல்கள், 'கிருஷ்ண லீலாவதி' 'பஞ்சாத்யாயி', 'சுஜான் விலாஸ்', 'மாதவ விநோத நாடக' ஆகியவை. இவர் எழுதிய எல்லா நூல்களும் சிறந்த தாகக் கருதப்படுகின்றனர்.

ராம்சிங்: நகர்கட்டின் மஹாராஜாவாகத் திகழ்ந்த இவர் ஒரு சிறந்த கவிஞராகவும் விளங்கினார். காவ்ய சாஸ்திரத்தின் பல்வேறு விதிமுறைகளை விளக்கும் அநேக நூல்களை இவர் இயற்றியுள்ளார். 'ரஸசிரோமணி', 'ஜுகல் விலாஸ்', 'ரஸநிவாஸ்' 'அலங்காரதர்பண்' ஆகியவைகள் இவரால் எழுதப்பட்ட சில முக்கியமான நூல்கள். தெளிவாக விஷயத்தை மனதிலே பதியுமாறு எழுதுவதிலே இவர் சிறந்திருந்தார். ஹாஸ்ய ரஸத்தைப் பற்றி விரிவாகக் கூறியுள்ளார். மாயாரஸம் என்ற ஒரு ரஸத்தைப் பற்றியும் இவர் கூறியுள்ளார்.

பத்மாகர்: சிருங்கார காலக் கவிகளுள் இவர் முக்கிய மானவராகக் கருதப்படுகின்றார். காவ்ய சாஸ்திர நூல்கள் இல்லாமல் சுத்தமான இலக்கிய நூல்கள் இயற்றுவதிலும் இவர் திறமை பெற்றிருந்தார். இவர் ஆந்திர தேசத்திலிருந்து வடக்கே குடியேறிச்சென்று ஹிந்தி மொழியில் மிகச் சிறந்த கவிஞராகத் திகழ்ந்தார் என்பது இவர் சிறப்பிற்கும் திறமைக்கும் ஒரு சான்று ஆகும். இவர் கீழ்கண்ட நூல்களை இயற்றியுள்ளார். 'பத்மாபரண்', 'ஜகத்விநோத', 'ஹிம்மத் பகாதூர் விருதாவளி', 'கங்காலஹரி', 'ப்ரபோதபசாஸர்', 'ராம ரஸாயன'. பத்மாகரின் காப்பியங்களில் உணர்ச்சிச் செறிவும், அழகான அணிகளின் மனதைக் கவரும் ப்ரயோகங்களும் காணப்படுகின்றன. அழகான சொற்சித்திரங்களை அமைப்பதிலே இவருக்கு அதிகமாக பிரசித்தி கிடைத்திருக்கின்றது. பலவித இயற்கைக் காட்சிகளைச் சித்தரிப்பதில் தன்னுடைய முழு சாமார்த்தியத்தை வெளிப்படுத்தியுள்ளார்.

ரஸிக கோவிந்த்: இவர் பிருந்தாவனத்தில் வசிக்கும் நிம் பார்க சம்பிரதாயத்தின் தலைவரான மஹாத்மா ஹரிவியாசரின் சிஷ்யராகத் திகழ்ந்தார். இவரால் கீழ்கண்ட நூல்கள் இயற்றப்பட்டுள்ளன. 'ராமாயண சூசணிகா', 'கலியுக ராஸோ' 'பிங்கள', 'சமய பிரபந்தம்', 'அஷ்ட தேசபாஷா', 'லட்சுமண சந்திரிகா', 'ரஸிக கோவிந்தானந்தகன்'. இவைகளுள் 'ரஸிக கோவிந்தானந்தகன்' என்ற நூல் மிகப்பெரிய யாப்பணி

நூலாகக் கருதப்படுகின்றது. இந்நூலின்கண் 'ரஸங்கள்' நாயக–நாயிகைகை வேறுபாடுகள் அணிகள், காப்பியதோஷங்கள் ஆகியவைகளைப் பற்றி விரிவாக வரைந்துள்ளார். யாப்பணி கால நூல்களுள் இந்த ஒரு நூலில்தான் உரைநடையும் கையாளப்படுகின்றது. அணிகளுக்காக இவர் மேற்கொண்ட பல உதாரணங்கள் வடமொழித் தழுவலாக இருக்கின்றன.

க்வால கவி: இவர் ஒரு சிறந்த அஷ்டாவதானியாகக் கருதப்படுகின்றவர். மதுரா நகரிலே பிறந்த இவர் கீழ்கண்ட நூல்களை இயற்றியுள்ளார். 'ஜமுனா லஹறி', 'ஹம்மீர்ஹட்', 'கோபீ பசிஸீ', 'நகசிக', 'துஷண தர்பண்', 'ரஸிகாநந்த' 'ரஸரங்க', 'அலங்கார பரம மஞ்சன்', 'பன்ஸீபீஸா', 'கவிதர்பண்', 'பக்த பாவன்', 'நேஹ நிபாஹன', 'குப்ஜாஷ்டக்', 'ராமகிருஷ்ணாஷ்டக்', 'கணேஷாஷ்டக', 'ராதிகாஷ்டக', 'தீருகசதகம்', 'சாஹித்யாநந்த', 'சாஹித்ய தூஷண்', 'சிருங்கார கவித்த'. இவருடைய நூல்களிலே சொற்களை அடுக்கித் தொடுத்து, அணிகளை இடையிடையே அழகாகத் தொகுத்துக் கொடுத்துள்ளார். இவருடைய கற்பனை விண்ணிலே பண் பாடிப் பறந்து செல்லும் பறவைளைப் போல் திகழ்கின்றது.

சேனாபதி: இக்காலத்திய மிகச் சிறந்த கவிகளுள் இவரும் ஒருவர் ஆவர். கங்கைக் கரையில் உள்ள அநூப் நகரத்தில் இவர் வசித்து வந்தார். இவருடைய தகப்பனாரின் பெயர் கங்காதர தீஷிதர். இவரால் எழுதப்பட்டதாக இரண்டு நூல்கள் குறிக்கப்படுகின்றன. கவித்த ரத்னாகர், காவ்ய கல்பத்ரும். தான் ஒரு சிறந்த கவிஞர் என்பதை இவர் தன்னுடைய ஒவ்வொரு செய்யுளிலும் நிருபித்திருக்கின்றார். சிருங்கார வர்ணனைகளில் இவருக்கு அதிகச் சிறப்பு கிடைத்துள்ளது. பருவங்களை வர்ணிப்பதில் இவர் தன்னுடைய கவித்திறமையை நன்றாக வெளிப்படுத்தியுள்ளார்.

கனானந்த்: கவித்த சவையா என்ற செய்யுள் முறையை நன்றாகக் கையாண்டுள்ள புலவர்களுள் இவர் தலைமை ஸ்தானம் வகிக்கின்றவர். தில்லி பாத்ஷா ஆன முஹம்மத் ஷா

என்பவரின் அவைக்கவியாகத் திகழ்ந்து வந்தார். 1739ம் வருடத்தில் நடந்த நாதிர்ஷாவின் படுகொலை விளையாட்டிலே இவர் இறந்தார். இவரால் இயற்றப்பட்ட புத்தகங்கள் கீழ்வருமாறு–'ஸுஜான் ஸாகர்', 'கனானந்த கவித்த', 'ரஸகேலி வல்லி', 'க்ருபாாகாண்ட நிபந்த', 'கோகஸார', 'விரஹலீலா'. கனானந்தின் மொழியில் சொற்செறிவும் கம்பீரமும் அதிகமாகக் காணப்படுகின்றன. சரளமான சுத்தமான சொற்களைக் கையாண்டு ஆழ்ந்த கருத்துக்களை அவற்றுள் அடக்கிக் கொடுப்பதில் இவர் நிகரற்றவராக விளங்கினார். சேர்க்கை சிருங்காரம். பிரிவு சிருங்காரம் இரண்டையுமே நன்றாக வருணித்துள்ளார்.

ஆலம்: சாதியில் வேதியராகப் பிறந்து காதலுக்காக மதம் மாறிய கவிஞர் இவர். ஆலம் ஔரங்கசீப்பின் பிள்ளையான முஅஸ்ஸம்மின் ஆதரவிலே இருந்து வந்தார். இவரால் எழுதப் பட்டதாகக் கீழ்க்கண்ட மூன்று நூல்கள் கருதப்படுகின்றன. ஆலம் கேலி, மாதவானல காமகந்தலா, சியாம சநேஹீ. பிரிவாற்றாமையை வருணிப்பதிலே இவருக்கு விசேஷமான சிறப்புக்கிடைத்திருக்கின்றது. இவருடைய கவிதைகளிலே காட்டாற்று வெள்ளம் போல் ஓட்டம் இருக்கின்றது என்று சொல்லுவார்கள். செய்யுளின் கடைசிவரியில் தன்னுடைய சாமர்த்தியத்தை நன்றாக வெளிப்படுத்துவது இவரது வழக்கம். இவருடைய நூல்களிலே உருதுவின் பிரபாவம் பட்டுள்ளதை நாம் காண்கின்றோம்.

ரஸநிதி: இவருடைய இயற்பெயர் பிருத்வீசிங் என்பது இவர் ததியா ராஜ்யத்தில் உள்ள பரோனி என்ற இடத்தில் ஜாகீர்தாராக இருந்தார். இவரால் கீழ்க்கண்ட நூல்கள் இயற்றப் பட்டன. 'ரதன் ஹஜாரா', 'விஷ்ணுபத கீர்த்தனை', 'கவித்த', 'பாரஹமாஸீ', 'கீதசங்கிரஹ', 'ரஸநிதிசாகர்', 'அரில்ல ஹிண் டோல'. தம்முடைய நூல்களிலே அன்பைப்பற்றிச் செவ்வனே உணர்ச்சியுடன் பல இடங்களிலே வருணித்துள்ளார். இவருடைய கவிதைகளிலே பாரசீக மொழியின் பிரபாவம் கண்டுள்ளது.

**கிரிதர் கவிராய்:** ஹிந்தி இலக்கியத்தில் குண்டலியா என்ற விசேஷமான செய்யுள் முறையைக் கையாண்டு புகழ்பெற்ற கவிஞர் இவர். அணிகளால் அலங்கரிக்கப்படாத எளிய நடையிலே இவரது நூல்கேள் இயற்றப்பட்டுள்ளன. இவரது கவிதைகளிலே உபதேசங்களையும் நீதிகளையும் நாம் அதிகமாகக் காணுகின்றோம்.

**தீனதயாள் கிரி:** ஒரு மடத்தலைவரின் சீடராகத் தன் வாழ்நாட்களைக் கழித்த இவர் ஒரு சிறந்த கவியாகக் கருதப்பட்டு வந்தார். சிலேடை, யமகம் ஆகிய அணிகளை அழகாகக் கையாண்டுள்ளார்.

**பூஷண்:** சிருங்கார காலத்தின் சூழ்நிலையிலே வீரக் காப்பியங்கள் இயற்றிய கவிகளுள் உண்டு. அவர்களுள் முக்கியமானவர் பூஷண் என்பவர். இவர் பிரசித்தி பெற்ற கவிகளான சிந்தாமணி, மதிராம் ஆகியவர்களின் சகோதரர். கி.பி. 1670ம் ஆண்டிலே இவர் பிறந்தார். சிறு வயதிலேயே வீட்டாருடன் மனவருத்தங்கொண்டு வெளியேறிய இவர் முதலில் சத்ரஸாலின் அவையிலும், பிறகு மராட்டியச் சிங்கமான சிவாஜியின் அவையிலும் கவிஞராக அடைக்கலம் புகுந்தார். தன்மானந்தனைப் பொன்னான இலட்சியமாகக் கொண்ட இவருடைய மனத்திலே இஸ்லாமிய அரசர்கள்மேல் இயற்கையான வெறுப்பு மேலோங்கி நின்றது. வேதங்களிலே கூறப்பட்டுள்ள சிறந்த நல்லொழுக்கங்களை மக்களுக்குத் தெரிவிப்பதற்காகவும், கத்தியைக் கடவுளாகக் கொண்டு பாரத மக்களைப் பலவந்தமாக மதமாற்றம் செய்துவந்த இஸ்லாமிய அரசர்களின் அகங்காரத்தை அடக்குவதற்காகவும் போர் வேடம் பூண்ட சிவாஜியின் குடை நிழலிலே பூஷணது கீர்த்தி பரவ ஆரம்பித்தது. பூஷணின் மனத்திலே தேசிய உணர்ச்சி மேலோங்கி நின்றது. சிவாஜியின் புகழ்பாடி இவர் இயற்றிய ஒவ்வொரு செய்யுளும் வீர ரஸத்திற்குச் சிறந்த உதாரணமாக விளங்கி வருகின்றது. மனதிலே ஒரு நிரந்தரரமான ப்ரபாவத்தை உண்டுபண்ணக்கூடிய சக்தி இவருடைய கவிதை களிலே காணப்படுகின்றது. மொழியிலே, சொற்றொடரிலே,

உணர்ச்சி பொங்கும் நடையிலே பூஷணது சிறப்புக் காணத் தகுந்தது. காட்டாற்று வெள்ளம் போன்ற வேகமான ஓட்டம் இவருடைய நடையிலே காணப்படுகின்றது. ஒரு சக்ரவர்த்தி தன் பிரஜைகள் மேல் ஆதிக்கம் செலுத்துவது போல மொழியின் மீது இயல்பான ஆதிக்கம் செலுத்தித் தன் செய்யுட்களை இயற்றியுள்ளார். இவருடைய கற்பனைகள் இயல்பாக அமைந்துள்ளன. பூஷணால் கீழ்கண்ட நூல்கள் இயற்றப்பட்டன. 'சிவராஜ பூஷண்', 'பூஷண் ஹஜாரா', 'பூஷண் உல்லாஸ்', 'தூஷண் உல்லாஸ்', 'சிவா பாவனி', 'சத்ரஸால்தசக்'.

மானகவி: மேவாடின் அரசரான ராஜசிம்ஹரின் அவைக் கவியாக வந்த இவரால் இயற்றப்பட்ட நூல் 'ராஜவிலாஸ்' என்பது. இதன்கண் மேவாட் அரசர்களின் வம்ச பரம்பரையை வருணித்துள்ளார். அணிகளை அழகாக உபயோகித்து வீறு மிக்க நடையிலே இவர் தன்னுடைய நூலை இயற்றியுள்ளார். பருவகால வருணனை, உடலின் பாகங்களின் வருணனை ஆகியவைகள் இவருடைய நூலிலே சிறந்து காணப்படுகின்றன. ஹிந்தியில் உள்ள பல்வேறு யாப்புகளையும் உபயோகித்துள்ளார்.

லால் கவி: ஆந்திர தேசத்திலிருந்து வடக்கே சென்று குடியேறிய குடும்பத்தைச் சேர்ந்தவர் இவர். சத்ரஸால் அரசரின் அவையிலே புகலிடம் பெற்றுத் தன் கவித்திறனை வெளிப்படுத்தி வந்தார். இவரால் இயற்றப்பட்ட நூல்கள் கீழ்வருமாறு. 'சத்ரப்ரசஸ்தி', 'சத்ர சாயா', 'கத்ரகீர்த்தி', 'சத்ரசந்தி', 'சத்ரஸால் தசக்', 'சத்ர ஹஜாரா', 'சத்ர தண்ட', 'சத்ர ப்ரகாஷ்', 'ராஜா விநோத்'. 'சத்ரபிராகாஷ்' என்ற நூல் தான் இவரது சிறந்த நூலாகக் கருதப்படுகின்றது. இவருடைய வருணனைகள் சுவை குன்றி இருப்பதால் மொழியின் சிறப்புக்கூட அதிகமாக வெளிப்படவில்லை.

ஸ்ரீதர்: ப்ரயாகில் வசித்து வந்த இவர் முரளீதர் என்ற புனைப்பெயரையும் கொண்டு கவிதைகள் இயற்றிவந்தார். இவர் 'ஜங்நாமா' என்ற பரணி நூலை இயற்றியுள்ளார். இதன் கண் பருக்ஷயர் ஜஹாந்தர் ஷாவுடன் நிகழ்த்திய யுத்தத்தின்

நேர்முக வர்ணனையை நாம் காணுகின்றோம். ஆயிரத்தி ஆறுநூற்று முப்பது வரிகளிலே கவி நம்முன் போரின் பயங்கரத்தை, கத்திகள் உரசும் சத்தத்தை, களிறுகள் பிளிறும் ஒலியை, வெட்டுண்ட வீரர்களின் மரண ஓலத்தைக் கொண்டு வந்து நிறுத்தி விடுகின்றார். இவரால் எழுதப்பட்ட மற்ற நூல்கள் 'ராக ராகினீ', 'நாயிகா பேத்த'.

ஸூதன்: மதுரையிலே வசித்து வந்த இவர் பரத்பூர் அரசரான சுஜான்சிங்கின் அவைக் கவியாகத் திகழ்ந்து வந்தார். இவர் தனது போஷகரின் புகழ்பாடி 'சுஜான் சரித' என்ற நூல் இயற்றியுள்ளார். இதன் கண் யுத்த வருணனைகள் மிகவும் சிறப்பாக விவரிக்கப்பட்டுள்ளன. இவர் தம் காலத்தில் வசித்து வந்த ஏறக்குறைய நூற்றிஎழுபத்தைந்து கவிகளைப் பற்றி கூறியுள்ளார். வட இந்தியாவில் பல்வேறு இடங்களில் உள்ள தாவர வர்க்கங்கள், சாதிகள் ஆகியவைகளைப் பற்றியும் இவர் தம் நூலிலே விவரித்துள்ளார். அடுக்கு மொழியை உபயோகிப்பதிலும் தன் திறமையை வெளிப்படுத்தியுள்ளார்.

விருந்த கவி:– துளஸீதாஸிற்கும் ரஹீமிற்கும் பிறகு உபதேச மொழிகளைக் கவிதை மூலமாக விளக்குவதில் விருந்தகவி நிகரற்றவராக விளங்கினார். இவர் இராஜஸ்தானில் உள்ள மேட்தா என்ற இடத்திலே தோன்றினார். ஜோத்பூர் அரசரான மஹாராஜ் ஜஸ்வந்த் சிங்கின் அவையிலே கவியாகத் திகழ்ந்தார், ஔரங்கசீப்பின் அவையிலும் இவர் கவிஞராகக் கருதப்பட்டு வந்தார். இவரால் கீழ்க்கண்ட நூல்கள் இயற்றப்பட்டன. 'சத்யஸ்வரூப', 'ரூபக வசனிகா', 'அலங்கார ஸத்ஸயீ', 'சிருங்கார சிக்ஷா', 'ஹிதோபதேஸாஷ்டக', 'பாவ பஞ்சாக்ஷிகா', 'விருந்த ஸத்ஸயீ'. 'விருந்த ஸத்ஸயீ' என்ற நூலிலே எழுநூறுக்கதிகமான செய்யுட்களிலே வாழ்க்கையிலே பல நிலைகளிலே தோன்றும் அனுபவங்களைப் பற்றியும் அவற்றின் மூலமாக நாம் கொள்ளவேண்டிய பாடங்களையும் விவரித்துள்ளார். இவரைப் பொன்மொழிக் கவிஞர் என்று கூறினாலும் மிகையாகாது.

யாப்பணி காலக் கவிகள், ஆசார்யர்கள் ஆகியவர்களின் பட்டியல் இதனுடன் முடிந்ததாக நாம் கருதமுடியாது. இதைத் தவிர ஏறக்குறைய நாற்பத்திரண்டு கவிகளைப் பற்றிய விவரங்கள் நமக்குக் கிடைக்கின்றன. இவர்களில் பலரது நூல்கள் ஓலைச்சுவடிகளாகவும், பழங்கால கையெழுத்து நூல்களாகவும் இன்று கிடைக்கின்றன. இக்காலத்தில் இயற்றப்பட்ட நூல்களிலே கவிநயம் மலிந்திருப்பதை நாம் காணுகின்றோம். வடமொழியில் வளர்ந்து வந்த யாப்பணி இலக்கணப் பரம்பரையை ஹிந்தியில் கொண்டுவந்து அதைச் சிறப்புறச் செய்த பெருமை இக்காலத்துக் கவிகளைச்சாரும். இக்காலத்திலே லௌகீகமான சிருங்கார விஷயங்களின் மேல்தான் அதிகமாக தியானம் செலுத்தப்பட்டது. பெண்ணின் உருவ அமைப்பை வருணிப்பதிலே, அங்கம் அங்கமாக அவனது அழகை விவரித்து கூறுவதிலே, அரசர்களின் உல்லாஸ கேளிக்கைகளைக் கிடைப்பதற்கரிதான பேறாகக் கருதிப்புகழ்வதிலே கவிதை வெள்ளமாகப்பொங்கிப் புரண்டோடிச் சென்றது என்றே நாம் கூறவேண்டும். யாப்பணி முதலிய பல்வேறு கவிநயங்களையே முக்கியமாகக் கருதி இக்காலத்திய புலவர்கள் கவிதையின் உணர்ச்சிச் செறிவைப் புறக்கணித்துவிட்டனர் என்றும் பல அறிஞர்கள் கூறுவார்கள். ஆனால் இதற்காகக் கவிஞர்களைச்குறை கூறமுடியாது. அந்தக் காலத்திலே இஸ்லாமிய கலாச்சாரத்தினால் இந்திய வாழ்வினிடையே புகுத்தப்பட்ட கேளிக்கை ஆர்வமானது கவிஞர்களையும் ஆட்டுவித்தது. என்ன நடந்தாயிலென்ன? கேளிக்கையில் மூழ்குவதைவிடச் சிறந்த வாழ்க்கையின் இலட்சியம் ஏது என்ற அலட்சியமான மனோபாவம் அக் காலத்தில் பரவலாக இருந்தது. ஆனால் யாப்பணி இலக்கிய கால நூல்கள் ஹிந்தி இலக்கிய வளர்ச்சியின் சிறப்பை விளக்குவதற்குக் கலங்கரை விளக்குகளாக விளங்குகின்றன என்றால் மிகையாகாது.



# புத்துணர்ச்சிக் காலம்

கடந்த நூற்றாண்டின் பிற்பகுதிலே பாரதத்தின் அரசியல், சமூக வாழ்வில் திசை மாற்றம் ஏற்பட்டது என்பது மறுக்க முடியாத உண்மை. மேற்கத்திய நாடுகளின் அரசியல் தொடர்பு நமது நடை, உடை பழக்கங்களில் மாறுபாட்டை உண்டு பண்ணியது. விஞ்ஞானத்தின் வளர்ச்சி காரணமாக முன்னேற்ற மடைந்து வரும் மேற்கத்திய நாடுகளின் இயல்புகளை சமுதாய கலாச்சாரப் பாதைகளை நாம் கடைப்பிடிக்கத் தொடங்கிய காலமிது. வளம் மிகுந்த மொழியான ஆங்கிலம் பாரதத்திலும் பரவ ஆரம்பித்த காலமிது. ஆன்மீகநோக்குக் குறைந்து பொருளாதார ரீதியிலே வளர்ச்சியை மதிப்பிடத் தொடங்கிய காலமிது. ஆங்கிலம் புகுத்தப்படுவதற்கு முன்பு வட இந்தியாவில் பாரசீகம் அரசியல், நீதிமன்றமொழியாகவே இருந்தது. மக்களால் பேசப்பட்டு வந்த மொழியான ஹிந்தி அரசியல் துறையில் பாரசீக அரபு மொழிச்சொற்களை மேற் கொண்டு உருதுவென்ற புது உருவத்தைப் பெற்று வளர்ந்து கொண்டிருந்தது. ஆனால் கல்கத்தாவிலிருந்து அக்காலத்தில் ஆண்டு வந்த ஆங்கிலேயர்கள் ஹிந்தி மொழி ஒன்றுதான். ஏதோ ஒரு உருவத்தில் எல்லோராலும் புரிந்துகொள்ளப்படும் மொழி என்பதை அறிந்திருந்தனர். ஆகவேதான் ஆங்கிலேயர்களின் ஆதரவு பெற்றுப் புதிய உணர்ச்சியுடனும் ஊக்கத்துடனும் வளர்ச்சி பெற ஆரம்பித்தது ஹிந்தி மொழி. ஆங்கில மொழியின் அபரிமிதமான வளர்ச்சி பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதி வரை உள்ள காலத்தில் ஏற்பட்டது. 1858–ம் வருடத்திலிருந்து ஆங்கிலேய அரசாங்கமே நேரடியாக இந்தியாவின் அரசாட்சிய மேற்கொண்டது என்பதை யாவரும் அறிந்ததே. அந்தக் காலம் முதல் இன்றுவரை உள்ள நூறு ஆண்டுகளில் ஹிந்தி இலக்கியம் மகோன்னத வளர்ச்சி அடைந்துள்ளது. ஹிந்தி வழங்கப்படாத பிரதேசமான

வங்கத்தில் ஹிந்தி அறியாத ஆங்கிலேயரது ஆதரவில் ஹிந்தி இலக்கியத்தின் புத்துணர்ச்சிக் காலம் தொடங்குகிறது. காலப் போக்கிலே இந்நூற்றாண்டின் இலக்கிய வளர்ச்சியின் விவரிப்பது தெளிவாக இருக்காது. ஆகவேதான் இலக்கியத்தின் பல்வேறு துறைகளைத் தனித்தனியே எடுத்துக் கொண்டு அவைகளின் வளர்ச்சியினை இங்கு கூறுவோம். கீழ்க்குறிப்பிட்டுள்ள பல்வேறு துறைகளில் இக்காலத்தில் இலக்கிய வளர்ச்சி ஏற்பட்டது. 1. பழங்காப்பிய முறையினைத் தழுவி எழுதப்பட்ட கவிதைகள். 2. புத்துணர்ச்சிக் கவிதைகள் 3. உரைநடை இலக்கியம்.

**பழங்காப்பிய முறையினைக்தழுவி எழுதப்பட்ட கவிதைகள்**

இலக்கியப் பரம்பரையிலே திசைமாற்றம் ஏற்படும்போது முன்னிருந்த நடைமுறைகளும் பழக்க வழக்கங்களும் திடீரென நின்றுபோய்ப் புதிய நடைமுறைகள் தோன்றுவ தில்லை. பழைய நடைமுறைகளும் வளர்ச்சி குன்றிய நிலையிலாவது சிறிதுகாலம் தமது இலக்கிய மரபினைக் தொடர்கின்றன. அது போன்று யாப்பணி இலக்கிய கால மரபுகள் இக்காலத்தேயும் சிறிது தொடர்கின்றன. இந்த இலக்கிய மரபின்கீழ். நாம் கீழ்க்குறிப்பிட்டுள்ள புலவர்களின் நூல்களைக் காண்கின்றோம்.

**சேவக்:** அசினியின்கண் வசித்துவந்த பிரசித்தி பெற்ற கவியான டாகூரின் பெயரர் இவர். இவர் 1815–ம் ஆண்டில் தோன்றினார். இவரால் கீழ்க்கண்ட நூல்கள் இயற்றப்பட்டன. 'வாக் விலாஸ்' 'பீபா ப்ரகாஷ்' 'ஜயோதிஷ ப்ரகாஷ்' 'பரவை நாயிகா பேத'. இவருடைய கவிதைகளிலே தெளிவான நடையும், அழகான அணிகளும் காணப்படுகின்றன.

**சர்தார் கவி:** இவர் காசி அரசரான ஈஸ்வரி பிரசாத் நாராயண சிங்கின் ஆதரவில் கவியாகத் திகழ்ந்தார். சிருங்கார இலக்கியப் பரம்பரையைப் பின்பற்றி இவரால் இயற்றப்பட்ட நூல்கள் பின்வருமாறு – சாஹித்ய சரஸி, வ்யங்கிய விலாஸ்,

ஷட்ருது, சிருங்கார சங்கிரஹ, சாஹித்ய சுதாகர், ஹனுமத் பூஷண், துலஸீ பூஷண், மானஸ பூஷண், ராம ரத்னாகர், ராம ரஸ ஜந்திர, ராமலீலா பிரகாஷ், இவருடைய கவிதைகள் மிகவும் தெளிவாக எழுதப்பட்டுள்ளன. இவருடைய கற்பனையின் ஓட்டம் கோர்வையுள்ளதாகவும் தெளிவாகவும் நமது மனதிலே காப்பிய நிறைவை உண்டு பண்ணக் கூடியதாகவுவம் இருக்கின்றது.

கோவிந்த கில்லா பாய் குஜராத்தில் உள்ள கிஹோர் என்ற இடத்திலே 1847-ம் வருடத்தில் தோன்றினார். இளமையிலே ஹித்தி இலக்கியத்தின் சிறந்த நூல்களை நன்றே கற்க வேண்டும் என்ற அவா இவரது உள்ளத்திலே மேலோங்கி நின்றது. இந்த அவாவினால் உந்தப்பெற்று இவர் இலக்கிய கர்த்தாவாக ஆனார். இவரால் எழுதப்பட்ட நூல்கள் கீழ்க்கண்டவாறு:- 'விஷ்ணு விநய பச்சீஸீ', 'பரப்ருஹ்ம பசீஸீ', 'விவேக விலாஸ்', 'லட்சண பத்தீஸீ', 'நகசிக சந்திரிகா', 'ராதாமுக ஷோடஸீ' 'பயோதர ஷோடஸீ', 'நைன மஞ்சரி' 'ஷட்ருது வர்ணன்" ஆகியவை. குஜராத்தி மொழி பேசுபவராக இருந்த போதிலும் ஹிந்தியில் உள்ள இவரது கவித்திறன் மெச்சத்தகுந்தது. கிருஷ்ணபக்தியிலே மூழ்கி, கண்ணனின் சிருங்கார லீலைகளை இவர் அழகாக வர்ணித்துள்ளார். இவருடைய கவிதைகளிலே மனதைக் கவரும் முறையில் அணிகள் பிரயோகிக்கப்பட்டுள்ளன. அடுக்குமொழி தொடுப்பதிலும் திறமையை இவர் பலவிடங்களில் காண்பித்துள்ளார். சமஸ்யா பூர்த்தி என்ற செய்யுள் முறையையும் நன்றாகக் கையாண்டிருக்கின்றார்.

ஈஸுரி: புந்தேல்கண்டில் வசித்து வந்த இவர் கிராமீயப் பாடல்களை இயற்றுவதிலும் அவைகளைப் பரப்புவதிலும் அதிகமாக ஆர்வம் காட்டி வந்தார். 'பாக்' என்ற பெயரை கொண்ட இவரது செய்யுட்கள் மிகவும் பிரசித்தி பெற்றன.

**பத்ரீ நாராயண் சௌதரி "ப்ரேம்கன்":** இவர் ஒரு பெரிய வியாபாரிகள் குடும்பத்தில் தோன்றினார். தனவந்தரராக இருந்தமையால் பல கவிஞர்களுக்குப் போஷகராக விளங்கினார். இவரால் இயற்றப்பட்ட செய்யுட்கள் 'ப்ரேம்கன சர்வஸ்வ" என்ற நூலிலே தொகுக்கப்பட்டுள்ளன. சிருங்கார இலக்கிய பால பழக்க வழக்கங்களை அனுசரித்து இவர் அநேக செய்யுட்களை இயற்றியுள்ளார்.

**பிரரதாப் நாராரயண் மிஸ்ர :** பைஜே என்ற இடத்திலே 1857–ம் வருடம் இவர் தோன்றினார். ஹாஸ்ய ரஸத்தைக் கையாண்டு அநேக நூல்களை இவர் இயற்றியுள்ளார். 'கலி கேதுகரூபக' 'கலி பிரபாவ நாடக' 'ஜுஆரீ குஆரீ பிரஹஸனம்' 'ப்ரேமப்ருஷ்டாவளி' 'மானவிநோத' ஆகியவை இவரால் இயற்றப்பட்ட சில நூல்கள். இவருடைய சொல் நயமும் ஹாஸ்யமும் மனதைக் கவரும் வகையில் அமைந்துள்ளன.

**டாகுர் ஜகமோன் சிங்:** இவர் விஜயராகவ கட்டின் அரசரான டாகுர் சசரயூசிங்கின் புதல்வராகத் தோன்றினார். கீழ்கண்ட நூல்களை இவர் இயற்றியுள்ளார். 'ஷ்யாமா ஸ்வப்ன' 'ஷ்யாம சரோஜினீ' 'ப்ரேம சம்பத்திலதா'. இவருடைய கவிதைகளில் செயற்கைப்ப பிரயோகங்கள் அதிகமாகக் காணப்படுகின்றன. ஆனால் சிருங்கார வருணனைகள் பல இடங்களில் தத்ரூபமாக உள்ளன.

**நாதூ ராம் சங்கர் சர்மா:** இவர் அலீகட்டில் பிறந்தார். இளமையில் பல கவிகளுடன் இவருக்குத் தொடர்பு ஏற்பட்டதால் கவிதை இயற்றும் ஆற்றலைச் சுலபமாக அடைந்தார். இவா நவரஸங்களையும் உபயோகித்து மிகவும் அழகாகத் தன்னுடைய கவிதைகளை இயற்றியுள்ளார். சொல் லோட்டத்திலே உணர்ச்சியைத் தெள்ளென எடுத்துக் காட்டுவதில் இவருக்கு அதிகமாக வெற்றி கிடைத்துள்ளது. இவருக்குக் 'கவி சிரோமணி' என்ற பட்டமும் வழங்கப்பட்டது. இவர் எழுதிய கவிதைகள் 'சங்கர் சர்வஸ்வ' என்ற நூலாகத் தொகுக்கப்பட்டுள்ளன.

'ஜகந்நாத்தாஸ் 'ரத்னாகர்' : 1866-ம் ஆண்டிலே காசி நகரத்தில் இவர் தோன்றினார். இவர் பாரசீக மொழியிலே ஆய்வு பெற்றிருந்தார். முதலில் இவர் உருதுவில் கவிதைகள் இயற்றி வந்தார். பிறகு ஹிந்தியில் இயற்ற ஆரம்பித்தார். பழங் காலக் காப்பியப் பரம்பரையை அனுசரித்து எழுதிய கவிகளுள் இவர் தலை சிறந்தவராகக் கருதப்படுகின்றார். இவரால் இயற்றப்பட்ட நூல்கள் பின் வருமாறு 'சாஹித்ய ரத்னாகர்' 'சமாலோசனா' 'உத்தவசதக' ஆகியவை. 'உத்தவசதக' என்ற இவரது நூல் ஹிந்தி இலக்கியத்தில் வெகுவாகப் போற்றப் படுகின்றது. சொல் நயமும் பொருள் நயமும் நன்கே கனிந்து இசைந்து அமுதத்தின் ஓட்டம் போல நமது மனதைக் கவருகின்றன. இவரது கற்பனையில் ஒருதெளிவும் நிறைவும் நாம் காணுகின்றோம்.

சிவ சம்பந்தி சர்மா : இவர் ஆஜம்கட்டிலே 1863-ம் வருடத்தில் தோன்றினார். இளமையிலிருந்து சாஹித்ய கோஷ்டிகளிலே ஆர்வத்துடன் பங்கெடுத்துத வந்தார். எளிமையையும் உயர்ந்த எண்ணங்களையும் தன் வாழ்க்கை லட்சியமாகக் கொண்ட இவர் நாற்பதிற்கதிகமான நூல்கள் இயற்றியுள்ளார். இவைகளில் கீழ் குறிப்பிடப்பட்டுள்ள நூல்கள் முக்கியமாகக் கருதப்படுகின்றன. 'பூமிஹார பூசுர பூஷண்' 'ருதுவிநோத' 'ஸாவன் விரஹவிலாபம்' உபாத்யாய உபத்ரவ' 'சன்சார ஸ்வப்ன' ஆகியவை இவர் கிராமியப் பாடல்களின் முறையைத் தழுவி அநேக கவிதைகளை இயற்றியுள்ளதால் அவற்றில் இசையழகு மிளிர்வதை நாம் காண்கின்றோம்.

ராம சரித உபாத்யாய : 1872-ம் ஆண்டிலே காஜிபூரில் இவர் தோன்றினார். கீழ்க் கண்ட நூல்கள் இயற்றிய பெருமை இவரைச் சாருகின்றது. 'சிராவண சிருங்கார்' 'சுதா சதகம்' 'ஸத்ஸயீ ' 'ராமசரித சிந்தாமணி' கடைசியாகக் கூறப்பட்ட நூல் தான் இவரது சிறந்த நூலாகக் கருதப்படுகின்றது.

இவர்களைத் தவிர பழங்காப்பிய காலப் பரம்பரையைப் பின்பற்றி எழுதிய கவிகளுள் கீழ்க் குறிப்பிடப்பட்டுள்ளவர்களும் முக்கியமாகக் கருதப்படுகின்றனர் – 'சிவரத்ன சுக்ல' 'வியோகீஹரி' 'சத்யநாராயண நவரத்ன' 'ராய் தேவி ப்ரசாத் பூர்ண' 'லாலா பகவான் தீன்' 'சுதாகர் த்விவேதீ' 'பாபூ ராதாகிருஷ்ணதாஸ்' 'ஜகந்நாத் தாஸ் பானு" 'விநாயகராவ்'

## புத்துணர்ச்சிக் கவிதை

காலப்போக்கிலே ஒரு மொழியின் சொற்களின் உருவத்திலே மாறுதல் ஏற்பட்டு விடுகின்றது என்பதை மொழி வல்லுநர்கள் ஏற்றுக் கொள்ளுகின்றனர். பழங்காப்பிய பரம்பரை என்ற முறையில் ஹிந்தி மொழியின் உருவம் இன்றுள்ள ஹிந்தியின் உருவத்திற்குச்சற்றே மாறுபட்டிருந்தது. இன்று பழக்கத்திலுள்ள ஹிந்தி 'கடீபோலீ' என்று கூறப்படுகின்றது. சுத்தமான பாரதீயச் சொற்றொடர்களுடன் இலக்கிய மொழியாகத் திகழ்ந்து வந்த ஹிந்தி இஸ்லாமிய மதத்தொடர்பினாலும். அதன் கலாச்சார ஆதிக்கத்தினாலும் அரபு பாரசீக மொழிகளின் சொற்களைத் தன்னிடையே ஏற்றுக் கொண்டு மாறுபட்ட உருவத்தை அடைந்தது. இந்த மாறுபட்ட உருவத்தைத் தான் நாம் 'கடீபோலீ' எனக் கூறுகின்றோம். இது முதலில் மக்களின் பேச்சு வழக்கிலுள்ள மொழியாக இருந்து பின்பு இலக்கிய அரியணையில் ஏறிற்று. புத்துணர்ச்சிக் கவிதை எனக் கூறுமிடத்து நாம் 'கடீபோலீ' என்ற மேலே கூறப்பட்ட ஹிந்தியிலே இயற்றப்பட்ட கடந்த நூறு ஆண்டுக் கவிதைகளையே கொள்கின்றோம். புத்துணர்ச்சிக் கவிதையை நாம் கீழ்க் கண்டுள்ளபடி நான்கு பிரிவுகளாகக் கொள்ளுகிறோம். 1. பாரதேந்து காலம் (தேசீயப் புத்துணர்ச்சிக் காலம்) 2. த்விவேதீ காலம் 3. நிழல் தோற்றவாத காலம் 4. ப்ரகதிவாத் – பிரயோகவாத காலம்.



# பாரதேந்து காலம்

கடீபோலீ ஹிந்தியிலே உரைநடை இலக்கியத்தை ஆரம்பித்து வைத்த பெருமை பாரதேந்துவைச் சாருகின்றது. ஹிந்தி இலக்கியத்திலே இவர் புத்துணர்ச்சி இலக்கிய காலத்தின் தந்தையாகக் கருதப்படுகின்றார். பழைய பத்தாம் பசலிப் பண்பாடுகளைத் தகர்த்தெறிந்து காட்டாற்றுப் புது வெள்ளம் போல் புத்துணர்ச்சியைப் புரண்டோடச் செய்தவர் பாரதேந்து. இவரது ஆற்றலும் தேற்றலும் அறிவும் செறிவும் ஹிந்தி இலக்கியத்திற்கு ஒரு புதிய பாதையை வகுத்துக் கொடுத்தன. பாரதேந்துவும் அவரது தோழர்களும் ஹிந்தியை வளர்ப்பதையோ தங்கள் உயிர் நாடியாகக் கருதி வந்தனர். உரைநடை இலக்கியப் பகுதியைப் படிக்கும் பொழுது நாம் இவரைப் பற்றி அதிகமாக அறியலாம். பாரதேந்து புதிய ஹிந்தியிலே கவிதை இயற்றுவது கடினமான காரியம் என்று கருதினாலும் அவரது காலத்திலேயே ஒரு சில கவிஞர்கள் கடீபோலீ ஹிந்தியிலே கவிதைகள் இயற்ற ஆரம்பித்தனர். அவர்களுள் கீழே கொடுக்கப்பட்ட பெயர்கள் குறிப்பிடத் தகுந்தன.

ஸ்ரீதர் பாடக் கடீபோலீ ஹிந்திக் கவிதைக்குத் தந்தையாகக் கருதப்படுகின்றார். இவர் பழங்காப்பிய முறையைத் தகர்த்தெறிந்து புத்துணர்ச்சியையும் புதுமொழியையும் இணைபிரியாத துணைவர்களாகச் சேர்த்துக் கவிதையை அழகு பெறச் செய்தார். தேசத்தின் சீர்கெட்ட நிலைமையைக் கண்டுச் சிந்தை கலங்கிய இவரது உணர்ச்சியிலிருந்து சிந்திய செய்யுட்கள் வாலிபர்களின் மனத்திலே புரட்சிக் கனலைக் கிளப்புவதாக இருந்தன. வாக்கிலே வீராவேசத்துடனும், சொல்லிலே உருக்கத்துடனும் இவர் இயற்றிய கவிதைகள் ஹிந்தி இலக்கியத்தைச் செழிப்புறச் செய்தன. இவருடைய கவிதைகளிலே தேச பக்தி, இயற்கை வருணனை, உரிமைக்

குரல் ஆகியவை காணப்படுகின்றன. இவருடைய மொழியிலே ஓர் இயற்கையான அழகு மிளிர்வதை நாம் காணுகின்றோம். வடமொழி ஆங்கிலக் கவிதைகளின் மொழி பெயர்ப்பிலும் இவர் தனது முழுத்திறமையையும் வெளிப்படுத்தியுள்ளார். இவரால் இயற்றப்பட்ட நூல்கள் கீழ் வருமாறு – 'ஆராத்ய சோகாஞ்சலி' 'ஸ்ரீகோகலே ப்ராஸதி" 'ஏகாந்தவாசி யோகி' 'ஊஜட் கிராம்' 'சிராந்த பதிக்' 'ஜகத் ஸசாயீஸார்' 'கஷ்மீர் சுஷ்மா' 'மனோவினோத்' 'கோக்கலே குணாஷ்டக்' 'தேஹராதான் திலிஸ்மாதீ முந்தரி. 'கோபிகா கீத்', 'பாரத் கீத்',

தாதுராம் சங்கர் சர்மா: பழங்காலக் காப்பியப் பரம்பரையைப் பின்பற்றி இவரால் இயற்றப்பட்ட கவிதைகளைப் பற்றி நாம் முன்கூட்டியேயறிந்து விட்டோம். இவர் ஒரு சிறந்த புத்துணர்ச்சி இலக்கிய கர்த்தாவாகவும் திகழ்ந்தார். இவரால் இயற்றப்பட்ட புத்துணர்ச்சிக் கவிதைகளிலே மொழியின் சிறப்பை நாம் நன்றாகக் காண முடிகின்றது. இயற்கையான நடையில் எளிமையான சொற்களைத் தாங்கி அதிக ஆடம்பரமின்றி இவர் கவிதைகள் திகழ்கின்றன. இவருடைய கவிதைகளிலே உள்ள வ்யங்கியம் (சிலேடை) நுகர்ந்து மகிழத்தக்கது.



# த்விதேதீ காலம்

கி.பி. 1900ம் வருடத்திலிருந்து 1925-ம் வருடம் வரையில் உள்ள கால் நூற்றாண்டு ஹிந்தி இலக்கிய வளர்ச்சியில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. நாட்டிலே குழப்பத்திற்கும், கொந்தளிப்பிற்கும் இடையே சுதந்திரம் என்ற சீரிய இலட்சியம் உருவான காலம் அது. "என்று தணியும் இந்த சுதந்திரத் தாகம்?" என்று சீறி எழுந்த பாரத சமுதாயம் புதிய வாழ்விற்கு வகை தேடி, வழி தேடி விழைந்த காலம் அது. இலக்கியத்திலே மறுமலர்ச்சியைக் காண பாரதத்தின் எல்லா மொழிகளும் துடித்துக் கொண்டிருந்த காலம். ஐரோப்பாவில் முதல் மகாயுத்தம் தோன்றி உலக மக்களின் போக்கிலும் நோக்கிலும் வியக்கத்தக்க மாற்றம் ஏற்பட்ட காலம். சுதந்திர பாரதத்திற்கு ஹிந்தி அத்தியாவசியமானது என்பதை உணர்ந்து இந்தக் காலத்தில்தான் வடக்கிலும் தெற்கிலும் ஹிந்தி பிரச்சார சபைகள் நிறுவப்பட்டன. இந்தக் காலத்தில்தான் கதை, கட்டுரை, நாவல், கவிதை ஆகிய எல்லாத் துறைகளிலும் வியக்கத்தக்க முன்னேற்றம் ஏற்பட்டது. இங்கு நாம் இக் காலத்தில் ஏற்பட்ட கவிதையின் வளர்ச்சியை நோக்குவோம்.

பண்டித மஹாவீர பிரசாத் த்விவேதீ 1764ம் வருடத்திலே ராய்பரேலி ஜில்லாவில் உள்ள தௌலத்பூர் என்ற கிராமத்தில் பிறந்தார். சிறுவயதிலே ஆங்கிலம், சமஸ்கிருதம், பாரசீகம் உருது ஆகிய மொழிகளைப் பயின்றார். சரஸ்வதீ என்ற மாதாந்திரப் பத்திரிகையின் ஆசிரியராக இவர் தன் இலக்கியப் பணியை ஆரம்பித்தார். பல கவிகளுக்கு ஆசானாக விளங்கி அவர்களுடைய இலக்கிய வாழ்வை மலரச் செய்த பெருமை இவரைச் சாரும். ஹிந்தி மொழியிலுள்ள இலக்கணக் குறை பாடுகளை நீக்கிப் பல்வேறு விஷயங்களிலே புத்துணர்ச்சி இலக்கியத்தை ஊக்குவிப்பதிலே இவர் மிகவும் ஆர்வம் கொண்டார். ஒரு கவியாக இவர் ஹிந்திக்கு இயற்றிய சேவை களைக் காட்டிலும் இலக்கியகர்தாக்களை ஊக்குவிப்பதிலே

இவர் இயற்றிய சேவை மெச்சத் தகுந்தது. இவருடைய கவிதைகளிலே கற்பனையின் நளினத்தைக் காட்டிலும் எண்ணங்களின் நெருக்கமான ஓட்டத்தைத்தான் காணுகில் றோம். உரைநடைப் பகுதியிலே இவரைப்பற்றி நாம் விரிவாக வரைவோம்.

**அயோத்தயா சிங் உபாத்யாய (கி.பி. 1865–கி.பி. 1945):** புத்துணர்ச்சி இலக்கியத்தின் முதற்பெருங் காப்பியமாகக் கருதப்படும் 'ப்ரியப்ரவாஸ்' என்ற நூலை இயற்றிய இவர் ஆரம்ப காலத்தின் முப்பெருங் கவிகளுள் ஒருவராகக் கருதப்படுகின்றார். இருவிதமான தனித்தனி நடைகளைக் கையாண்டு கவிதை இயற்றிய பெருமை இவரைச் சாரும். கீழ்க்கண்ட நூல்கள் இவரால் இயற்றப்பட்டன - ப்ரியப்ரவாஸ், வைதேஹீ வனவாஸ், பாரிஜாத், சோகே சௌபதே, சுபதே சௌபதே, போல் சால், ரஸ கலஷ், பத்ய ப்ரஸூன், காவ்ய லதா, ரிது முகர், காவ்யோபவன், ப்ரேம புஷ்போபஹார், ப்ரேமப்ரபஞ்ச், ப்ரேமாங்குர், ப்ரஸ்ரவண், ப்ரேமாம்பு ப்ரவாஹ், ப்ரேமாம்பு வாரிதீ.

பேச்சு வழக்கு ஹிந்தியின் வாயிலாக எல்லாவிதமான கவிதைகளையும் இயற்ற முடியும் என்பதை ஹரிஔத் நிருபித் துள்ளார். இவருடைய இயற்கை வருணனைகள் அணிச் செறிவும் சொல் நயமும் ஒருங்கே பெற்று நம் மனத்தைக் கவருவதாக உள்ளன. பாத்திரப் படைப்பில் ஒரு இயற்கைத் தன்மை மிளிருகின்றது. சேவை என்ற தூய இலட்சியத்தை இராதையின் பாத்திரத்திலே வடித்து அவளுடைய விரஹதா பத்திலும் உலகை உய்விக்கும் குணாதிசயங்களைச் சித்திரித் துள்ளார். "ப்ரியப்ரவாஸ்" என்ற காப்பியத்திலே வடமொழிச் செய்யுள் முறையைத் தழுவிப் புத்தம்புது கருத்துக்களை கிருஷ்ணன் இராதை போன்ற புராணப் பாத்திரங்கள் வாயிலாகத்தெரிவித்துத் தன் சிந்தனைச் சிறப்பை வெளிப் படுத்தியுள்ளார். பெண்மையின் சிறப்பைப் பற்பல இடங்களில் புகழ்ந்துள்ளார். 'வைதேஹீ வனவாஸ்' என்ற காப்பியத்திலே

பெண்களின் உயர்ந்த நோக்கையும் தாராள மனப்பான்மையும் வருணித்துள்ளார். புத்துணர்ச்சி இலக்கியத்தின் முதல் மகாகவியாகப் போற்றப்படும். இவரது இலக்கியச் சேவை களுக்கு ஹிந்தி இலக்கியம் என்றென்றும் கடமைப்பட்டது.

பால முகுந்த குப்த: இவர் பழைய பரம்பரையை பின் பற்றி இயற்றிய கவிதைகள் அநேகம், ஆனால் இயற்கை யழகை வருணித்து எழுதும் கவிகளின் வரிசையிலே இவரும் சேர்த்துக் கொள்ளப்படத் தகுந்தவர். இவர் 'வஸந்தோத்ஸவ' என்ற நூலை இயற்றியுள்ளார்.

இராமசரித உபாத்யாய் : ஹரி ஔத் எழுதிய 'ப்ரிய ப்ரவாஸ்' என்ற காப்பியத்தின் நடையைப் பின்பற்றி 'ராமசரித சிந்தாமணி' என்ற நூலை இவர் இயற்றினார். இதன் கண் புதுமைகளைப் புகுத்திச் சீர்திருத்தக் கருத்துக்களை வெளி யிட்டு ஒரு புரட்சியையே இவர் உண்டு பண்ணியிருக்கின்றார். தேச பக்தி என்ற உயர்ந்த எண்ணத்தை மக்களுடைய மனத்திலே ஆழப்பதியவைக்கும் முறையிலே இவருடைய பல கவிதைகள் அமைந்துள்ளன.

சையது அமீர் அலிமீர்: த்விவேதீ காலத்திய பிரசித்த மான கவிகளுள் ஒருவர் ஆவார். கி.பி. 1873–ஆம் வருடத்தில் மத்தியப் பிரதேசத்திலுள்ள ஸாகர் என்னுமிடத்தில் இவர் பிறந்தார். முதலில் உருது மொழியில் இவர் கவிதைகள் இயற்றி வந்தார். பின்னர் ஹிந்தியில் ஆர்வம் அதிகமுற்று அதில் கவிதைகள் இயற்றத் தொடங்கினார். இவரால் இயற்றப்பட்ட நூல்கள் பின் வருமாறு – பூடேகா ப்யார், நீதி தர்ப்பண், ஸதாசாரீ, பாலக், உலாஹனாபஞ்சக், அன்யோக்தி சதக.

இவருடைய கவிதைகளிலே சொல்வன்மை சிறக்கக் காண்கிறோம். ஹிந்து முஸ்லீம் ஒற்றுமைக்காக அக் காலத்திலேயே பாடுபட்ட கவிகளுள் இவரும் ஒருவராவார். துலஸீதாஸின் இராமாயணத்தின் மேல் இவர் பெரும் மதிப்பு வைத்திருந்தார். இந்நூற்றாண்டின் ஆரம்பத்திலேயே ஹிந்தி

ஒன்று தான் இந்தியாவிலுள்ள எல்லோராலும் அறியப்படும் பொது மொழியாக விளங்கத் தகுந்தது என்பதை இவர் தன் நூலின் கண் வெளியிட்டுள்ளார். கி.பி.1937ஆம் வருடத்திலே ஓர் இரவு இரயில் பாதையைக் கடந்து கொண்டிருக்கும் போது சக்கரத்தினிடையே சிக்குண்டு உயிர் துறந்தார்.

காமதா பிரஸாத் குரு : ஹிந்தி இலக்கண நூல்கள் பரம்பரையிலே அழியாத புகழ்பெற்ற இவர் அக்காலத்திய சிறந்த கவியாகவும் விளங்கிவந்தார். இவருடைய கவிதைகள் 'சரஸ்வதி' என்ற மாதாந்திரப் பத்திரிக்கையிலே வெளி வந்தன. நடையிலே நகைச் சுவையைப் புகுத்தி ஆங்கிலேயர்களின் பழக்க வழக்கங்களைக் கேலியாகச் சித்தரித்து இவர் எழுதிய கவிதைகள் அநேகம். இவர் அக்காலத்திலேயே ஒரு பண்பட்ட பன்மொழிப் புலவராக விளங்கினார். ஆங்கிலம், ஹிந்தி, வடமொழி, உருது, பாரசீகம், உடியா, வங்காளம், மராட்டி ஆகிய மொழிகளைச் செவ்வனே பயின்றிருந்தார். இவருடைய இலக்கண நூல் இன்றும் ஒரு சிறந்த பாடப் புத்தகமாக விளங்கி வருகிறது.

கிரிதர் சர்மா நவரத்ன: கி.பி. 1881 ஆம் வருடத்தில் ஜாலராப் பட்டினத்தில் இவர் பிறந்தார். இவரால் பல சிறிய கவிதைகள் இயற்றப்பட்டன. ஆனால் ஒரு சிறந்த பண்டிதராகவும், ஆச்சாரியராகவும் இவருக்குக் கிடைத்த மதிப்பு அதிகம்.

கயாப்ரஸாத் ஷுக்ல ஸனேஹீ: சிருங்காார கால இலக்கிய பரம்பரையைப் பின்பற்றி முதலில் இயற்றி வந்த இவர் பிறகு புத்துணர்ச்சிப் பரம்பரையைக் கடைப்பிடித்துக் கவிதைகள் இயற்ற ஆரம்பித்தார். ப்ரேம பச்சீஸி, குஸுமாஞ்சலி, க்ருக்ஷுக் க்ரந்தன், மானஸ் தரங்கிணீ, கருணபாரதி, ஆகியவை இவரால் இயற்றப்பட்ட நூல்களாகும். எதுகை மோனையில் அதிக கவனம் செலுத்தி அணிகளை நடுநடுவே ஆழமாகத் தொடுத்துச் சொல் நயம் சிறக்கக் கவி நயம் பொங்க

இவர் இயற்றியுள்ள கவிதைகள் நமது மனதைப் பெரிதும் கவர்கின்றன.

**மன்னன் த்விவேதி** : கி.பி. 1885 ஆம் வருடத்திலே இவர் பிறந்தார். தேச பக்தி இளம் பருவத்திலிருந்தே இவரது உதிரத்திலே ஊறிவிட்டது. பாரதத்தின் கண் தோன்றிய சிறந்த மகாபுருஷர்களின் வாழ்க்கை வரலாறுகளைச் சின்னஞ்சிறு கவிதைகளாக இவர் இயற்றியுள்ளார். புதிய பாரதத்தினை உருவாக்கும் பணியிலே இளைஞர்களை ஊக்குவிக்கும் முறையிலே இவர் கவிதைகள் இயற்றியுள்ளார்.

**மைதிலீ ஷரண் குப்த** புத்துணர்ச்சிக்கால இலக்கியத்தின் தலைசிறந்த கவிகளுள் ஒருவராவார். கி.பி. 1886ஆம் ஆண்டிலே ஜான்ஸி ஜில்லாவிலுள்ள சிர்காவ் என்னும் கிராமத்திலே இவர் தோன்றினார். பெரிய செல்வச் சிமானின் வீட்டிலே இவர் தோன்றிய காரணத்தினால் இவருக்கு அக்கால முறைப்படிப் படிப்பு வீட்டிலேயே சொல்லிக் கொடுக்கப்பட்டது. வடமொழி, ஆங்கிலம், வங்காளம், உருது ஆகிய மொழிகளை இவவர் நன்கு கற்றறிந்தார். இலக்கிய உலகிலே இவருடைய பிரவேசம் ஆச்சாரிய மஹாவீர் ப்ரஸாத் த்விவேதியின் ஆசிகளுடன் தொடங்கியது. அக்காலத்தில் இலகாபாதிலிருந்து வெளி வந்து கொண்டிருந்த 'சரஸ்வதி' என்னும் பத்திரிகைத்தாள் புதுமை காண விழையும் புலவர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் ஆதரவு தந்து வந்தது. முதலில் சாதாரண விஷயங்களை ஆதாரமாகக் கொண்டு சின்னஞ்சிறு கவிதைகளை இயற்றிவந்த இவர் காலப்போக்கை அனுசரித்துத் தனது உணர்ச்சி வெள்ளத்தைப் பெருக்கி ஒன்றினும் ஒன்று சிறந்ததாக நாற்பதுக்கும் மேற்பட்டக் காப்பிய நூல்களை இயற்றியுள்ளார். இந்தியக் கலாசாரத்தில் திளைத்த இவரது உள்ளம் சிந்திய சிந்தனைகளிலே உறங்கிக் கிடக்கும் பாரதத்தைத் தட்டி எழுப்பும் திறன் ஓங்கி நின்றது. இவரால் இயற்றப்பட்ட நூல்கள் பின் வருமாறு: அநக, சந்திரஹாஸ, திலோத்தமா, ரங்க மே பங்க, ஜயத்ரதவத, பாரத்

பாரதி, சகுந்தலா, பத்ராவலி, வைதாலிக, கிஸான், பஞ்சவடீ, ஸ்வதேஸ் ஸங்கீத், குருதேக் பஹாதூர், சைரந்திரி, வனவைபவ, பகஸம்ஹார, ஜங்கார், சாகேத், த்வாபர்ா, சித்தராஜ், யசோதரா, நஹுஷ, விகடபட், காபா ஒளர் கர்பலா, மௌர்ய விஜய், மங்கள கட, த்ரிபதகா, விஸ்வவேதன, குருகுல, ஜயபாரத.

மேற்குறிப்பிட்டுள்ள நூல்களுள் பாரத் பாரதி, பஞ்சவடீ, ஜயத்ரத வத, யசோதரா, சாகேத், ஆகியவைகள் இவரது மிகச் சிறந்த படைப்புகளாகக் கருதப்படுகின்றன. எளிய நடையிலே, செய்யுள் விதிகளை அனுசரித்து ஓத்த இசை பெருகும்படிச் சொற்களை அமைத்து அந்த வாய்க்கால் வழியே தனது எண்ணப் பெருக்கத்தை வழிந்தோடச் செய்திருக்கிறார். சொல்லும், பொருளும் பாலும் பழமும் போல் சேர்ந்து நமது நுகர்ச்சி இன்பத்தைப் பெருக்குகின்றன. புதுமையையும், பழமையையும் பாங்குறக் கலந்து பழமையின் சிறப்புச் சிதையாமலும், புதுமையின் பொலிவு குன்றாமலும் இவர் அழகிய முறையில் கவிதைகள் இயற்றியுள்ளார். மனதிலே அயர்ச்சியை உண்டு பண்ணும் கடினமான சொற் சித்திரங்களையோ, பொருள் வட்டத்தை விஞ்சியோடும் சொற் களையோ, சுவையற்ற, நிறைவற்ற உணர்ச்சியோட்டத்தையோ நாம் இவருடைய கவிதைகளிலே காணமுடியாது.

எல்லாத் துறைகளிலும் ஒத்துப்போகும் பண்பையே இவர் கொண்டிருந்தார். சிறந்த வைஷ்ணவராக இருந்ததும் எம்மதமும் சம்மதம் என்ற கொள்கையைக் கடைப்பிடித்து எல்லா மதங்களின் உயர்வைப் பற்றியும் இவர் காவியங்கள் இயற்றியுள்ளார். பழமையின் சிறப்புகளை விலக்காதவாறு புதுமையின் சிறப்புகளையும் அத்துடன் சேர்த்துத் தன் உயர்ந்த இலட்சியங்களை இவர் வெளிப்படுத்தியுள்ளார். பழமையிலே புதுமையைப் புகுத்தி இவர் இயற்றிய "சாகேத்" "பஞ்சவடீ" என்ற இரு நூல்கள் ஹிந்தி இலக்கியத்தில் தலைசிறந்த நூல்களாகக் கருதப்படுகின்றன.

"சாகேத்" என்ற இவரது நூல் இராமாயணக் கதையை ஊர்மிலா வாயிலாக விளக்குகின்றது. இராமாயணக் காவியத்திலேயே அதிகமாகப் புறக்கணிக்கப்பட்ட பாத்திரம் ஊர்மிலா வென்பதை எல்லோரும் ஒப்புக்கொள்வார்கள். இதே போல் புத்தரைப் பற்றிய இலக்கிய பரம்பரையில் ஒதுக்கப் பட்ட பாத்திரம் புத்தருடன் மணவாழ்க்கை மேற்கொண்டு, புத்தரைப் பிரிந்து வாழ்நாள் முழுவதும் வருந்திய யசோதரை. இம்மாதிரியாக இலக்கியப் புறக்கணிப்பிற்கு இலக்கான பாத்திரங்களைச் சிறப்பிக்கும் முறையில்தான் குப்தஜீ சாகேத், யசோதரா என்ற இரண்டு காவியங்களையும் இயற்றினார். 'சாகேத்' காவியத்தின் ஒன்பதாவது சர்க்கத்திலே ஊர்மிலாவின் கண்ணீரையே கதை சொல்ல வைத்திருக்கின்றார். குப்தஜீயின் நூல்களிலே எளிமையான நடையும், சொற்களின் இயல்பான ஓட்டமும், தெள்ளிய எண்ணங்களும் மலிந்து கிடக்கின்றன. பாத்திரப் படைப்பிலே இவர் விசேஷ ஆற்றல் பெற்று விளங்கினார். பஞ்சவடியிலே பழமையை மாற்றாதவாறு இலக்குமணன், சீதை, சூர்ப்பனகை ஆகிய பாத்திரங்களிலே புதுமையைப் புகுத்தியிருக்கின்றார். பழங்காப்பிய வருணனை முறைப்படி முடி முதல் அடி வரை வருணிக்கும் பரம்பரை, ஆறு பருவங்களை வருணிக்கும் பரம்பரை ஆகியவற்றையும் இவர் கடைப்பிடித்திருக்கின்றார். இயற்கை யெழிலை வருணிப்பதில் இவர் ஹரிஔதைப் போல் நிகரற்று விளங்கு கின்றார். பெண்மையின் கௌரவத்தை நிலைநாட்டுவதில் இவர் விசேஷமாக அக்கறை எடுத்துக் கொண்டிருக்கின்றார். இந்திய கலாசாரத்தின் மேன்மையை இவர் பல இடங்களில் எடுத்துரைத்திருக்கின்றார். இவர் இக்கால இலக்கியத்தின் ஒரு தலைசிறந்த கவிஞர் என்பதில் ஐயமில்லை.

ராம் நரேஷ் திரிபாடி: கவிதா கௌமுதீ என்று கவிதைத் தொகுப்பை ஏழு பாகங்களில் வெளியிட்டு ஹிந்தி இலக்கியத்திலே என்றும் நிலைத்து நிற்கும் புகழைப் பெற்றவர் இவர். இவர் இயற்றிய நூல்கள் பின்வருமாறு–கவிதா கௌமுதீ

(ஏழு பாகங்கள்) பதிக், மிலன், ஸ்வப்ன, மானஸ, ஸ்வர்ண சித்ர, ஜயந்த, ப்ரேம லோக், தர்கஸ், மார்வாட் கீத் ஆகியவை. திரிபாடியின் நூல்களிலே தேசபக்தியும், புத்துணர்ச்சியின் ஓட்டமும் அதிகமாகக் காணப்படுகின்றன. இவருடைய இயற்கை வருணனைகள் படிப்போர் மனதைக் கவருவதாக உள்ளன. சொற்களைச் செவ்வனே தொடுத்து அழகாக, பொருள் நயம் பொங்குமாறு செய்துள்ளார்.

**லோசன் பிரஸாத் பாண்டே** : 1887–ம் வருடத்தில் பிலாஸ்பூர் ஜில்லாவில் உள்ள பால்பூர் என்ற கிராமத்திலே இவர் தோன்றினார். ஒரியா, பங்காலீ, ஹிந்தி ஆகிய மொழிகளைச் செவ்வனே கற்ற பிறகு ஒரியா மொழியிலும் ஹிந்தி மொழியிலும் கவிதைகள் இயற்ற ஆரம்பித்தார். இவரால் இயற்றப்பட்ட நூல்கள் கீழ்வருமாறு :– தோ மித்ர, பால விநோத், நீதி கவிதா, மாதவ மஞ்சரி, மேவாட் காதா, சரிதமாலா ஆகியவை. இவருடைய நடை எளியதாகவும், அணிகள் நிரம்பப் பெற்றதாகவும் உள்ளது. வருணனைகள் நளினமாகவும் உள்ளன.



# நிழல் தோற்ற வாதம்
# (புரட்சிக் காலம்)

கவிதையின் வரலாற்றை ஆராய்பவர்கள் வேறு வேறு இலக்கியத்தில் வேறுவேறு காலங்களில் தோன்றிய வேற்றுமை, மாறுபாடுகள் தங்களுக்கு என்று ஒரு தனி வழியை வகுத்துக் கொண்டு விடுகின்றன என்பதை ஒத்துக் கொள்வர். இலக்கியம் சமுதாயத்தின் பல்வேறு நிலைகளைப் பல்வேறு கோணங்களி லிருந்து பிரதிபலிக்கச் செய்கின்றது என்று கற்றோர் அறிந்த உண்மை. சமுதாயத்தின் வளர்ச்சிப் பாதையிலே தோன்றும் தடுமாற்றங்களும், ஏற்றங்களும், திசை மாற்றங்களும், தோற்றங்களும் இலக்கியத்தின் வாயிலாகத்தான் வருங்கால சந்ததிகளுக்குப் பாதுகாத்து வைக்கப்படுகின்றன. மொழியின் நிலையையும் வளர்ச்சியையும் பொறுத்தும் இலக்கியத்தின்கண் மாற்றங்கள் ஏற்படுகின்றன. ஹிந்தி இலக்கியத்தின்கண் நிழல் தோற்றவாத காலம் அல்லது புரட்சிக் காலம் என்று கூறும் காலத்தில் ஏற்பட்ட வியக்கத்தக்க மாறுதல்கள் சமுதாயச் சூழ்நிலை, மொழியின் நிலை இந்த இரண்டு காரணங்களாலும் ஏற்பட்டன.

மேல்நாட்டு இலக்கியங்களைப் படிக்க ஆரம்பித்த இலக்கிய வல்லுநர்கள் அதன்கண் காணப்பட்ட தனித் தன்மை களையும், பரம்பரையாக இருந்துவந்த நம்பிக்கைகளையும் நோக்கங்களையும் தகர்த்தெறிந்துவிட்டுப் புதுமையையும் புரட்சியையும் கையாளும் குணத்தையும் நம் இலக்கி யத்தினிடை புகுத்த ஆரம்பித்தனர். மேனாட்டு இலக்கியம், கலாச்சாரம் இவைகளின் அடிப்படைத் தத்துவங்களை முதன் முதலாக ஏற்றுக்கொண்டது வங்காளம்தான். இந்திய இலக்கிய வரலாற்றிலேயே புதுமையின் சிறப்பை முழுமையாகக் கொண்ட இலக்கியம் வங்காள இலக்கியம்தான். வங்காள இலக்கியத்தைப் பின்பற்றித்தான் மற்ற இலக்கியங்களும்

புதுமையை மேற்கொள்ள ஆரம்பித்தனர். வங்காள இலக்கியத்தின் தலைசிறந்த கவிஞராகப் போற்றப்படுகின்றவர் ரவீந்திரநாத் தாகூர். இவர் எழுதிய "கீதாஞ்சலி" என்ற நூல் 1913ம் வருடம் நோபல் பரிசு பெற்றது என்பதை எல்லோரும் அறிவர். கீதாஞ்சலியின் சிறப்பு என்ன என்று நோக்குங்கால் அதன்கண் விவரிக்க முடியாத மன நிலைகளும் உணர்ச்சிகளும் நுண்ணிய பொருட்செறிவுடன் கூடிய சொற்கள் மூலமாக விளக்கப்பட்டிருக்கின்றன என்பதை நாம் அறிகின்றோம்.

வடமொழிப் பரம்பரைப்படி இயற்றப்பட்ட கவிதைகள் நெடுங்காலம் தொட்டே இருந்துவரும் சொல், அணி விதிமுறைகளைப் பின்பற்றிச் சென்றன. எப்படி ஒரு தொழிலாளி பரம்பரையை அனுசரித்தவாறு தன்னுடைய தொழிலை நடத்திச் செல்வானோ அதேபோல் கவிதையும் ஒரு தொழிலாகக் கருதப்பட்டு வந்தது. குடும்ப வழியாகக் கவிதைத் திறன் வருவதால் புதுமையென்பது அதில் எளிதாகப் புக முடியவில்லை. தாகூர் தன் கவிதைகளிலே இந்திய இலக்கியப் பரம்பரையின் சிறந்த பழமையான தத்துவங்களை மட்டும் மேற்கொண்டு, மேநாட்டு இலக்கியப் பாணியில் அவைகளை வெளியிட ஆரம்பித்தார். பழமையும் புதுமையும் கலந்து கவிதைக்கு ஒரு புதிய உருவையும், உணர்ச்சிச் செறிவையும் கொடுக்க ஆரம்பித்தன. தாகூரின்பிரபாவத்தினால் தான் ஹிந்தி கவிதையின் இலக்கிய வளர்ச்சியில் ஆச்சர் யகரமான திசை மாற்றம் ஏற்பட்டது. இந்தத் திசை மாற்றம் தான் நிழல் தோற்ற வாதத்தைத் தோற்றுவித்தது.

நிழல்தோற்ற வாதம் என்று கூறுமிடத்து நாம் கொள்ளும் அடிப்படையான தத்துவங்கள் என்ன என்பதைத் தெரிந்து கொள்வது நலம். த்விவேதீ காலத்திலே கவிஞர்கள் மொழியைச் சீர்திருத்தி வளப்படுத்தி ஹிந்தியிலே பற்பல புதிய சொற்களைக் கொண்டுவந்து உபயோகிக்கும் பணியில் ஈடு பட்டனர். உள்ளத்தின்கண் ஊற்றெடுக்கும் உணர்ச்சிப்

பெருக்கைச் செவ்வனே வெளியிடும் திறனை அக்காலத்தில் கவிகள் பெற்றிருக்கவில்லை. நிழல் தோற்றவாத காலத்துக் கவிகளோவெனில் மொழி, அணி, யாப்பு ஆகிய பிணைப்பு களுக்கு அதிகமாகக் கட்டுபடாமல் உள்ளத்தில் பொங்கும் உணர்ச்சிகளின் மிகநுண்ணிய நிலையையும் சொல்லுருவத்தில் வெளியிட ஆரம்பித்தனர். நிழல் உடலை ஆதாரமாகக்கொண்டு ஏற்படுகின்றது. அது உடலின் உருவத்தையே ஒளியின் நிலையைப் பொருத்து நீட்டியோ சுருக்கியோ காண்பிக் கின்றது. உடலின் நிழல் உடலைவிட்டு வெளியே பரவுகின்றது. அதற்கு உருவமிருக்கின்றது. ஆனால் நிலையில்லை. உருவற்ற ஒரு உணர்ச்சிப் பரப்பை நாம் உள்ளம் என்று கொள்ளுகின் றோம். உடலின் பரப்பு வெளி நோக்கியுள்ளதெனில் உள்ளத்தின் பரப்பு உள்நோக்கியுள்ளது. உள்ளமானது தனது உணர்ச்சிப் பரப்பைப் பல்வேறு சூழ்நிலைகளுக்கேற்றவாறு பிரதிபலிக்கச் செய்கின்றது. இந்த நிழலாட்டத்தைத்தான் சொற்களில் வடித்துக் கவிதையாகக் கொடுக்கக் கவிஞர்கள் முயல்கின்றனர். உணர்ச்சியின் துடிப்பானது ஒருக்காலும் சொல்லின் எல்லைக்குக் கட்டுப்படுவதில்லை. தாகூர் இதையுணர்ந்து உணர்ச்சியைக் காட்டிலும் உணர்ச்சியின் நிழல் தோற்றத்தையே தன் கவிதையிலே சித்தரிக்க முயன்றார். ஹிந்தியிலே நிழல் தோற்றவாத காலத்திய கவிகளும் தாகூரைப் பின்பற்றி உணர்ச்சியின் நிழல் தோற்றத்தைச் சொற் சித்திரங்களாக வடிப்பதிலே ஈடுபட ஆரம்பித்தனர். ஆனால் நிழலில் எப்படி ஒரு தெளிவு இருப்பதில்லையோ அஃதே போல உணர்ச்சியின் நிழல் தோற்றத்திலும் தெளிவு தென்பட வில்லை. ஆகவே இக்காலத்திய கவிதைகள் சொல் நயத்தையும், புலனுக்குப் புலப்படாத உணர்ச்சிச் செறிவையும் கொண்டிருந்தாலும் எளிதிலே விளங்கக் கூடியதாக இல்லை. நிழல் தோற்றவாதக் கவிதைகளிலே காணப்பட்ட தனித்தன்மைகளை நாம் கீழ்வருமாறு கொள்ளலாம்.

கற்பனைத்திறன் - நிழல் தோற்ற வாதத்திற்கு முற்காலத்திய கவிகள் பழமையான, பழக்கத்தில் இருந்துவரும் உவமைகளையும், உருவகங்களையும், மற்றச் செய்யுள் முறைகளையும் பின்பற்றி வந்தனர். ஆகையினால்தான் அவர்களுடைய கவிதைகளிலே கற்பனை நெடுநாள் பழக்கப்பட்ட உணர்ச்சி வட்டத்திற்குள்ளேயே இருந்து வந்தது. இக்காலத்திய கவிகள் கற்பனைக்காகப் புதிய பாதைகளை வகுத்துக் கொடுத்து அதைக் கண்காணாக் காட்சிகளையும் காண வைத்தனர். ஊர்க்குருவியாக நேற்றுவரை கீழ்வானத்தி லேயே வட்டமிட்ட கற்பனை இன்று பருந்து போல் மேல் வானத்தில் திரிய ஆரம்பித்தது. ஒரு தனி மனிதனையோ விஷயத்தையோ விவரிக்கும்பொழுது உணர்ச்சிக்குவியலின் மேல் கிடக்கும் உணர்ச்சிகளோடு நின்றுவிடாமல் உள்ளே அழுந்தி இருக்கும் உணர்ச்சிகளையும் இக்காலத்திய கவிகள் வெளியிட ஆரம்பித்தனர். எப்படி ஒரு ஓவியன் தன்னுடைய கோடுகளிடையே மெள்ள மெள்ள ஒரு ஓவியத்தை நம் கண் முன் வெளிக்கொண்டு வருகின்றானோ அப்படி இக்காலத்திய கவிகளும் ஒரு கற்பனை முறையே முழுமையாக விவரித்து அதன் சிறப்பைக் கொண்டு உணர்ச்சியை வடிவமாக வடித்துக் கொடுக்க முயற்சித்தனர். பழங்காலத்திய கற்பனை தரையின் வண்ணத்தை வெளிப்படுத்தியது என்று கூறினால் இக்காலத்திய கற்பனை விண்ணின் கண் தோன்றி மறையும் வானவில்லின் சொல்லுக் கெட்டா வண்ணச் சிறப்பைச் விவரிக்க முயன்றது.

உணர்ச்சிச்செறிவு - இக்காலத்திற்கு முன்னிருந்த புலவர்கள் உணர்ச்சியின் ஆழத்தை அளவிட்டுக் காண்பிப் பதை முக்கிய நோக்காகக் கொள்ளவில்லை. ஆனால் இக் காலத்திய கவிகளோவெனில் ஆழ்ந்த பொருட்செறிவு கொண்ட சொற்கள் மூலமாக உணர்ச்சியின் முழு உருவத்தையும் தீட்ட ஆரம்பித்தனர். பழக்கத்தில் உள்ள, எல்லோராலும் வெளிப் படையாக ஒத்துக்கொள்ளப்படுகின்ற சாதாரண உணர்ச்சிக

ளோடு நின்றுவிடாமல் உள்ளே மறைந்தும், வெளிவர நாணிக் கொண்டும் இருக்கும் உணர்ச்சிகளையும் வெளிப்படுத்த முற்பட்டனர். உணர்ச்சியைக் கவியின் மனநிலையிலிருந்து படிப்பவரின் மன நிலை வரை பரவச் செய்து கவிஞருக்கும் படிப்பவவருக்குமிடையே ஒன்றிய உணர்ச்சி நிலையை உண்டு பண்ண முயற்சித்ததனர்.

உருவக மரபு – சாதாரணமாகலே கவிதைகளிலே நாம் இயற்கையின் பல்வேறு கோணங்களைச் சித்தரிக்க முற்படும்பொழுது அவைகளை மனித உருவத்திலே கற்பித்து அவற்றின் எழிலை விவரிக்கின்றோம். அப்பொழுது தான் ஒரு மனநிறைவு நமக்கு ஏற்படுகின்றது. இயற்கை நாணிக்கோணி அன்றலர்ந்த மலர் போலும், புதுமணப்பெண் போலும் நின்றிருந்தாள் என்று கூறும் பொழுது இயற்கையின் எழிலிலே ஒரு தனி ஒளி வீசக்காண்கின்றோம். நிழல் தோற்றவாதக் காலத்திய கவிகளும் எந்த ஒரு நிலைலயை வர்ணிக்கும் பொழுதும் அதை மனித உருவாக்கி நம் கண்முன் வைக்க முற்பட்டனர். மனித உருவாக்கி வருணிக்கும் மரபு இந்தக் காலத்தில் தன் முழுச்சிறப்பை யெய்தியது.

உரிச்சொற்களை அதிகமாக உபயோகிக்கும் மரபு – இக்காலத்திய கவிகள் உரிச் சொற்களை வடமொழியில் உபயோகிப்பதுபோல் சமரஸ வாக்யங்களையும் மற்றும் தனிப்பட்ட உரிச்சொல் வரிசைகளாகவும் உபயோகித்து உயர்ச்சியின் ஆழத்தை வெளிப்படுத்த முயற்சித்தனர். உரிச் சொற்களைப் புதிய உவமைகளாகவும் அடைமொழிகளாகவும் உபயோகித்துக் கருத்தை விரிவாக்கிக் கூற முற்பட்டனர்.

நிழல் தோற்றங்களை வருணிக்கும் மரபு – ஒரு உணர்ச்சியைச் சொல்லாக வடித்துக் கொடுக்கும் பொழுது அதன் உயிர்த் தோற்றத்தை நம்முன் வைக்காமல் நிழல் தோற்றத்தை வைக்கத் தலைப்பட்டனர். நிழல் தோற்றத்தை வைப்பதினால் உணர்ச்சியின் பரப்பு அதிகமாகவும் தெளிவு

குறைவாகவும் நம் கண்முன் தோன்றின. ஆனால் உணர்ச்சியின் நவிற்சிக்கு இது ஒரு புது வழியை வகுத்து கொடுத்தது.

**இயற்கைப் புகழ்ச்சி** – இயற்கையைத் தெய்வமாகவும், மற்றும் மனிதனை உய்விப்பதற்காக வந்த ஒரு கருவியாகவும், தெய்வத்துடன் மனிதனுக்குத் தொடர்பு ஏற்படுத்தும் ஒரு நிலையாகவும் வருணிக்க முற்பட்டனர். இயற்கையின் எழிலை விவரிக்கும்பொழுது ஆச்சர்யத்தையும் பெருமிதத்தையும் வெளியிட முயற்சித்தனர்.



# கவிதை மூலமாகத் தெய்வப் புகழ்நவிற்சி (இரகசிய வாதம்)

நிழல்தோற்ற வாதத்தின் வளர்ச்சியின் கடைசி நிலையாக உள்ளது இரகசிய வாதம். இதை நாம் ஒரு தனி வாதமாகவும் கொள்கின்றோம். பாரதத்தில் அனாதி காலந்தொட்டே இருந்து வரும் தத்துவ விளக்க மரபின் கவிதை உருவமே இது. இதன் கண் உலகத்தை ஆக்கியும், நிலை நிறுத்தியும் , அழித்தும் வரும் பரம்பொருளின் புகழை வாயார வாழ்த்தத் தலைப் பட்டனர். கடவுளைத் தலைவனாகவும், உலகெங்கும் உள்ள ஜீவராசிகளைத் தலைவியாகவும் கற்பித்து தலைவனுக்காக தலைவி காலமெல்லாம் உருகியிருக்கும் நிலையைச் சித்தரிக்க முற்பட்டனர். இரகசிய வாதத்தில் கடவுளுக்கு விளக்கம் கூற முற்படும் முறையில் மனிதனுக்கும் தெய்வத்திற்கும் உள்ள தொடர்பை விவரிக்க முயன்றனர். எப்படி மனிதனது எல்லா நிலைகளிலும், உணர்ச்சியின் எல்லா எல்லைகளிலும் பரமாத்மா வியாபித்துள்ளார் என்பதை வரையவும் தலைப் பட்டனர். ஆனால் இது பக்தி காலத்திய கவிதைகள் போல் பக்தியின் ஊற்றைப் பெருக்கெடுக்கச் செய்வதற்காக முன் வரவில்லை. தத்துவ ரீதியாகக் கவிதை வாயிலாகக் கடவுளின் சிறப்பைக் கூற முற்பட்டது.

**ஜயசங்கர் ப்ரஸாத் :** புத்துணர்ச்சிக் காலத்திய ஹிந்தி கவிகளுள் தலைசிறந்தவராக்க் கருதப்படுகின்றவர் இவர். நிழல் தோற்ற வாதத்தைத் தோற்றுவித்தவரும் இவரேயாவார். கவிதை, நாடகம், கதை, நாவல், கட்டுரை போன்ற எல்லலா இலக்கியத்துறைகளிலும் புகழ்பெற்ற பெருமை இவரைச்சாரும். இவர் 1890–ம் வருடம் காசியில் உள்ள ஒரு மூக்குத்தூள் வியாபாரியின் மகனாகத் தோன்றினார். வீட்டிலேயே இவருக்கு ஆங்கிலம், சமஸ்கிருதம், பாரசீகம் ஆகிய மொழிகள் கற்று கொடுக்கப்பட்டன. ஆறுவயதாயிருக்கும் பொழுதே

கணேசரின் மேல் ஒரு கவிதை இயற்றி பாலகவி என்ற சிறப்பைப் பெற்றார். முதன்முதலில் 'இந்து' என்ற ஒரு மாதாந்திர பத்திரிகையை இவர் நடத்தி வந்தார். பிறகு மெள்ள மெள்ளக் கவிதைகளும் கதைகளும் இயற்ற ஆரம்பித்தார். கீழ்க்கண்ட கவிதை நூல்கள் இவரால் இயற்றப்பட்டன – 'சித்ராதார்' 'கானனகுஸும்' 'பரேமபதிக்' 'கருணாலய' 'மஹாரராணகா மஹத்வ, 'ஜர்னா', 'காமாயனி', 'ஆன்ஸூ' ஆகிய நூல்கள் இவரால் இயற்றப்பட்டன என்ற நூலின் மூலமாகத் தான் நிலைபெற்றது. தனிமனிதனின் தவித்துருகும் உள்ளத்தின் புயலையும் கொந்தளிப்பையும் செவ்வனே சித்தரித்து விரஹதாபத்தை விவரிப்பதில் தன்னிகரற்று விளங்குகின்றது. இவரது ஆன்ஸூ என்ற நூல்.

பிரஸாத் அன்பையும் அழகையும் சித்தரிக்கும் கவிஞனாக விளங்கினார். இவரால் எழுதப்பட்ட 'காமாயனீ' என்ற நூல் ஹிந்தி இலக்கியத்திலேயே தலை சிறந்த நூலாகக் கருதப் படுகின்றது. 'லஹர்' என்ற நூலிலே உள்ள உருவக அமைப்புகள் படிப்போர்களின் மனத்திலே முழுமையான காப்பிய நிறைவை உண்டுபண்ணுகின்றன. நிழல் தோற்றங்கள் மூலமாக உணர்ச்சிச் செறிவை வெளிப்படுத்துவதில் இவரது நூல்கள் வியக்கத்தக்க திறமையைப் பெற்றுள்ளன. பாத்திரப் படைப்பிலே இவரது உயரிய நோக்கங்களும், தூய பண்புகளும் தனக்கே வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

காமாயனீ என்ற மஹா காவ்யத்திலே கவி முதல் மனிதன் மனுவின் வாழ்க்கையை விவரித்துள்ளார். இது உருவக முறையில் இதயத்திற்கும் புத்திக்கும், நடக்கும் போராட்டத்தையும், அறிவின் வளர்ச்சியினால் ஏற்படும் இதயமின்மையையும் சித்தரிக்கின்றது. ஐம்புலன்களின் சிற்றின் பங்களுக்கு இலக்காகி அழிவுற்ற தேவ சாதியின் கடைசி தேவனாக மனு எஞ்சியிருக்கின்றான். இமயமலையின் உயர்ந்த சிகரத்தின்மேல் உட்கார்ந்தவாறு உலகை அழிக்கும் ஊழியைக்

கண்ணீர்த் திரைபடர்ந்த கண்களுடன் காணும் மனு. சிறிது காலத்திற்குப்பிறகு காமாயனீ என்னும் கன்னியைக்கண்டு நேசிக்கத்தொடங்குகின்றான். பிறகு மனு காமாயனியைப் பிரிந்து சாராஸ்வத ப்ரதேசத்தின் ராணியான இடாவிடம் போய்ச் சேருகின்றான். காலக்போக்கிலே காமாயனியைப் பிரிந்து இடாவைச் சேர்ந்ததினால் தனக்கு ஏற்பட்ட குறை பாடுகளை மனு புரிந்து கொள்ளுகின்றான். காமாயனியும் முதல் மனிதனாம் தன் குழந்தையை எடுத்துக்கொண்டு வருகின்றாள். அந்தச் சிசுவை இடாவிடம் விட்டு மனுவும் காமாயனியும் ஆனந்தபுரியை நோக்கிச் செல்கின்றனர். இந்நூலிலே மனம் காமாயனியாகவும், புத்தி இடாவாகவும் உருவகப்படுத்தப் பட்டுள்ளன. மனிதன் உணர்ச்சிப் போக்கை மறந்து, புத்தியின் கோலிற்கு ஆடும் நிலைமையில் மனிதத் தன்மைமையே இழந்து விடுகின்றான் என்பது இந்நூலின்கண் செவ்வனே விளக்கப்பட்டுள்ளது. ஊழிக்குப்பின் எஞ்சியிருக்கும் ஒரே ஜீவனின் மனத்தனிமையும் இனிமையும், அந்த இனிமையிலே விளைந்திடும் நன்மையும், திசைமாறிய சித்தத்தின் முன் தோன்றும் தீமையும், கடைசியிலே தீமையெல்லாம் விலகிப் புதுமையுடன் மலரும் இனிமையும் இந்தப் பெரு நூலின்கண் மிக அழகாக விளக்கப்பட்டுள்ளன. பெண்மையின் மேன்மையை விளக்குகின்றது இந்தக் காவியத்தலைவியின் தூய வாழ்வு, நிழல் தோற்றவாத காலத்தின் தத்துவங்களை நன்கே விளக்கும் ஒரே நூல் காமாயனீதான். நிழல் தோற்றவாத காப்பிய பரம்பரையில் தலையணியிது என்று கூறினாலும் மிகையாகாது. பிராசாத்தின் காப்பியங்களிலே காணும் தனித்தன்மைகளைப் பின்வருமாறு கூறலாம்.

உணர்ச்சிச் செறிவு : இதயத்தின் கண் தோன்றும் சீரிய உணர்ச்சிகளை இவர் நன்றாகச் சித்தரித்துள்ளார். உணர்ச்சியின் ஆழத்தை ஆவேசமா ஆத்திரமோ கொள்ளாமல் சிறந்த முறையில் வெளிப்படுத்தியுள்ளார்.

**சொல் நயம் :** எளிமையும் நளினமும் ஒருங்கே கொண்ட சொற்களை அழகாகக் கையாளுவதில் ஹிந்தி இலக்கியத்தி லேயே இவருக்கு இணை எவருமில்லை. பொருட்செறிவு கொண்ட சொற்களை இடத்திற்குகந்தவாறு பிரயோகித் துள்ளார்.

**ஆழ்ந்த தெளிந்த நடை :** சொற்றொடரில் சிக்கல் கொண்டுவராமல் ஆழ்ந்த கருத்துக்களை அழகிய தெளிவான நடையிலே இவர் வெளிப்படுத்தியுள்ளார்.

**கற்பனை நயம் :** இவரது கற்பனையிலே வானவில்லின் வண்ணச் சிறப்புப் போன்ற எண்ணச் சிறப்பை நாம் காணுகின்றோம். கவிஞனின் உள்ளம் இயற்கையின் எழிலை எந்த எல்லைவரை விவரிக்க முடியும் என்பதற்கு இவர் கற்பனை எடுத்துக்காட்டாக விளங்குகின்றது. சின்னஞ்சிறிய விஷயத்தைக் கூடத் தன் கற்பனைத் திறனினால் மனத்தைக் கவருமாறு செய்கின்றார். ஒரு நாடக ஆசிரியராகவோ கதை யெழுத்தாளராகவோ இவருக்குக் கிடைத்த புகழைக் காட்டிலும் பன்மடங்கு அதிகமான புகழ் கவிஞர் என்ற முறையில் இவருக்குக் கிட்டியுள்ளது. தற்கால ஹிந்தி இலக்கியத்திற்கு இவரது சேவைகள் மதிப்பிடற்பாலது.

**மாகன்லால் சதுர்வேதி :** இவர் 1888–ம் வருடத்தில் ஹோஷங்காபாத் ஜில்லாவில் உள்ள பாபஸி என்ற இடத்திலே பிறந்தார். சிறு வயதிலேயே அரசியலில் ஈடுபட ஆரம்பித்தார். வெள்ளைக்காரர்களுக்கு எதிராகப் புரட்சிக்கனலைக் கக்க ஆரம்பித்தார். பள்ளியில் உபாத்தியாளராகப் பணிபுரியும் காலத்திலே கையில் எப்போழுதும் துப்பாக்கி வைத்துக் கொண்டு மாணவர்களுக்குப் புரட்சியைப் புகட்டி வந்தார். இவர் 'ஒரு பாரதீய ஆத்மா' என்ற புனைப் பெயரைக் கொண்டு நிழல் தோற்றவாத நடையில் தேசபக்திப் பாடல்களில் இயற்ற ஆரம்பித்தார். இவர் கீழ்கண்ட நூல்களை இயற்றினார் – ஹிமகிரீடினீ. ஹிமதரங்கிணீ, கிருஷ்ணார்ஜுன யுத்த, வன

வாஸீ, மாதா, இவரது கவிதையை எளிதில் புரிந்து கொள்ள முடியாது. பொருட்செறிவு அதிகமாக நிறைந்திருப்பதாலும் தன்னுடைய எண்ணத்தை விளக்குவதற்காக சுற்றி வளைத்துச் சொல்லும் முறையை இவர் கையாண்டிருப்பதனாலும், இவருடைய நடையில் எளிமையை நாம் காண முடியவில்லை. ஆனால் ஜயமுண்டு பயமில்லை மனமே என்ற ஒரு துணிவுடன் கவிதைகளை இயற்றும் இவரை நாம் மெச்சாமலிருக்க முடியாது.

சூர்யகாந்த் திரிபாடீ 'நிராலா' : நிழல் தோற்றவாத காலத்திய கவிகளுள் மிகச் சிறந்தவர்களில் ஒருவராக இவரும் கருதப்படுகின்றார். இவர் 1890–ம் வருடம் மேதினிபூர் என்ற இடத்தில் பிறந்தார். பள்ளியில் பயிலும் காலத்திலேயே இவர் வங்காள மொழியில் கவிதைகள் இயற்ற ஆரம்பித்தார். ஹிந்தியில் தம் மனைவியின் தூண்டுதலின் பேரில் இவர் கவிதைகள் இயற்ற ஆரம்பித்தார். இவர் ஹிந்தியில் முதலில் இயற்றிய கவிதை 'ஜுஹி கி கலி' என்பது. இந்தக் கவிதையே இவருடைய உள்ளத்தில் ஒரு சிறந்த கவியின் வித்து ஊறி விட்டது என்பதற்குச் சான்றாகியது. முதலில் இவர் 'மத்வாலா' என்ற பத்திரிகைக்கு ஆசிரியராகப் பணியாற்றி வந்தார். ஹிந்தி கவிதையிலே இவர் பல புதுமைகளைப் புகுத்தியுள்ளார். புதுமைக் கவிஞர் என்று இவருக்குப்பட்டம் கொடுத்தாலும் மிகையாகாது. யாப்புப் பிணைப்பற்ற கவிதைகளை இயற்றும் பரம்பரையை ஹிந்தியில் ஆரம்பித்து வைத்தவர் இவர்தான். வங்காளத்திலும் ஆங்கிலத்திலும் பழக்கத்திலிருந்த புதுமைப் பரம்பரைகளிலே பலவற்றை ஹிந்தியில் புகுத்திய பெருமை இவரைச்சாரும். உதாரணமாக ஒரு விஷயத்தை உருவகப்படுத்தி அதன் முழு பிம்பத்தையும் நம் மனக்கண் முன் நிறுத்தி வைக்கும் முறையை இவர் வங்காளக் கவிதைகளிலிருந்து ஹிந்திக் கவிதையில் கொண்டு வந்தார். சொற் சித்திரங்களைச் சித்தரிப்பதில் இவர் நிகரற்றவர். ஒன்றோடு ஒன்று ஒட்டியவாறு முத்துக்கோத்தாற்போல் சொற்கோர்வையை இவர் தமது

கவிதைகளிலே வெளிப்படுத்தியுள்ளார். அழகிய லலிதமான கேட்பதற்கினிமையான பற்பல வடமொழிச் சொற்களை இவர் தன்னுடைய கவிதைகளிலே பிரயோகித்துள்ளார். பரம்பொருளுக்கும் மனிதனுக்கும் உள்ள அறுக்கமுடியாத பிணைப்பைப் பற்பல கவிதைகளிலே இவர் விளக்கியுள்ளார். இவருடைய கவிதைகளிலே முன்னேற்றவாத காலத்திய இயல்புகளும் காணப்படுகின்றன.

**சுமித்ரானந்தன் பந்த்** : இளமை பொங்கும் உணர்ச்சியுடன் இயற்கையின் மங்கா கவர்ச்சிதனையும், மனதின் எழில் நிரம்பிய நிழல் தோற்றங்களையும் சொல்லுருவில் தொகுத்துத் தந்த கவிஞர் இவர் ஆவார். புத்துணர்ச்சிக் கால இலக்கியத்திலே என்றென்றும் அழியாப் புகழ் பெற்ற நான்கு கவிஞர்களுக்குள் இவரும் ஒருவர் ஆவார். இமயமலையின் சரிவில் உள்ள அல்மோடா என்ற இடத்திலே இவர் பிறந்தார். இயற்கையின் எழிலைக் குழந்தையின் கண்கொண்டு நோக்கும் மனநிலை இவருக்குக் கிடைத்திருந்தது. இயற்கையின் அழகைக் கண்டு பெருக்கெடுத்தோடும் உணர்ச்சிகளை இனிய கவிதைகளாக வடிக்க ஆரம்பித்தார். இவர் ஒரு இலட்சியவாதியாகத் திகழ்ந்தார். இவரால் கீழ்க்கண்ட நூல்கள் இயற்றப்பட்டன உச்வாஸ், கிரந்தி, வீணா, பல்லவ, குஞ்சன், யுகாந்த், யுகவாணீ, கிராம்யா, பல்லவினீ, ஸ்வர்ண கிரண், ஸ்வர்ண தூலி, உத்தரா, அதிமா, யுகபத், மது ஜ்வால், ரஜத் சிகர், சிதம்பரார். இவருடைய சொற் பிரயோகங்கள் ஹிந்தி மொழிக்கு ஒரு புதிய பாதையை வகுத்துக் கொடுத்தன. யாப்பு, அணி முதலியவைகளின் பிரயோகத்தினில் புதிய முறைகளைப் பாங்குறக் கையாண்டிருக்கின்றார். கவிதையழகும் உணர்ச்சிச் செறிவும் இரண்டறக் கலந்த இவருடைய கவிதைக்கு ஒரு தனிப் பொலிவைக் கொடுக்கின்றன. நிழல் தோற்றவாத கால வழக்கப்படி நுண்ணிய பொருள்களையும் நன்கே விளக்க முயன்றுள்ளார். சொற் சித்திரங்களைச் சமைப்பதிலும் இவருக்கு அதிகமாகச் சிறப்பு கிடைத்துள்ளது. உருவமற்ற

எண்ணங்களுக்கு உருவம் கற்பித்து அதை விளக்குவதில் இவர் நிகரற்றவராக விளங்கினார். இவருடைய கவிதைகளிலே விவேகானந்தர். அரவிந்தர் ஆகியவர்களின் தத்துவ சித்தாங்களும் பல இடத்தில் பிரதிபலிக்கின்றன. இவர் நெடு நாள்வரை பாண்டிச்சேரியில் அரவிந்தருடைய ஆஸ்ரமத்திலே வசித்திருந்தார்.

மஹாதேவீ வர்மா : உலக இலக்கியத்தை நாம் நோக்குங்கால் பெண்கள் கவிஞர்களாக, அதுவும் சிறப்பு எய்திய கவிஞர்களாகத்திகழ்ந்த மொழிகள் ஒரு சிலவேயுள்ளன. தமிழ் மொழியின் கண் சங்ககால இலக்கியத்திலும், பிற்கால இலக்கியத்திலும் ஔவையார் போன்ற ஒரு சில பெண் கவிஞர்களை நாம் காணுகின்றோம். ஹிந்தியிலே பக்தி கால இலக்கியத்தின் கண்தோன்றிய மீராவை நாம் அறிவோம் அஃது போல் இயற்ற ஆரம்பித்தார். இவருடைய கவிதைகள் முதன்முதலில் வெளியிடப்பட்ட உடனேயே ஹிந்தி இலக்கிய உலகத்திலே ஒரு சலசலப்பை ஏற்படுத்தின. இவருடைய கவிதைகளின் ஒவ்வொரு வரியும் ஹிந்தி இலக்கியம் படிப்பவர்களால் மனப்பாடமாக அறியப்படுகின்றன. இவர் இயற்றிய நூல்கள் கீழ்வருமாறு – நீஹார், ரஷ்மீ, நீரஜா, சாந்திய கீத், தீபசிகா, சப்தபர்ண.

மஹாதேவீ வர்மாவின் கவிதைகளில் விரக பாவனை தான் மேலோங்கி நிற்கின்றது. நிழல் தோற்ற வாத காலத்திய எல்லா தனித்தன்மைகளையும் நாம் இவருடைய கவிதைகளிலே காணுகின்றோம். உணர்ச்சிகளைக் கொட்டிச் சிதறவிடாமல் பாங்குடன் பொலிவுறச் செய்து வெளியிடுவதில் இவரக்கு அதிகமாகச் சிறப்புக் கிடைத்திருக்கின்றது. உணர்ச்சிப் பெருக்கு அதிகமாக இல்லாவிடிலும், ஆழ்ந்த சிந்தனையெனும் உருக்கிய பொன்னிலேவார்த்த பொன்னணி போன்ற எண்ணச் சிறப்பு இவர் கவிதையை வானளாவ உயர்த்தி விடுகின்றது. பெண்ணின் மனதிலே உள்ள வருத்தத்தையும், ஏக்கத்தையும் இவரது கவிதைகள் படம் பிடித்துக்காட்டுகின்றன.

கருணையின் இயல்பான பெருக்கு இவரது கவிதைகளிலே அதிகமாக காணப்படுகின்றது. பரம்பொருளைப் பிரிந்த ஜீவாத்மாவின் நிலையையும், அதன் உள்ளத்தின் துடிப்பையும் பரம் பொருளின் இரக்கமற்ற தன்மையையும் செவ்வனே விளக்கியுள்ளார். இவர் அதிகமாகச் சிறு கவிதைகள்தான் இயற்றியுள்ளார். இவருடைய கவிதைகளிலே மீராவின் கவிதைபோல இசையினிமை மிளிர்கின்றது. உள்ளத்தின் எளிமையும், பணிவும், எண்ணத்தின் கம்பீரமும் சேர்ந்து கவிதையிலே ஒரு தனிச்சிறப்பை உண்டு பண்ணுகின்றன. சொற் சித்திரங்கள் சமைப்பதிலே இவருக்குத் தனிச் சிறப்புக் கிடைத்திருக்கின்றது. வெள்ளைத் தாமரைப்பூவிலிருக்கும் சரஸ்வதியே உயிர் பெற்றாள் போல் இவருடைய கவிதைகளிலே தோன்றுகின்றாள். வானவில்லின் வண்ணங்களேழும் துடிதுடிப்புடன் உருப்பெற்றது போல் இவரது கவிதைகளிலே தோன்றுகின்றன. மனத்தின் நிழல் தோற்றங்களை இவர் நன்கே விளக்கியுள்ளார். இவருடைய சொற்சித்திரங்களிலே கலையழகு நன்கே மிளர்கின்றது. இவருடைய கவிதைகள் ஹிந்தி இலக்கியத்தின் அழியாச் செல்வங்கள் என்று கூறினால் மிகையாகாது.

சுபத்ராகுமாரீ சௌஹான் : நிழல் தோற்ற வாத காலத்திய நடையிலே தேச பக்தி நிரம்பிய கவிதைகளை இயற்றிய பெருமை இவரைச் சேரும். தற்கால ஹிந்தி இலக்கியத்தின் இரண்டு சிறந்த பெண் கவிஞர்களுள் இவர் ஒருவர் ஆவார். 1907–ம் ஆண்டிலே பிரயாகில் இவர் பிறந்தார். இவரது கணவர் ஒரு சிறந்த தேசீயவாதியாகவும் காங்கிரஸ் காரராகவும் விளங்கினார். முதலில் இவருடைய சிறிய கவிதைகள் பத்திரிகைகளில் வெளிவந்தன. ஆனால் கவி என்ற முறையில் இவருக்குச் சிறப்புக் கிடைப்பபதற்கு ஆதாரமாக இருந்தது. 'ஜான்ஸீ கீ ராணீ' என்ற காப்பியம். இது முதல் சுதந்திரப் போர் காலத்தில் வீராங்கனை லட்சுமிபாயின் வாழ்க்கை வரலாற்றை விவரித்துக் கூறும் நூல்

ஆகும். வெள்ளைக்காரர்களுக்கு எதிராக வீரக்கனல்ல தெறிக்கச் செய்த மாதர்குல மாணிக்கத்தின் மகோன்னதமான வாழ்க்கையை இவர் மிகமிகச் சிறப்பாக வருணித்துள்ளார். துஞ்சிக் கிடக்கும் நெஞ்சத்தையும், அஞ்சி நடுங்கும் மனத்தையும் வீராவேசத்துடன் துள்ளிக் குதிக்கச் செய்யும் ஆற்றல் வாய்ந்தது இவருடைய காப்பியத்தின் நடை, தீப்பொறி பறக்கும் சொற்கள், ஆனால் நம் மனதிலே தீஞ்சுவையை எழுப்புகின்றன. நெஞ்சுருக்கத்தின் பெருக்கெடுத்தோடும் ஓட்டம். ஆனால் நம் மனதிலே வீரத்தை ஊக்குவிக்கின்றது. இயற்கவிஞர் என்ற புகழை இவரது ஒவ்வொரு பாடலும் நிருபிக்கின்றது. இவரால் எழுதப்பட்ட ஏனைய நூல்களின் குறிப்பிட்டவாறு – முகுல், பிக்ரே மோதீ, கிரிதாரா, உன்மாதினீ, சபா கா கேல் ஆகியவை. துர்பாக்கியவசமாக 1948–ம் ஆண்டிலே நாக்பூருக்கு அருகினில் மோட்டார் விபத்திற்கு இலக்காகி இவர் உயிர் நீத்தார்.

பகவதீ சரண் வர்மா : ஹிந்தியில் ஒரு சிறந்த நாவலாசிரி யராகக் கருதப்படுகின்ற இவர் ஒரு சிறந்த கவியும்கூட. முதலில் இவர் 'விசாரி' என்ற பத்திரிகையை நடத்திக் கொண்டிருந்தார். பிறகு இவர் கவிதைகளை இயற்ற ஆரம்பித்தார். இவருடைய கவிதைகளிலே போதை தரும் குணம் மேலோங்கி நிற்கின்றது. துடிதுடிப்புடன் கூடிய நடையும், எண்ணங்களைத் தன்னுள்ளே அடக்கிப் பெருக்கெடுத்தோடும் உணர்ச்சியின் ஓட்டமும் இவருடைய கவிதைகளிலே நாம் காணுகின்றோம். சிலேடையாகவும் கேலியாகவும் இவர் இயற்றிய கவிதைகள் நம் உள்ளத்தைத் தொடுமாறு அமைந்துள்ளன. 'மதுகண்' 'பிரேம் சங்கீத்' ஆகியவை இவர் இயற்றிய கவிதைத் தொகுப்புகள்.

ராம் குமார் வர்மா : ஒரு சிறந்த ஓரங்க நாடகாசிரியராகவும் விமர்சராகவும் புகழ் பெற்றவர் இவர். ஹிந்தி இலக்கிய வரலாற்றை விமர்சனம் செய்து இயற்றிய பெருமை இவரைச் சாரும். நிழல்தோற்ற வாத காலத்திய

நடையிலே இவர் இயற்றிய கவிதைகள் பிரசித்தி பெற்றன. இவரால் இயற்றப்பட்ட காப்பிய நூல்கள் கீழ்வருமாறு அஞ்சலி, ரூபராசி, சித்திரரேகா, சந்திரகிரண், வீர ஹமீர், சித்தோட் கீ சிதா, அபிஷாப், நிஷீத், ஹிம ஹாஸ், ஒவ்வொரு விஷயத்தையும் நன்கே அறிந்து கொள்ளவேண்டும் என்ற அவா இவருடைய கவிதைகளிலே மேலோங்கி நிற்கின்றது. உருவகங்கள் மூலமாக உணர்ச்சியின் ஆழத்தை மிகவும் சீரிய முறையில் வெளிப்படுத்தியிருக்கின்றார்.

ஹரிவம்சராய் 'பச்சன்' : உமர்கய்யாம் என்ற பாரசீக மொழிக் கவிஞர் உலக இலக்கிய வரலாற்றினிலே அழியாப் புகழ் பெற்றவர். ருபாயீ என்ற செய்யுள் நடையிலே உலக வாழ்வின் அழிவுத் தன்மையையும் இன்ப போகங்கள் வாழ் விற்கு இன்றியமையாதவை என்பதையும் தம் கவிதைகளிலே விளக்கியுள்ளார். உமர்கய்யாமின் வாழ்க்கைச் சித்தாந்தம் 'நேற்று நடந்ததைத்திருத்தமுடியாது, நாளை நடப்பதை நிறுத்த முடியாது; ஆகவே இன்றைய இன்பத்திற்கு வழிகோலு' என்பதாம். உமர்கய்யாமைப்பின்பற்றி வெவ்வேறு மொழிகளில் பலர் கவிதைகள் இயற்ற ஆரம்பித்தனர். ஹிந்தியிலே ஹரிவம்சராய் பச்சன் அவர்கள் உமர்கய்யாமைப் பின்பற்றிய ஒரே கவிஞர் ஆவார். உல்லாசத்துடனும், உற்சாகத்துடனும் வாழ்க்கையின் இன்பங்களை அனுபவிக்க வேண்டிய அவசியத்தைப்பற்றித் தன் கவிதைகளிலே கூற ஆரம்பித்தார். இவர் இயற்றிய நூல்கள் கீழ்வருமாறு – மதுசாலா, மதுபாலா, கய்யாம்கீ மதுசாலா, நிஷாநிமந்த்ரண், ஏகாந்தசங்கீத், ஆகுல் அந்தர், மிலன் யாமினீ, சத்ரங்கிணி ஆகியவை. இவருடைய நடை ஹிந்தி இலக்கியத்தில் மிகவும் சிறந்ததாகவும், பின்பற்றத் தகுந்ததாகவும் கருதப்படுகின்றது. மயக்கத்தை உண்டுபண்ணும் உணர்ச்சிகளை, மயக்கத்தைத் தூண்டுவிக்கும் சொல்வரிசையிலே வெளியிடுவதில் இவர் நிகரற்றவராக விளங்குகின்றார். மொழியின் எளிமைக்கும் உணர்ச்சியின் ஆழத்திற்கும் இவருடைய கவிதைகள் எடுத்துக்காட்டாக இருக்கின்றன.

**உதய சங்கர் பட் :** ஒரு நாடகாசிரியராக இவருக்கு அதிகப் புகழ் கிடைத்துள்ளது. இவர் குஜராத்தியைத் தாய் மொழியாகக் கொண்டவர். நிழல் தோற்றவாத காலத்திய நடையை பின்பற்றி இவர் கவிதைகள் இயற்றியுள்ளார். இவரால் இயற்றப்பட்ட நூல்கள் பின்வருமாறு –தக்ஷசிலா, ராகா, மானஸீ, வீஸர்ஜன், மனிதத் தன்மையைப் பிரதிபலிக்கச் செய்யும் நுண்ணிய எண்ணங்களையும் நன்கே வெளிப்படுத்தும் திறமை இவருக்குக் கிட்டியுள்ளது. பாரதீய கலாச்சாரத்தின் பல்வேறு சிறப்புகளையும் இயல்புகளையும் இவர் தன் கவிதைகளிலே விவரித்துள்ளார்.

**கோபால் சிங் 'நேபாலீ' :** ஆங்கிலம், நேபாலீ, ஹிந்தி ஆகிய மூன்று மொழிகளிலும் பாண்டித்தியம் பெற்ற இவர் இனிமையான காதலுணர்ச்சிகளைப் பிரதிபலிக்கச் செய்யும் பல கவிதைகளை இயற்றியுள்ளார். இயற்கை வருணனை, காதல் ஆகிய இரண்டு விஷயங்களில் தம்முடைய எண்ணச் சிறப்பைப் பல்வேறு கோணங்களில் வெளியிட்டுள்ளார். இவருடைய கற்பனையில் புதுமை மிளிர்கின்றது. பஞ்சீ, உமங்க், ராகினீ, ரிம்ஜிம், கல்பனா, நீலிமா, பஞ்சமீ ஆகியவை இவர் இயற்றிய நூல்கள்.

**சிவமங்கல் சிங் 'ஸுமன் :** இவருடைய கவிதைகளிலே புரட்சியின் குரல், மேலோங்கி நிற்கின்றது.

**சியாராம் சரண்குப்த :** பிரசித்தி பெற்ற ஹிந்தி கவிஞரான மைதிலீ சரண் குப்தவின் தம்பியாகத் தோன்றிய இவர் ஹிந்தியின் ஒரு சிறந்த எழுத்தாளராகவும், கவிஞராகவும் கருதப்படுகின்றார். இவரால் எழுதப்பட்ட காப்பிய நூல்கள் பின்வருமாறு–தூர்வாதல், மௌர்ய விஜய், ஆத்மோத்ஸர்க மிருண்மயீ, பாபூ. இவருடைய கவிதைகளிலே எளிமையும் பொருட்செறிவும் நிரம்பக்காண்கிறோம். இவரது நடை சீரிய இலட்சியங்களைக் கொண்டு பண்பட்ட மொழியில் உணர்ச்சிகளை வெளியிடுகின்றது.

**குருபக்த சிங் :** ஹிந்தியில் இயற்கைப் புகழ் நவிற்சிக் கவிஞர்களுள் குருபக்தசிங் தலைசிறந்தவராக விளங்குகின்றார்.

இவர் கீழ்க்கண்ட நூல்களை இயற்றியுள்ளார் – சரஸ ஸுமன், குஸும குஞ்ச, வன்சீத்வனி, நூர்ஜஹான், வனஸ்ரீ, விக்கிரமாதித்ய. இவைகளுள் நூர்ஜஹான் என்ற பெருங் காப்பியம் ஹிந்தி இலக்கியத்தின் ஒரு அரிய பொக்கிஷமாகப் போற்றப்படுகின்றது.

அனூப் சர்மா : சீத்தார்த்த, சர்வாணீ, குஸுமாஞ்சாலி, ஸுநால் ஆகிய நூல்களை இயற்றியவர். இவர் ஒரு சிறந்த கவிஞராவார். இவரது சிருங்கார வருணனைகள் மிகவும் புகழ் பெற்றன.

சோஹன்லால் த்விவேதி : காந்தீயத்தின் சிறப்புகளை வெளிப்படுத்தும் முறையில் இவர் இயற்றிய நூல்கள் கீழ் வருமாறு – பைரவி, யுகாரம்ப, பால பாரதி, ஆகியவை. தேச பக்தியை உணர்ச்சியோட்டத்திலே தெள்ளென எடுத்துக் கூறும் திறமையை இவர் பெற்றிருந்தார்.

மேற்குறிப்பிட்டுள்ள கவிகள் நிழல் தோற்றவாதத்திய நடையில்தான் கவிதைகள் இயற்றினார்கள் என்று கூறுவதற் கில்லை. இவர்கள் தங்கள் தனித்தன்மைகளையும், முன்னேற்றத்தில், உணர்ச்சியோட்டத்தையும் நிழல் தோற்ற வாதத்தின் நடையில் எழுதியுள்ளனர். ஆகவே இவர்கள் எல்லோரையும் நிழல் தோற்றவாதக் கவிகளாக நாம் கொள்ளலாகாது. நிழல் தோற்ற வாதத்தின் சிறப்புகளைப் பரவலாக மேற்கொண்டு தங்கள் இயல்புகளையும் நோக்கு களையும் இவர்களில் பலர் வெளியிட்டுள்ளார்கள். ஆனால் கவிதைக்கு என்றுமே ஏற்படாத ஒரு சிறப்பை ஏற்படுத்திக் கொடுத்த பெருமை இந்தக் காலத்திய கவிகளைச் சாரும். மேற்குறிப்பிட்ட கவிகளைத் தவிர நரேந்திரசர்மா. ராமேஸ்வர பிரசாத் சுக்ல 'அஞ்சல்' கோபால் சரண் சிம்ஹ ஆகிய கவிகளும் இந்தக் காலத்தில் கவிதைகள் இயற்றினார். இடச்சுருக்கம் காரணமாக அவர்களைப்பற்றி இங்கு விரிவாகக் கூறமுடியவில்லை.



# பிரகதி வாத — பிரயோக வாத காலம்

ரஷ்யாவில் பொதுவுடமைப் புரட்சி ஏற்பட்ட பிறகு உலகத்தின்கண் வியக்கத்தக்க மாறுதல்களுக்கான அடிப்படைகள் தோன்ற ஆரம்பித்தன. தொழிலாளர் முதலாளி உறவிலே மாறுதல் ஏற்பட்டு. நெடுங்காலந்தொட்டே இருந்துவரும் அடிமைத்தனம் என்பது தகர்த்தெரியப்பட்டு, எல்லோரும் சமம் என்ற உணர்ச்சி வேரூன்ற ஆரம்பித்தது. நசுக்கப்பட்டு, வெறுக்கப்பட்டு, ஒதுக்கப்பட்டு, இல்லாமை என்ற பெரும் பிணியில் அல்லல்பட்டு மாளும் கோடிக் கணக்கான ஏழைகள், தொழிலாளர்கள் ஆகியவர்களின் நிலை கண்டு இறங்கி உணர்ச்சி வெள்ளத்தைப் பெருக்கெடுக்கச் செய்தனர். சில கவிஞர்கள் இதைத்தவிர புதுமையைத் தேடி விழையும் மற்றும் சில கவிஞர்கள் உவமைகள் உருவகங்கள் ஆகியவைகளில் புதுமையைப் புகுத்திக் கவிதை இயற்ற ஆரம்பித்தனர். இவர்களால் சிறப்பிக்கப்பட்ட இலக்கிய மரபுதான் ஹிந்தியின் கண் ப்ரகதி வாத பிரயோகவாதகாலம் என்று கூறப்படுகின்றது. இக்காலத்திய கவிகளுள் கீழ்குறிப் பிட்டவர்கள் முக்கியமாகக் கருதப்படுகின்றனர். பால கிருஷ்ணசர்மா நவீன், ராம்தாரீ சிங் தினகர், அக்ஞேய, நாகார்ஜுன, பிரபாகர் மாச்வே.

**பாலகிருஷ்ணசர்மா 'நவீன்'** : 1897ம் ஆண்டிலே இவர் க்வாலியரில் உள்ள பயானா என்ற இடத்தில் பிறந்தார். இளமையில் ஏழ்மையின் கசப்பான உண்மைகளை இவர் அறிந்தார். தேசத்தில் ஒத்துழையாமை இயக்கம் வலுப் பட்டிருந்த காலத்திலே இவரும் காலேஜ் படிப்பை விட்டு விட்டுச் சிறைவாசம் புகுந்தார். சிறைச்சாலை இவரது சிந்தனைச்சோலையை வளமடையச் செய்தது. ஏழ்மையும் அடிமைத்தனத்தையும் தகர்தெறிய இவரது இதயம் துடிக்க ஆரம்பித்தது. முதன் முதலில் முன்னேற்றத்தை எதிர்நோக்கி யிருக்கும் மக்களின் மனநிலையைப் பிரதிபலிக்கச் செய்யும்

பற்பல கவிதைகளை இவர் இயற்றினார். பிறகு உள்ளத்தின் உருக்கத்தையும் அன்பு உணர்ச்சியின் இனிமையையும் தன் கவிதைகளிலே வெளியிட ஆரம்பித்தார். 'கான்பூரின் சிங்கம்' என்ற அடைமொழியைக் கொண்ட 'நவீன்' தன் காப்பியங் களிலே பல புரட்சிகரமான பிரயோகங்கள் செய்துள்ளார். இவருடைய கவிதைகளிலே அனல் தெறிக்கும் ஆவேசமும், உணர்ச்சியின் புயலாட்டமும் காணப்படுகின்றன. தேசீய உணர்ச்சி இவருடைய உள்ளத்தில் மேலோங்கி நின்றது. 'தனி யொருவனுக்கு உணவில்லை எனில் ஜகத்தினையழித் திடுவோம்' என்று ஆவேசக்குரல் எழுப்பிய பாரதியாரைப் போல், ஹிந்தியில் நவீன் ஆவேசக்குரல் எழுப்பியுள்ளார். இவர் கீழ்க்கண்ட நூல்களை எழுதியுள்ளார் – க்வாஸீ, ரஷ்மிரேகா, ஊர்மிலா.

ராம்தாரி சிங் 'தினகர்' : பாரதீய கலாசாரத்தையும் தேசீயத்தையும் இணைத்துப் புரட்சிக்குரல் எழுப்பிய புதுமைக் கவிஞர் இவர். 1909–ம் வருடத்தில் பிஹாரில் உள்ள 'முங்கேர்' என்ற இடத்தினிலே இவர் பிறந்தார். அனல் தெறிக்கும் நடையிலே பற்பல காப்பிய நூல்களை இவர் இயற்றியுள்ளார். 'சமஸ்கிருதி கே சார் அத்யாய்' என்ற இவரது உரைநடை நூல் இந்திய கலாச்சாரத்தின் ஆரம்பத்திலிருந்து இன்று வரையில் உள்ள சரித்திரத்தை வரைய முயலுகின்றது. இவர் எழுதிய காப்பிய நூல்கள் பின்வருமாறு ரேணுகா, ஹுங்கார், ரஸவந்தீ, வந்த்வ கீத், சாமதேனீ, குருக்ஷேத்ர, ரஷ்மி ரதீ, பாபூ, இதிஹாஸ்கே ஆன்ஸூ, தூப்சாவ், நீம் கே பத்தே ஊர்வசி ஆகியவைகள். இவருடைய நடையிலே கம்பீரமும் ஆவேசமும் பொங்கக் காண்கின்றோம். இந்திய சரித்திரத்தின் கடந்துபோன பொற்காலத்தின் அழகிய இன்பமும், தற்கால அவல நிலையைக் கண்டு எழும் தாங்கொணாத் துயரமும், எதிர்காலச் செழிப்பின் நம்பிக்கையிலே ஊற்றெடுக்கும் உற்சாகமும் இவருடைய கவிதைகளிலே காணப்படுகின்றன. நிழல் தோற்றவாத காலத்திய கவிகளைப்போல் இவர்

சொல்லாடம் பரத்திலே நம்மை மயக்க முயற்சிக்கவில்லை. சொல்லும் உணர்ச்சியும் ஒருங்கே இணைந்து தெளிவான எண்ணத்தை நம் முன் கொண்டு வருகின்றேன். ஒரு விஷயத்தைப் பல தடவை வலியுறுத்திக் கூறி அதன் பொருளை நம் மனதிலே பதிய வைக்குமாறு செய்வதில் இவர் சிறப்புப் பெற்றிருக் கின்றார். விஞ்ஞானத்தின் வானளாவும் வளர்ச்சியில் அழிவின் சின்னங்கள் மறைந்திருப்பதைக் கண்டு அவைகளைப் போக்குவதற்காக உணர்ச்சிக் குரல் இவர் எழுப்பியுள்ளார். தற்கால ஹிந்தி இலக்கியத்தின் தலைசிறந்த கவிகளுள் இவரும் ஒருவர் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

சச்சிதானந்த ஹீரானந்த வாத்தஸாயன் 'அக்ஞேய' – பிரயோக வாதத்தைத் தோற்றுவித்தவர் என்ற முறையில் இவர் ஹிந்தியில் தனிச்சிறப்புப் பெறுகின்றார். 1911–ம் வருடத்தில் கோரக்பூரில் இவர் பிறந்தார். கவிதையிலே புதிய உவமைகளையும் உருவங்களையும், குறிப்புச் சொற்களையும் பிரயோகிக்கவேண்டும் என்னும் அவர் இவருடைய உள்ளத்தில் மேலோங்கி நின்றது. கற்பனையை வெறும் உணர்ச்சி வட்டப் பறவையாக ஆக்காமல் அதைப் புத்தியின் எல்லைவரை பறக்கவிட்டு இல்லாததையெல்லாம் கொண்டு வரவேண்டும் என்ற முயற்சியில் முழுமூச்சுடன் உருவாக்கும் முயற்சியிலும் கவனம் செலுத்தினார். இவருடைய கவிதைகளிலே பாவனைகளின் நெருக்கமான ஓட்டம் இருந்த போதிலும் உணர்ச்சியின் இயல்பான செறிவு காணப்படவில்லை. 'தார சப்தக்' என்ற கவிதைத் தொகுப்பினிலே இவர் பிரயோக வாதக் கவிதைகளை வெளியிட்டுள்ளார். இவர் எழுதிய ஏனைய நூல்கள் பக்ன தூத், இத்யலம், சிந்தா, கித்னே நாவோன்மே கித்னே பார்

பிரயோக காலத்திய ஏனைய கவிகள், தர்மவீர் பாரதி, நரேஷ் குமார் மேத்தா, கேதார், நளினிவிலோசன், கிரிஜா குமார் மேத்தா, சகுந்தலா மாதுர், அஜித்குமார் ஆகியோராவர். புதிய பிரயோகங்களைக் கையாளுவதில் இவர்கள்

ஈடுபட்டனர். தர்மவீரர் பாரதி சிருங்கார விஷயங்களில் புதிய பிரயோகங்களைக் கையாண்டார். புதிய குறிப்புச் சொற்களை யுண்டு பண்ணுவதில் நரேஷ் மேத்தா அதிகம் கவனம் செலுத்தி வந்தார். 'மாதுர்' மக்களின் கலாச்சார உணர்ச்சியிலே புதுமைபுகும் நிலையை நன்கே படம் பிடித்துக் காண்பித் துள்ளார். 'தியாதரி' என்ற இவரது நூல் பிரசித்தி பெற்றது.

பிரயோகவாத காலத்திற்குப் பிறகுள்ள பத்தாண்டு காலத்திலே இது வரையில் சிறப்புப் பெற்ற எல்லா முறைகளையும் தழுவிக் கவிதைகள் எழுதப்பட்டு வந்தன. ஹிந்தியில் கடந்த முப்பதாண்டுகளில் வெளி வந்த கவிதைத் தொகுப்புகளும், நூல்களும் இந்தியாவில் வேறு எந்த மொழியிலும் வெளிவந்துள்ள கவிதைகளைக் காட்டிலும் மிகவும் அதிகம் என்று கூறிலாம். ராமவிலாஸ் சர்மா, சம்புநாத் சிங், பல்பீர் சிங் 'ரங்க', நீரஜ், விரேந்திர மிஷ்ர, ரமாநாத் அவஸ்தி ஆகிய பல புதிய கவிஞர்கள் இக்காலத்தில் புகழ் பெற்றுள்ளனர். இதைத்தவிர, ஹிந்தியைத் தாய்மொழியாகக் கொள்ளாத பல கவிஞர்களும் ஹிந்தி கவிதை இலக்கியத்தை வளப்படுத்தும் பணியிலே பங்கு கொண்டுள்ளனர்.



# உரைநடை இலக்கியம்

ஹிந்தி இலக்கியத்தின் இன்றைய (புத்துணர்ச்சி) காலத்தைச் சிலர் உரைநடைக் காலம் என்றும் கூறுவர். இதற்குக் காரணம் தற்காலத்தில் உரைநடை இலக்கியத்தில் ஏற்பட்டுள்ள மாபெரும் முன்னேற்றமேயாகும். காப்பியத் துறையிலும் நல்ல வளர்ச்சி ஏற்பட்டுள்ள போதிலும் இக்காலத்தில் உரைநடை இலக்கியத்தின் வளர்ச்சி பெரிதும் வியக்கத்தக்கதாகும். ஹிந்தி இலக்கியத்தின் ஆரம்ப காலந்தொட்டே அவ்வப்பொழுது உரைநடை நூல்களும் எழுதப்பட்டு வந்தன என்பதில் ஐயமில்லை. 'நாத' சம்பிரதாயத்தைச் சேர்ந்த சில சாதுக்கள் தங்கள் மதக் கோட்பாடுகளை உரைநடையிலும் பல நூல்களில் வரைந்துள்ளார்கள். பின்னர் பக்தி இலக்கிய காலத்தில் வைஷ்ணவப் பெரியார்களான வல்லபாச்யாரியார், கோகுல் நாத், மற்றும் பலரும் விரஜ பாஷையில் உரைநடை நூல்களை எழுதியுள்ளனர். இவற்றுள் வல்லபாச்சாரியாரின் 'சிருங்கார ரஸ மண்டன்' என்ற நூலும், கோகுல்நாத் அவர்களின் 'சௌராஸீ வைஷ்ணவன் கீ வார்த்தா', பாவன் வைஷ்ணவன் கீ வார்த்தா', என்ற இரு நூல்களும். ஹரிராய் அவர்களின் 'பாவப் பிரகாஷ்' என்ற விரிவுரை நூலும் இங்கு எடுத்துக் கூறத்தக்கன. ஆனாலும் அக்காலத்தில் காப்பிய நடையே பெரிதும் விரும்பப்பட்டு வந்ததால் உரைநடை இலக்கியத்திற்கு வளர்ச்சிக்கான தக்க சூழ்நிலை அமையவில்லை. ஆகவே அக்காலத்தில் காப்பிய நூல்களே பெருமளவிற்கு எழுதப்பட்டு வந்தன.

பிற்காலத்தில் அதாவது பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆங்கில ஆட்சி வேரூன்றிய பின்னர் மக்களின் மனப்போக்கிலேயே புரட்சிகரமான மாறுபாடு ஏற்பட்டது. ஆங்கில இலக்கியத்தின் தொடர்பு, தொழிற்புரட்சி

ஆகியவற்றின் காரணமாகத் தங்கள் வாழ்க்கையைத் திருத்தியமைத்துக் கொள்ள வேண்டும் என்ற விழிப்பு மக்களிடையே ஏற்பட்டது. நாட்டுப்பற்றும் தேசீய உணர்ச்சியும் மேலோங்கி மதத் துறையிலும் சீரிய மாற்றங்காண விழைந்தனர் மக்கள். தென்றலின் இனிமையைத் தாங்கி சீர்திருத்தக் காற்று வாழ்க்கையின் எல்லலாத் துறைகளிலும் வீச ஆரம்பித்தது. ஒருபுறம் கிறிஸ்தவப் பாதிரிமார்கள் தங்களுடைய மதத்தை மக்களிடையே பிரச்சாரம் செய்ய ஆரம்பித்தார்களென்றால். மற்றொருபுறம் ஹிந்துக்களிடையே பரவியிருந்த குருட்டுப் பழக்க வழக்கங்களைத் தகர்த்தெறிந்து ஹிந்து மதத்தின் உயர்ந்த தத்துவங்களை மக்கள் மனத்தில் பதியும்படியாகச் செய்வதற்காக ஆர்ய ஸமாஜம், பிரம்ம ஸமாஜம் போன்ற கழகங்கள் நிறுவப்பட்டன. பிரம்ம ஸமாஜத்தை ஸ்தாபித்த ராஜாராம் மோகன்ராய் அவர்கள் 'ஸதீ' என்ற கொடிய வழக்கத்தை ஒழித்தும், பெண்களின் கல்விக்காகப் பாடுபட்டதோடு அவர்களுடைய மற்ற உரிமைகளுக்காகப் போராடியும் ஹிந்து சமுதாயத்திற்குச் சிறந்த முறையில் பணிபுரிந்தார். ஸ்வாமி தயானந்த ஸரஸ்வதி அவர்கள் ஆர்ய ஸமாஜத்தை ஸ்தாபித்ததோடு ஹிந்தியைத் தேசீய மொழியாக ஏற்று மக்கள் எல்லோரும் அதைக் கட்டாயமாகக் கற்க வேண்டும் என்று பிரச்சாரம் செய்து வந்தார். இதே காலத்தில் போர்ட் வில்லியம் காலேஜ் போன்ற பல கல்விக் கழகங்கள் நிறுவப்பட்டன. ஆங்காங்கே அச்சுயந்திரச் சாலைகள் அமைக்கப்பட்டுப் பாடப் புத்தகங்களும், பத்திரிகைகளும் வெளிவர ஆரம்பித்தன. இவ்வாறு மக்களிடை ஏற்பட்ட விழிப்பு, புத்துணர்ச்சியின் காரணமாக இலக்கியத்திலும் புதிய கருத்துக்கள் புகுந்ததோடு அதன் பரிதி விரிவடைந்து நாடகம், சிறுகதை, பெருங்கதை (நாவல்) மற்றும் பல உருவங்களில் அது பெரு வளர்ச்சியடைய ஆரம்பித்தது.

ஹிந்தி இலக்கியத்தின் ஆரம்ப காலம் முதல் இன்று வரை அவ்வப்பொழுது ஹிந்தியின் உப மொழிகளான டிங்கல்

(இராஜஸ்தானீ), அவதீ, விரஜபாஷை ஆகியவை இலக்கிய மொழிகளாகத் திகழ்ந்து வந்தன என்பதை நாம் கண்டோம். வீரப் பெருங்காப்பியக் காலத்திலேயே தில்லி, ஆக்ரா மற்றும் அவற்றிற்க்கு அண்மையிலுள்ள பகுதிகளில் மக்களிடையே பேச்சு வழக்கில் இருந்து வந்த 'கடீ போலீ' என்ற மொழியிலும் கவிதைகள் எழுதப்பட்டன. அமீர் குஸ்ரோ என்பவர் விடுகதைகள், பழமொழிகள் போன்ற கவிதைகள் இம் மொழியிலேயே இயற்றிருந்தார். பின்னர் பக்தி காலத்தில் ஞான நெறியை ஸ்தாபித்த கபீர்தாஸ் அவர்களும், இந்நெறியைப் பின்பற்றிய 'சந்த்' என்று கூறப்பட்ட மற்ற சாதுக்களும் இதே மொழியில் தான் தங்களுடைய உபதேசங்களைக் கூறி வந்தார்கள். இச்சாதுக்கள் பெரிதும் நாட்டின் பலபகுதிகளிலும் யாத்திரை செய்த வண்ணமிருந்ததால் இவர்கள் ஆங்காங்கே பேசப்பட்டு வந்த மொழிகளிலிருந்து தங்களுக்கு உபயோக மான சொற்களை ஏற்றுத் தங்கள் உபதேச மொழிகளைக் கூறிவந்தார்கள். ஆகையினால் 'சந்த் வாணீ' என்று கூறப்பட்ட அவர்களுடைய உபதேச மொழிகளின் பாஷை 'சதுக்கடீ', அதாவது சாதுக்களுடைய பாஷை என்று கூறப்பட்டது. ஆனால் அவர்களுடைய மொழியில் 'கடீ போலீ'யின் லக்ஷணங்களையே பெருமளவு நாம் காண்கிறோம். பக்தி காலத்தின் இறுதிக்குள்ளாக மற்றெல்லா மொழிகளையும்விட நன்கு வளர்ச்சி பெற்று விரஜ பாஷை காப்பியத்துறையில் தனியரசு புரிய ஆரம்பித்தது. அவ்வப்பொழுது சில உரைநடை நூல்களே கடீ போலீயில் விரஜ பாஷையே இலக்கிய மொழி யாகத் திகழ்ந்தது. புத்துணர்ச்சிக் கால ஆரம்பத்தில் அரசியல், சமூகச் சூழ்நிலையாக ஏற்றுகொள்ளப்பட்டது. ஆகவே இக் காலத்தில் உரைநடை இலக்கியத்தில் ஏற்பட்ட வியக்கத்தக்க வளர்ச்சியை மொழியின் வளர்ச்சிக்கும் காரணமாக அமைந்தது.

முகலாய ஆட்சி முறிந்து தில்லியில் ஆங்கில ஆட்சி அமைந்த உடன் பாதுஷாக்களையும், ஸுல்தான்களையும், ஏனைய சிற்றரசர்களையும், அண்டி வாழ்ந்த கவிகள்

பிழைப்பை நாடி நாட்டின் பல்வேறு பாகங்களிலும் சென்று குடியேற ஆரம்பித்தார்கள். வடநாட்டு வியாபாரிகளும் பல இடங்களிலும் பரவத் தொடங்கினார்கள். இக்கவிகளும், வியாபாரிகளும் நாட்டின் மத்தியப் பகுதியான தில்லியிலிருந்து பரவி ஏனைய பாகங்களில் சென்று குடியேறியதால் அவ்விடத்து மொழியான 'கடீ போலீ'யும் நாடெங்கும் பரவி நாட்டிற்கு ஒரு பொது மொழியாக விளங்கத் தொடங்கியது. முகலாய ஆட்சியில் பாரசீக மொழியே அரசாங்க மொழியாகவும், நீதிமன்ற மொழியாகவும் திகழ்ந்து வந்தது. இதே காலத்தில் 'அரபீ' பார்ஸீ சொற்கள் கடீ போலீயில் பெரிதும் கலந்து 'உருது' என்ற மொழியாக வளர்ச்சி பெற்றதோடு இப்புதுமொழி முகம்மதிய அரசர்களின் ஆதரவைப் பெற்றுக் கொஞ்சங் கொஞ்சமாக பாரசீக மொழியை நீக்கவிட்டு அரசாங்க மொழியாக அரியாசனம் ஏறியது. ஆனாலும் கடீ போலீ ஹிந்தியே மக்களிடையே பெருவழிக்குப் பெற்று விளங்கியது.

இந்நிலையில் ஆங்கிலேயர் ஆட்சிக்கு வந்ததும் முதலில் உருது மொழியையே ஆட்சி மொழியாக ஏற்றுக் கொண்ட போதிலும் மக்களின் மொழியாகத் திகழ்ந்த கடீ போலீ ஹிந்தியைக் கற்க வேண்டிய தேவையையும் உணர்ந்தார்கள். ஆகவே கல்விக் கூடங்களில் உருது மொழியோடு (கடீ போலீ) ஹிந்தியையும் கற்பிக்க ஏற்பாடு செய்தார்கள். இதே காலத்தில் கிறிஸ்தவப் பாதிரிமார்களும் மக்களின் மொழியான (கடீ போலீ) ஹிந்தியிலேயே தங்கள் மதத்தைப் பிரச்சாரம் செய்ய ஆரம்பித்தார்கள். இவ்வாறு ஹிந்தி (கடீ போலீ)யின் பெரு வளர்ச்சிக்குக் காரணமாயிருந்த ஆங்கிலேயர் கிறிஸ்தவப் பாதிரியான வில்லியம் கேரே என்பவரும், போர்ட் வில்லியம் காலேஜின் தலைவரான ஜான் கில்கிரைஸ்ட் என்பவருமாவர். இத்துறையில் ஜான் கில்கிரைஸ்ட் அவர்களின் பணி பெரிதும் போற்றத்தக்கதாகும்.

ஜான் கில்கிரைஸ்ட் அவர்கள் போர்ட் வில்லியம் காலேஜின் சார்பாக ஆங்கில அதிகாரிகளுக்கு உருது மொழி யோடு ஹிந்தியும் கற்பிக்க ஏற்பாடு செய்ததோடு லல்லுலால், ஸதல்மிஷ்ர போன்ற பண்டிதர்களுக்கு ஹிந்தியில் உரை நடை நூல்கள் எழுத ஊக்கமளித்து வந்தார். இதே காலத்தில் முன்ஷீ ஸதாஸுக லால், இன்ஷா அல்லாகான் போன்ற ஒரு சிலரும் தனித்த முறையில் உரை நாட நூல்களை ஹிந்தியில் எழுத ஆரம்பித்தார்கள். இதற்கு முன் கி.பி. 1751–ல் இராமப்பிரஸாத் நிரஞ்சனீ என்பவர் 'பாஷா யோக வாசிஷிட' என்ற நூலை உரைநடையில் எழுதியிருந்தார். பின்னர் கி.பி. 1761–ல் தௌலத் ராம் என்பவர் ஜைன பத்ம புராணத்தை ஹிந்தி உரைநடையில் மொழி பெயர்த்திருந்தார். ஆனாலும் கி.பி. 1800 முதலே ஹிந்தி உரைநடை இலக்கியத்தின் ஆரம்ப காலமாக நாம் கொள்ளுகிறோம். காலக் கிரமத்தில் இத்துறையில் தோன்றிய எழுத்தாளர்களைப் பற்றிக் கீழே காண்போம்.

முன்ஷீ ஸதா ஸுக லால் – (கி.பி. 1746 – 1824): தில்லியைச் சேர்ந்த இவர் கம்பெனி சர்க்காரில் மிர்ஜாபூரைச் சேர்ந்த சுனார் என்ற இடத்தில் உயர் பதவியிலிருந்து வந்தார். வடமொழியோடு உருது, பார்ஸீ மொழிகளிலும் தேர்ச்சி பெற்றுவிளங்கியதோடு இம்மொழிகளில் பல நூல்களையும் எழுதியுள்ளார். இவர் சிறந்த கவியாகவும் திகழ்ந்தார். பார்ஸீ மொழியில் இவர் எழுதியுள்ள 'முன் தக் பக்த வாரீக்' என்ற நூலிலிருந்து இவர் தம் அறுபத்தைந்தாவது வயதில் ஒய்வு பெற்று எஞ்சியுள்ள வாழ் நாட்களை பிரயாகையில் தங்கிருந்து தெய்வ வழிபாட்டில் கழிந்து வந்தார் என்று அறிகின்றோம். இக்காலத்தில் தான் இவர் விஷ்ணு புராணத்திலிருந்து பல உபதேசமொழிகளைத் தொகுத்து ஹிந்தி உரை நடையில் வரைந்தார். ஆங்கில அதிகாரிகளின் தூண்டுதலின்றித் தன் உளமகிழ்ச்சிக்காகவே இந்நூலை இவர் எழுதினார். வட மொழிச்சொற்கள் பெரிதும் கலந்த இவருடைய பண்பட்ட

நடை ஹிந்தியின் வருங்கால உருவிற்கு வழி வகுப்பதாக அமைந்துள்ளது.

இன்ஷா அல்லாகான் : இவர் இரண்டாவவது ஷாஹ் ஆலமின் தர்பாரில் உருது கவியாகச் சிறந்து விளங்கினார். குலாம் காதிர் தில்லியை அழித்துச் சென்ற பின் இவர் லக்னௌ சென்று குடியேறினார். பின்னர் கி.பி. 1798–ல் ஸஆதத் அலிகான் அறியணை ஏறியதும் அவருடைய தர்பாரில் பெருமதிப்புப் பெற்று இருந்த வந்தார். ஆனால் கடைசிக் காலத்தில் தம்முடைய விளையாட்டான சிறு பரிஹாஸ மொழியினால் பதவியிழந்து மிக்கக் கஷ்டத்தில் தன் வாழ்நாட்களைத் கழித்த கி.பி. 1818–ல் உயிர் துறந்தார். இவர் ஹிந்தியில் 'உதயபான் சரித்திர' 'ராணீ கேதகீ கீ கஹானீ' என்ற நூலை எழுதியிருக்கின்றார். இவர் முகம்மதியராக இருந்த போதிலும் அரபீ, பார்ஸீ சொற்களைச் சற்றும் கலக்காமல் சுத்தமான ஹிந்தியில் இந்நூலை எழுதியுள்ளார். ஆனால் வாக்கிய அமைப்பில் பார்ஸீ மொழியின் தன்மை மலிந்து காண்கின்றது. அடுக்கு மொழியில் அமைந்த இவருடைய நடை மிக்க விறுவிறுப்பாக உள்ளது.

லல்லூலால் (கி.பி. 1773–1825) : இவர் ஜான் கில்கிரைஸ்ட் அவர்களின் கட்டளையை ஏற்று ஹிந்தியில் 'பிரேம ஸாகர்' என்றநூலை கி.பி.1803–ல் எழுதினார். இந்நூலில் பாகவதத்தின் பத்தாவது காண்டத்தின் கதை வருணிக்கப்பட்டிருக்கிறது. அரபீ, பார்ஸீ சொற்கள் அதிகம் கலக்கப்படாவிட்டாலும் கதை சொல்லும் பண்டிதர்களின் பாஷையைப் போல் இவர் நடை அமைந்துள்ளது. ஸிம்ஹாஸன் பத்தீஸீ, வைதால் பச்சீஸீ, சகுந்தலா நாடக், மாகோனல் என்ற நான்கு நூல்கள் உருது மொழியிலும், ஹிதோபதேசக் கதைகளைச் தொகுத்து 'ராஜநீதி' என்ற நூல் விரஜ பாஷையிலும் இவர் எழுதியுள்ளார். மேலும் சமஸ்கிருத பிரஸ் என்ற பெயரில் ஆக்ராவில் ஒரு அச்சு யந்திரச் சாலையை அமைத்து இராமாயணம் மற்றும் பல பழைய புத்தகங்கள் அச்சிட்டு வந்தார்.

சதல் மிஷ்ர : பீஹாரைச் சேர்ந்த இவர் லல்லூலாலைப் போலவே போர்ட் வில்லியம் காலேஜில் பணியாற்றி வந்தார். ஹிந்தியில் இவர் எழுதிய நூல் 'நாஸிகேதோபாக்யான்' என்பதாகும். இவருடைய பாஷை பண்டிதர்களின் பாஷையாக இல்லாமல் எளிய நடையில் அமைந்துள்ளது.

உரைநடை இலக்கியத்தின் வளர்ச்சியில் மேலே கூறப் பட்டவர்களேயன்றி வில்லியம் கேரே போன்ற கிறிஸ்தவப் பாதிரிமார்களும், இராஜா ராம்மோஹன்ராய், ஸ்வாமி தயானந்த சரஸ்வதீ போன்ற ஹிந்து மதத் தலைவர்களும் பெரும் பங்கு கொண்டார்கள். பாதிரிமார்கள் ஹிந்தியின் மூலமாகவோ தங்கள் மதத்தைப் பிரச்சாரம் செய்து வந்தார்கள் என்பதை நாம் முன்பே கண்டோம். பிரச்சார நோக்கத்தோடு இவர்கள் தங்கள் மத நூலான பைபிளை ஹிந்தியில் மொழி பெயர்த்ததோடு மேலும் பல மத சம்பந்தமான நூல்களையும் வெளியிட்டார்கள். பல்வேறு இடங்களிலும் கல்விக் கூடங்கள் நிறுவி பலவிதமான பாடப் புத்தகங்களும் ஹிந்தியில் வெளியிட்டனர். இதற்காக ஸ்ரீராம்பூர், மிர்ஜாபூர் போன்ற இடங்களில் அச்சு யந்திரச் சாலைகள் நிறுவியதோடு ஆக்ராவிலும் கல்கத்தாவிலும் 'ஸ்கூல் புக் ஸொஸைடீ' என்ற கழகத்தையும் அமைத்தார்கள். இக்கழகத்தால் வெளியிடப் பட்ட முக்கியமான நூல் ரதன்லால் அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட இங்கிலாந்தின் வரலாற்று நூலான 'கதாஸார்' என்பதாகும். இதே போன்று 'பூகோல்ஸார்' 'ரஸாயனப்ரகாஷ்' மற்றும் பல புத்தகங்கள் இக்காலத்தில் வெளியிடபட்டன.

இவ்வாறு நாட்டில் சிறிஸ்தவ மதப் பிரச்சாரம் நடப்பதைக் கண்ட ஹிந்து மதத் தலைவர்கள் வேதங்களின் பெருமையை எடுத்துக்கூறி மக்கள் மனத்தில் நம்பிக்கையை ஏற்படுத்துவதற்கு விழைந்தார்கள். ராம் மோஹன்ராவ் அவர்கள் பிரம்ம ஸமாஜத்தை நிறுவியதோடு கி.பி. 1815–ல் வேதாந்த சூத்திரங்களுக்கு ஹிந்தியில் விரிவுரை எழுதி வெளியிட்டார். இவர் கி.பி. 1892–ல் 'வங்கதூத்' என்ற செய்தித்

தானும் வெளியிட்டார். தயானந்த சரஸ்வதி ஆர்ய ஸமாஜத்தை தம் தாய்மொழி குஜராத்தியாக இருந்த போதிலும் ஹிந்தியில் தம்முடைய நூல்களை இயற்றினார். இவர் எழுதிய முக்கியமான நூல் ஸத்யார்த்த ப்ரகாஷ் என்பதாகும். வேதங்களின் விரிவுரையும் வடமொழியோடு ஹிந்தியிலும் எழுதியுள்ளார்.

இராஜா சிவப்ரஸாத் 'ஸிதாரே ஹிந்த்' (கி.பி. 1823–1863) ஹிந்தியின் வளர்ச்சிக்கு வழி வகுத்தவர்கள் மதத்தலைவர்கள் மட்டுமல்ல, கல்வித் துறையில் சீர்திருத்தத்தைக் காண விழைந்த சமூகத் தலைவர்களுமாவர். இவர்களில் முக்கிய மானவர் இராஜா சிவப்ரஸாத் 'ஸிதாரே ஹிந்த்' ஆவார். இவர் கல்வி இலாகாவின் தலைவராகவந்த உடன் முகம்மதியர்களின் கடுமையான எதிர்பிற்கிடையேயும் பள்ளிகளில் உருது மொழியோடு ஹிந்திக்கும் இடம் கிடைக்க வகை செய்தார். ஹிந்தியில் பாடப் புத்தகங்கள் தாமே எழுதியதோடு பிறரைக் கொண்டும் எழுதும்படியாகச் செய்தார். ஹிந்தியைப் பரப்புவதற்காகவே 'பனாரஸ் அக்பார்' என்ற பத்திரிகையும் இவர் வெளியிட்டார். இவருடைய மொழி அரபீ, பார்ஸீ சொற்கள் பெரிதும் கலந்து நாகரீ எழுத்தில் எழுதப்பட்ட உருது என்று கூறத்தக்க முறையிலேயே அமைந்திருந்தது. ஆனாலும் 'ராஜா போஜ் கா ஸப்னா' என்ற இவருடைய நூல் இதற்கு விலக்காக உள்ளது. இந்நூலில் இவருடைய நடைவேற்று மொழிச்சொற்களின் கலப்பற்று விளங்குவதோடு இருவித நடைகளிலும் எழுதக்கூடிய இவருடைய திறமையை எடுத்துக்காட்டுவதாகவும் அமைந்துள்ளது.

இராஜா இலக்ஷ்மண சிங் (கி.பி. 1830–1899) : இவர் ஹிந்து பண்பாட்டில் ஊறித் திளைத்தவர். ஹிந்தியில் அரபி, பார்ஸீ சொற்கள் கலப்பதை இவர் கடுமையாக எதிர்த்து வந்தார். ஹிந்தியை ஹிந்துக்களுடைய மொழியாகவும், உருதுவை முகம்மதியர்களுடைய மொழியாகவும் இவர் கருதி வந்ததோடு ஹிந்தியில் வடமொழிச் சொற்களைப்

பெருவாரியாகக் கலப்பதை ஆதரித்து வந்தார். மகாகவி காளிதாஸின் காப்பியங்களை இவர் ஹிந்தியில் மொழி பெயர்த்துள்ளார். அவற்றுள் சகுந்தலா நாடகம் பிரசித்தி பெற்றதாகும். இவர் 'பிரஜா ஹிதைஷீ' என்ற பத்திரிகையையும் நடத்தி வந்தார்.

பாரதேந்து ஹரிச்சந்திரா (கி.பி. 1850–1884) : ஹிந்தி இலக்கியத்திலே ஒரு புது யுகத்தைத் தோற்றுவித்தார் இவர். காசியில் செல்வம் செறிந்த ஒரு வைசிய குலத்தில் தோன்றிய இவர் முப்பத்திஐந்து ஆண்டுகளே நிரம்பிய தம் வாழ்க்கையின் மிக குறுகிய காலத்தில் ஹிந்தி இலக்கியத்திற்குப் புரிந்துள்ள தொண்டு அளவிடற்கரியது. காப்பியத் துறையிலே இவர் எவ்வாறு புத்துணர்ச்சி இலக்கியத்தைத் தோற்றுவித்தார் என்பதை நாம் காப்பியப் பகுதியில் கண்டோம். உரைநடை இலக்கியத்திற்கும் புத்துயிரூட்டி அதை வளம்பெறச் செய்தார் இவர். தம்முடைய கவிதைகளைப் பழைய காப்பிய மொழியான விரஜ பாஷையிலேயே இயற்றியபோதிலும் உரைநடையில் இவர் கடீபோலீ ஹிந்தியையே ஏற்று அதைப் புதிய இலக்கியப் பொலிவு பெற்று மிளிரச் செய்தார். முதன் முதலாக கி.பி. 1868–ல் இவர் 'வித்யா ஸுந்தர்' என்ற நாடகத்தை வங்க இலக்கியத்திலிருந்து மொழி பெயர்த்தார். இதன் பின்னர் ஒன்றன்பின் ஒன்றாக புராண, சமூக, சரித்திர சம்பந்தமான பல நாடகங்களை இவர் எழுதினார். அவை பின்வருமாறு: 'வைதிகீ ஹிம்ஸா ஹிம்ஸா ந பவதி, சந்திராவலி, விஷஸ்ய விஷமௌஷதம், பாரத் துர்தஷா, நீலதேவீ, அந்தேர் நகரீ, ப்ரேம ஜோகினீ, ஸதீ பிரதாப் (பூர்த்தியடையவில்லை) பாகண்ட விடம்பன், தனஞ்செய விஜய், கர்ப்பூர மஞ்சரீ, முத்ரா ராக்ஷஸ், ஸத்ய ஹரிச்சந்திரா, பாரத் ஜனனீ' இவற்றுள் பின் கூறப்பட்ட ஆறு நாடகங்களும் மொழி பெயர்ப்பாகும். தம்முடைய நாடகங்களில் இவர் தேசீய உணர்வையும், சமூகச் சீர்த்திருத்தக் கருத்துக்களையும் புகுத்தியிருக்கின்றார். இவருடைய நூல்களில் நாட்டின் அவலநிலை கண்டு பதை

பதைக்கும் உள்ளத்தின் ஆழ்ந்த வேதனையைக் காண்கின்றோம். மேலும் இவருடைய கேலிச்சித்திரங்கள் உள்ளத்தைத் தொடுவனவாக அமைந்துள்ளன. காஷ்மீர் குஸும், பாத்ஷாஹ் தர்ப்பண் இரு நூல்களும் இவர் தீட்டிய வரலாற்று நூல்களாகும்.

பாரதேந்து அவர்கள் கி.பி. 1868–ல் 'கவிவசன ஸுதா' என்ற பத்திரிகையை ஆரம்பித்தார். இப்பத்திரிகையில் முதலில் கவிதைகள் மட்டும் வெளிவந்த போதிலும் பின்னர் உரைநடையில் பல கட்டுரைகளும் வெளிவர ஆரம்பித்தன. கி.பி. 1873–ல் ஹரிச்சந்திர மைகஸீன் என்ற பெயரில் இவர் ஆரம்பித்த பத்திரிகை சின் நாட்களிலேயே 'ஹரிச்சந்திர சந்திரிகா' என்று பெயரில் வெளிவர ஆரம்பித்தது. பெண்களுக்காக இவர் 'பால போதினீ' என்ற பத்திரிகையையும் நடத்தி வந்தார். இவ்வாறு மூன்று பத்திரிகைகளுக்கு ஆசிரியராக இருந்து தன் ஒப்பற்ற திறமையைக் காட்டியுள்ளார். இவர் தம் பத்திரிகைகளின் வாயிலாகப் பல எழுத்தாளர்களுக்கு ஊக்கமளித்து வந்தார். இவருடைய காலத்தில் திகழ்ந்த உரைநடை எழுத்தாளர்களைப் பற்றிச் சுருக்கமாக அறிவோம்.

பிரதாப் நாராயண் மிஷ்ர (கி.பி. 1856 – 1891) : இவர் சிறந்த கட்டுரை எழுத்தாளராகத் திகழ்ந்தார். நாட்டின் நிலை, சமூகச் சீர்திருத்தம், நாகரீ – ஹிந்தி பிரச்சாரம், மற்றும் பல விஷயங்களைப் பற்றி இவர் கட்டுரைகள் வரைந்துள்ளார். தன்னுடைய கட்டுரையை வெளியிடுவதற்காகவே இவர் 'பிராம்மண்' என்ற பத்திரிகையையும் நடத்தி வந்தார். இவருடைய நடைபெரிதும் ஹாஸ்யம் கலந்து விருவிருப்பாக அமைந்துள்ளது. கட்டுரைகளே யன்றி இவர் கீழ்க்கண்ட நாடகங்களும் எழுதியுள்ளார்: கலி கௌதுக ரூபக், 'ஸங்கீத் சாகுந்தல் (இது லாவணி நடையில் எழுதப்பட்ட சங்கீத நாடகமாகும்), பாரத் துர்தஷா, ஹட ஹம்மீர், கோஸங்கட நாடக், கலிப்ரபால் நாடக், ஜுஆரீ குஆரீ ஆகியவையாகும்.

**பாலகிருஷ்ணபட்ட (கி.பி. 1844 – 1914) :** இவர் கி.பி. 1876–ல் 'ஹிந்தி ப்ரதீப்' என்ற பத்திரிகையை வெளியிட்டு அதன் வாயிலாகப்பல கட்டுரைகளை வரைந்தார். ஆங்காங்கே பழமொழிகள் மலிந்து இவருடைய நடை கவர்ச்சிகரமாக அமைந்துள்ளது. அரபீ, பார்ஸீ சொற்களை இவர் தாராளமாக உபயோகித்துள்ளார். கண், காது, மூக்கு போன்ற தலைப்புகளில் இவருடைய கட்டுரைகள் விசித்திரமாகக் காண்கின்றன. பெரிதும் இவர் சமூகம், இலக்கியம், அரசியல், ஒழுக்கம் சம்பந்தமான கட்டுரைகளே எழுதி வந்தார். இவர் சில நாடகங்களையும் எழுதியுள்ளார். அவை பின்வருமாறு:– கவிராஜ் கீ ஸபர், ரேல்கா விகட் கேல், பால் விவாஹ நாடக், சந்திரஸேன் நாடக், பத்மாவதி, சர்மிஷ்டா. கடைசி இரு நூல்களும் வங்கமொழியில் மைகேல் மதுஸுதன் தீட்டிய நாடகங்களின் மொழி பெயர்ப்பாகும். மேலும் இவர் லாலா ஸ்ரீனிவாஸ் அவர்களின் 'ஸம்யோகிதா ஸ்வயம்வர்' என்ற நாடகத்தைப் பற்றி 'ஸச்சீ ஸமாலோசனா' என்ற தலைப்பில் விமர்சனம் எழுதி வெளியிட்டார். ஒழுங்கான முறையில் விமர்சன நூல் எழுதும் பரம்பரையை ஆரம்பித்து வைத்தவர் இவரேயாவார்.

**பத்ரீ நாராயண் செளத்ரீ 'ப்ரேம்கன்' (கி.பி. 1855–1952):–** மிர்ஸாபூரைச் சேர்ந்த ஓர் உயர்ந்த பிராமண வம்சத்தில் தோன்றிய இவர் பாரதேந்து அவர்களின் நெருங்கிய நண்பர்களுள் ஒருவராவார். இவர் கட்டுரை எழுதுவதை ஒரு கலையாகக் கருதியதோடு அலங்காரமான நடையில் ஆர்வங்கொண்டவர். அடுக்கடுக்காக அமைந்த சொற்றொடர்களைக் கொண்ட இவருடைய நீண்ட வாக்கியங்கள் படிப்போரைத் திணரச் செய்யும் வகையில் அமைந்துள்ளன. அடுக்குச் சொற்களின் மீதும், சொற்களை விசித்திரமாக அமைப்பதிலும் இவர் பெரிதும் கவனம் செலுத்தி வந்தார். இவருடைய கட்டுரைகளில் பொருட்செறிவும், நுண்ணிய கருத்துக்களும்நுகர்ந்து மகிழத்தக்கன. இவர் பல நாடகங்களை

எழுதியுள்ளார். 'பாரத் ஸௌபாக்ய' என்ற இவருடைய நாடகம் பாத்திரங்களின் பெருக்கம், பாத்திரங்களுடையவும் அவர்கள் பேசும் மொழியினுடையவும் பலதரப்பட்ட தன்மை ஆகிய வற்றின் காரணமாக நடிப்பதற்கு எளியதாக அமையவில்லை. 'ப்ரயாக் ராமாகமன்', 'வாராங்கனா ரஹஸ்ய மகாநாடக்' என்ற நாடகங்களையும் இவர் எழுதியுள்ளார். 'ஆனந்த காதம்பினி' 'நாகரீநீரத்' (வார இதழ்) என்பவை இவர் வெளியிட்டு வந்த பத்திரிகைகளாகும்.

'ப்ரேம்கன்' அவர்கள் பாாலகிருஷ்ண பட்ட அவர்களைப் போலவே 'ஸம்யோகிதா ஸ்வயம்வர்' என்ற நாடகத்திற்கு விரிவான முறையில் விமர்சனம் எழுதியுள்ளார். பாபூ கதாதர் சிங் அவர்களின் 'வங்க விஜேதா' என்ற மொழி பெயர்ப்பு நூலைப் பற்றி இவர் எழுதியுள்ள விமர்சனமும் சிறப்பாக அமைந்துள்ளது.

லாலா ஸ்ரீனிவாஸ தாஸ் (கி.பி. 1831–1883) : இவர் பல நாடகங்களை எழுதியுள்ளார். அவற்றுள் 'ரணதீர் ஔர் ப்ரேம மோஹினி' என்ற நூல் மிகப் பிரசித்தி பெற்றதாகும். இந்நூல் 'ரோமியோ அண்டு ஜூலியட்' என்ற ஆங்கில நூலைத் தழுவி எழுதப்பட்டதாகத் தெரிகிறது. ஆங்கில நாடகப் பரம்பரையை ஒட்டி இது துக்கத்தில் முடிந்துள்ளது. இவர் கடைசியாக எழுதிய நாடகம் 'ஸம்யோகிதா ஸ்வயம்வர்' என்பதாகும். இது பிருத்வீராஜ் ஸம்யோகிதையைக் கவர்ந்து செல்லும் நிகழ்ச்சியை ஆதாரமாகக் கொண்டது. இவருடைய ஏனைய நாடகங்கள் 'பிரஹ்லாத சரித்ர', 'தப்தா ஸம்வரண்' என்பவையாகும். மேலும் இவர் 'பரீக்ஷா குரு' என்ற நாவலையும் எழுதியுள்ளோர்.

டாகுர் ஜகமோஹன் சிங் (கி.பி. 1857–1899) : இவர் வடமொழி, ஆங்கிலம் இவற்றில் நன்கு தேர்ச்சி பெற்று ஹிந்தியிலும் சிறந்த கவியாக விளங்கியதோடு இயற்கையின்

வனப்பைச் சிறந்த முறையில் சித்தரிக்கும் உரைநடை எழுத்தாளராகவும் விளங்கினார். இவருடைய நடையில் இனிமையும், கற்பனையில் கவர்ச்சியும் மிளிர்கின்றன. இயற்கையின் பல்வேறு காட்சிகளையும் உணர்ச்சி ததும்பச் சித்தரித்த முதல் எழுத்தாளர் இவரேயாவார்.

ராதாசரண் கோஸ்வாமி (கி.பி. 1858–1925) : இவர் வடமொழியில் சிறந்த வித்வானாகத் திகழ்ந்தார். ஸுதாமா நாடக், ஸதீ சந்திராவலீ, அமர்சிங் ராடௌர' முதலிய பல சிறந்த நாடகங்களை இவர் எழுதியுள்ளார்.

ஸதீ சந்திராவலீ என்ற நாடகம் ஔரங்கஜேப்பின் காலத்தில் ஹிந்துக்களுக்கு இழைக்கப்பட்டு வந்த கொடுமைகளையும், அநீதிகளையும் சித்தரிக்கிறது. இவர் வங்க இலக்கியத்திலிருந்து 'விரஜா', 'ஜாவித்ரீ', 'ம்ருண்மயீ', என்ற நாவல்களை மொழி பெயர்த்திருக்கின்றார். 'பாரதேந்து' என்ற பத்திரிகையும் இவர் சிலகாலம் நடத்தி வந்தார்.

அம்பிகாதத்த வ்யாஸ் (கி.பி. 1858 –1900) : இவர் வடமொழியில் சிறந்த வித்வானாக திகழ்ந்தோடு ஹிந்தியில் சிறந்த கவியாகவும் விளங்கினார். 'அவதார மீமாம்ஸா' போன்ற பல மத சம்பந்தமான நூல்களும், 'கத்ய காவ்ய மீமாம்ஸா' முதலிய பல உரைநடை நூல்களும் எழுதியுள்ளார்.

இராதாகிருஷ்ண தாஸ் : (கி.பி. 1865 –1907) : 'மகாராணா ப்ரதாப்' என்ற மிகச் சிறந்த நாடகத்தை இவர் எழுதியுள்ளார். இந்நாடகம் பலமுறை பல இடங்களிலும் நடிக்கப்பட்டு மக்களால் பெரிதும் போற்றப்பட்டது. பாரதப் பரம்பரையை ஒட்டி இந்நாடகத்தின் பாத்திரங்கள் ஆதர்சம் கொள்கைத்துணிவு என்ற அச்சில் வார்த்தெடுக்ககப்பட்டிருக் கின்றார்கள். இவர் எழுதிய ஏனைய நாடகங்கள் 'துக்கினீ பாலா', 'மகாரானீ பத்மாவதீ' என்பவையாகும்.

இக்காலத்தில் மேலும் பல எழுத்தாளர்கள் தோன்றி ஹிந்தி இலக்கியத்தை வளம்பெறச் செய்திருக்கின்றார்கள். மேலும் இக்காலத்தில் அரசியலிலும் சமூகத்திலும் ஹிந்திக்கு முக்கியமான ஸ்தானத்தைக் கொடுப்பதற்காகத் தீவிர முயற்சிகள் செய்யப்பட்டன. கி.பி. 1893–ல் பாபூ சியாம ஸுந்தர தாஸ், ராம் நாராயண் மிஷ்ர, சிவகுமார் சிங் போன்ற பல வித்வான்களின் முயற்சியினால் 'காசீ நாகரீ ப்ரசாரிணீஸபா' நிறுவப்பட்டது. இச்சபையின் சார்பாக இலக்கியத் துறையில் பழைய நூல்களைப் பற்றிய ஆராய்ச்சி தீவிரமாக நடைபெற்றதோடு புதிய நூல்களும் வெளியிடப்பட்டன. இச்சபையை முன்னேற்றத்தின் உன்னத நிலையை அடையும்படிச் செய்த பெருமை பாபூ சியாம ஸுந்தரதாஸ் அவர்களையே சாரும். நாகரீ–ஹிந்தி பிரச்சாரத்தில் கௌரீதத்த அவர்களின் பணியும் குறிப்பிடத்தக்கதாகும். அரசாங்கக் காரியாலயங்களிலும், நீதிமன்றங்களிலும் ஹிந்திக்குத் தக்க இடம் கிடைக்கச் செய்வதில் மஹாமனா பண்டித் மதன்மோஹன், மாலவீய அவர்களின் தலைமையில் வெற்றி கிட்டியது. இவ்வெற்றிச் சூழ்நிலையிலேயே கி.பி. 1900–ஆம் ஆண்டில் 'சரஸ்வதீ' பத்திரிகையின் ஆசிரியர் பதவியை ஏற்று பண்டித் மஹாவீர் த்விவேதீ அவர்கள் ஹிந்தி இலக்கியத்தில் புது யுகத்தைத் தோற்றுவித்தார்.



# த்விவேதீ காலம்

பண்டித் மஹாவீர் பிரஸாத் த்விவேதீயின் காலத்திலே ஹிந்தி உரைநடை இலக்கியம் நன்கே வளமை பெற்றது. இவருடைய காலத்தில் கட்டுரை இலக்கியத்தின் வளர்ச்சி அதிகமாகக் காணப்பட்டாலும் கதை இலக்கியமும் வளர்ச்சியடைந்தது. இக்காலத்திய கட்டுரை எழுத்தாளர்களும் கீழ்க்கண்டவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள்.

பண்டித் மஹாவீர் பிரஸாத் த்விவேதீ : ஒரு கட்டுரை எழுத்தாளராக இவர் நம் முன் பல உருவங்களில் தோன்றுகின்றார். வர்ணனைகள் கொண்ட கட்டுரைகள், எண்ணக் குவியல் நிறைந்திருக்கும் கட்டுரைகள், கேலி வருணனைகள் கொண்ட கட்டுரைகள் இவர் இயற்றியுள்ளார். இவருடைய மொழியிலே எளிமையில்லாவிட்டாலும் பழக்கப்பட்ட சொற்களையே உபயோகித்துள்ளார். இலக்கணப் பிழையற்ற மொழிக்கு ஒரு எடுத்துக்காட்டாக விளங்குகின்றன இவர் கட்டுரைகள். இவருடைய கேலிச் சித்திரங்கள் இதயத்தைத் தொடும் வகையில் அமைந்துள்ளன.

பத்மசிங் சர்மா இவரது கட்டுரையின் நடை ஹிந்தி இலக்கியத்தில் மிகவும் பிரசித்தி பெற்றது. பிஹாரீலாலின் சத்ஸயீக்கு இவர் விரிவுரையெழுதியுள்ளார். வருணிக்க வேண்டிய விஷயத்தின் சூட்சுமமான இயல்புகளையும் இவர் நன்கே விளக்கியுள்ளார்.

ராமச்சந்திர சுக்ல : இவர் ஹிந்தியின் மிகச் சிறந்த கட்டுரையெழுத்தாளராகக் கருதப்படுகின்றவர். ஹிந்தி இலக்கியத்தின் முதல் வரலாற்று நூலை இயற்றிய பெருமை இவரைச் சாருகின்றது. இவருடைய கட்டுரைகள்தான் முதன்முதலில் எண்ணத்தில் கோர்வான ஓட்டத்திற்கு எடுத்துக்காட்டாக விளங்கின. சிக்கலான நடை இவருடைய கட்டுரைகளில் காணப்பட்டாலும் எளிதிலே நமது மனதில்

பிரபாவத்தை உண்டு பண்ணி விடுகின்றன. கட்டுரை என்பதை உயிரற்ற வருணனைக் கோர்வையாக மட்டும் ஆக்காமல் உயிர்த் துடிப்பு நிரம்பப் பெற்ற உணர்ச்சிக் குவியலாக நம் முன் கொண்டு நிறுத்திகின்றார். 'சிந்தாமணி' என்ற இவரது கட்டுரை நூல் நவரஸங்களைப் பற்றியும், மனிதனின் உள்ளத்திடை ஊற்றெடுக்கும் உணர்ச்சிகளைப் பற்றியும் விரிவாக விளக்குகின்றது.

ஷ்யாம சுந்தர் தாஸ் : இவரது கட்டுரைகள் ஆழ்ந்த அறிவிற்கும், சிக்கலற்ற மனநிலைக்கும் எடுத்துக்காட்டாக விளங்குகின்றன. கோர்வையற்ற சிதறிப்போன எண்ணங்களை வெளியிட்டுப் படிப்பவர்களைக் குழப்பும் இயல்பு இவர் பெறவில்லை. இவருடைய கட்டுரைகளில் தெளிவான, பக்குவமடைந்த எண்ணங்களையே நாம் காணுகின்றோம்.

த்விவேதீ காலத்தில் இயற்றப்பட்ட நாடகங்கள் பொது வாகத் தழுவியெழுதப்பட்ட நாடகங்களாகவே காண்கின் றோம். ஆகவே அவைகளைப் பற்றி விரிவாகக் கூற நாம் இங்கு முற்படவில்லை.

இக்காலத்திய கதை இலக்கியமும் வளர்ச்சியின் தளர்நடைப் பருவத்தில் இருந்தமையால் அதைப்பற்றியும் இங்கு விரிவாகக் கூறப்படவில்லை.



# பிரஸாத்—பிரேம்சந்த் காலம்

உரைநடை இலக்கியத்தின் உயிர் நாடியாகக் கருதப்படும் நாடக இலக்கியமும் கதையிலக்கியமும் முன்னென்றும் காணாத வளர்ச்சியைடைந்த காலத்தைத்தான் நாம் பிரஸாத்–பிரேம் சந்த் காலம் என்று கொள்கின்றோம். பிரஸாத், பிரேம்சந்த் ஆகிய இருவரும் தற்கால ஹிந்தி இலக்கியத்தின் மாபெரும் கருவூலங்களாக விளங்குகின்றனர். பிரஸாத் தற்கால நாடக இலக்கியத்தைத் தோற்றுவித்து அதற்குத் தனிச் சிறப்பும் வளமையும் ஈன்றுச்சென்றார். பிரேம்சந்தோவெனில் இலக்கியம் வளர்ந்தெழுவதற்கு நிலைக்களனாக உதவும் மக்களையும் சமுதாயத்தையும் படம் பிடித்துக் காண்பித்துச் சென்றார். தற்கால உரைநடை இலக்கியத்தின் சிறப்பியல்புகளை விளக்கும் வகையிலும், வளர்க்கும் வகையிலும் இந்த இருவர் புரிந்த சேவைக்கு ஹிந்தி இலக்கியம் என்றும் கடமைப்பட்டது. ஈண்டு இக்காலத்திய எழுத்தாளர்களைப் பற்றிச் சுருக்கமாக அறிய முயல்வோமாக.

ஜயசங்கர் பிரஸாத் : இவருடைய வாழ்க்கை வரலாற்றை நாம் முன்பே வரைந்து விட்டோம். ஹிந்தி நாடக இலக்கியத்திற்குப் புத்துயிருட்டியவர் இவர்தான். சரித்திர நாடகங்கள் இயற்றுவதில் இவருக்குத் தனிச் சிறப்புக் கிடைத்திருந்தது. இந்திய கலாச்சாரத்தை வளர்ப்பதற்காகப் பாடுபட்ட இந்திய சரித்திரத்தின் பொற்கால அரசர்களைப் பற்றியே இவர் நாடகங்கள் எழுதியுள்ளார். ‘சந்திரகுப்த’, ‘ஸ்கந்தகுப்த’, ‘த்ருவஸ்வாமினீ’ ‘விசாக’ ‘ஜனமேஜய கா நாக யக்ஞ’ ஆகியவை இவர் இயற்றிய சில நாடகங்கள். இவருடைய நாடகங்களில் தோன்றும் பாத்திரங்கள் பண்பட்ட பாரதீய உள்ளங்களாக நமக்குக் காட்சியளிக்கின்றன. இவரது மொழி எளிமையும் இனிமையும் பொங்க அமைந்துள்ளது. இவருடைய கருத்துக்களிலே பழுத்த அனுபவமும், உற்சாகமும் வெளிப்படையாகக் காணப்படுகின்றன. நாடகங்களுக்கு முக்கியமான ‘முக்காலத்திலும் ஒத்தியல் தன்மை’ என்பது இவர்

நாடகங்களில் காணப்படுகின்றன. பரந்துவிரிந்த மனப்பான்மைகளும் நோக்கங்களும் இவருடைய நாடங்களிலே காணப்படுகின்றன. உணர்ச்சிப் பெருந்தன்மை நாம் இவர் எழுத்துகளில் பரவலாகக் காண்கின்றோம்.

பிரஸாத் பல கதைகளும் சில நெடுங்கதைகளும் இயற்றியுள்ளார். இவருடைய கதைகளிலும் நாடகங்களிலும் ஒரு இலட்சிய மனப்போக்கு தெளிவாகத் தெரிகின்றது. இயற்கையீடுபாடும் கலாச்சார மனச் சார்பும் சேர்ந்து இவரது இலக்கியப்படைப்புகளை மிகச்சிறந்தவையாகச் செய்கின்றன. கவிதை இலக்கியத்தை வளமைப்படுத்தியது போல் உரை நடை இலக்கியத்தையும் இவர் வளமைப் படுத்தியுள்ளார். ஹிந்தி இலக்கியம் இவருடைய சேவைக்கு எவ்வாறு கைம்மாறு செய்யும்?

பிரஸாத் காலத்திய மற்ற நாடகாசிரியர்களுள் கீழ்க்கண்டவர்களின் பெயர்கள் குறிப்பிடத்தக்கன– ராய் தேவி பிரஸாத், பத்ரிநாத்பட்ட, ஜகந்நாத் பிரசாத் சதுர்வேதீ, மிஸ்ர பந்து, பாண்டேய பேசன் சர்மா உக்ர, கோவிந்த வல்லப பந்த, ஸ்ரீவாஸ்தவ, விஸ்வம்பர நாத் சர்மா கௌசிக், ரூப நாராயண் பாண்டே, இவர்களுள் பத்ரிநாத் பட், கோவிந்த வல்லப பந்த, ஜி.பி. ஸ்ரீவாஸ்தவ ஆகியோர்கள் விசேஷமாக குறிப்பிடத்தகுந்தவர்கள்.

பத்ரிநாத்பட்: கேலியாகவும் ஹாஸ்ய ரஸம் ததும்பும் வகையிலும் நாடகங்கள் இயற்றுவதில் இவர் புகழ் பெற்றவர். இவருடைய நாடகங்கள் கீழ்வருமாறு – குரு வன தஹன், மிஸ் அமெரிக்கன், துலஸீதாஸ், லபட்தோப்தோ, விவாக விஞ்ஞாபன். இவருடைய நாடகங்களில் மனதிற்கும் இனிமை பயக்கும் நகைச்சுவை அதிகமாக மிளிர்கின்றது. ஆனா நிரந்தரமான இலக்கியமாகக் கருதுவதற்கு வேண்டியச் சிறப்புகள் அதிகமாகக் காணப்படவில்லை.

கோவிந்த வல்லப பந்த்: ஒரு கதை யெழுத்தாளராகவும், நாடகாசிரியராகவும் இவருக்குச் சிறப்புக்கிட்டியுள்ளது.

இவருடைய நாடகங்கள் அதிகமாகப் புராண, சரித்திர சம்பந்தப்பட்டதாக உள்ளன. கஞ்சூஸ் கீ சோப்டி, வரமாலா, ராஜமுகுட், அங்கூர் கீ பேடீ, சிந்தூர் பிந்து, யயாதி ஆகியவை இவவர் இயற்றிய நாடகங்கள், இவருடைய நாடகங்கள் நடிக்கத் தகுந்தனவாகவும், நாடகத் தத்துவங்களுக்கு இசைத்தும் உள்ளன.

இக்காலத்திய நெடுங்கதை இலக்கியத்தின் வரலாற்றை நோக்கும்பொழுது முதன்முதல் தோன்றும் எழுத்தாளர் பிரேம்சந்த்தான். பிரேம்சந்தின் காலத்திற்குச் சற்றே முற்பட்ட காலத்திய எழுத்தாளர்களுள் கீஷோரிலால் கோஸ்வாமீ முக்கியமானவர். இவர் அறுபத்தி ஐந்திற்கும் அதிகமான நாவல்கள் இயற்றியுள்ளார். இவருடைய நாடகங்கள் மயிர்க்கூச்செரிக்கும் வருணனைகளும், நடக்க முடியாத கற்பனையோட்டங்களும் நிரம்பப்பெற்றன.

பிரேம்சந்த் 1921ம் வருடத்தில் 'பிரேமாஸ்ரம்' என்ற தன் முதல் நாவலை வெளியிட்டார். பிரேம்சந்தின மனநிலை சமுதாயச் சூழ்நிலையைக் கண்டு தவிர்க்க முடியாத துடிப்பையும் ஆவேசத்தையும் கொள்ள ஆரம்பித்தது. அக்காலத்தில்தான் முன்னேற்ற உணர்ச்சியானது வேரூன்ற ஆரம்பித்தது. சமுதாயத்தைச் சீர்திருத்தம் நோக்கம் கொண்டு 1921ல் இருந்து 1932ம் வருடம் வரையில் உள்ள காலத்தில் 400க்கும் மேற்பட்ட கதைகளும் பன்னிரண்டிற்கு அதிகமான நாவல்களும் இயற்றினார். இவருடைய கதைகள் இலட்சிய நோக்கும் உயர்ந்த கருத்துகளும் கொண்டன. இவருடைய சில படைப்புகள் உலக இலக்கிய வரலாற்றிலும் இடம் பெற்று விட்டன. கண்ணோட்ட மனப்பான்மை இவருடைய சில நெடுங்கதைகளில் காணப்படுகின்றது. ஏழையின் வாழ்வை பாழடிக்கும் பணத் தொந்திகளை பரிகசித்து எழுதும் பேனா முனை, ஏழைகளின் குற்றம் குறைகளையும் கூறத் தயங்க வில்லை. இக்காலத் தன்மையின் இயல்புகளையும், மக்களின் போக்கிலும் நோக்கிலும் தோன்றும் மாறுபாடுகளையும் இவர் செவ்வனே சித்தரித்துள்ளார். சமுதாயத்தில் அவல நிலையில்

அல்லல்படும் மக்களின் மனத்தவிப்பை பாங்குற வெளி யிட்டுள்ளார். இவருடைய வருணனைகள் படிப்பவர்களை பாத்திரங்களுடன் ஒன்றிப்போகச் செய்கின்றது. இரண்டற்ற நிலையின் அனுபவச் செறிவு நமக்குண்டாகின்றது. இலக்கியத்திற்கு மட்டுமன்றி சமுதாயத்திற்கும் பிரேம்சந்தின் நூல்கள் இன்றியமையாப் பெரும் பயனை விளைத்துள்ளன. இந்தியாவின் எல்லா மொழிகளிலும் மற்றும் உலகத்தின் மிகச் சிறந்த மொழிகளாகக் கருதப்பட்டு வரும் மொழிகளிலும் இவருடைய நெடுங்கதைகள் மொழியாக்கப்பட்டுள்ளன. என்றும், எங்கும் எவரும், தம் சிரிளமைத்திறம் வியந்து செயல் மறந்து வாழ்த்துமாறு இவருடைய இலக்கிய சேவைகள் உள்ளன. இவர் இயற்றிய நூல்களுள் முக்கியமானவை பிரேமாசரம், கர்ம பூமி, சேவாசதன், நிர்மலா, காயாகல்ப, கோதான், மானசரோவர் ஆகியவைகள். இவர் இலக்கியக்கலை சம்பந்தப்பட்ட பற்பல கட்டுரைகளும் எழுதியுள்ளார்.

விஸ்வம்பர்நாத் சர்மா 'கௌசிக்' குடும்பச் சூழ் நிலையை மையமாக வைத்துக் கொண்டு இவர் பல கதைகளும், நாவல்களும் இயற்றியுள்ளார். சமுதாயத்தின் பல்வேறு சிக்கல்களை சீரிய முறையில் சித்தரித்துள்ளார். சமுதாயத்தை சீர்திருத்தும் நோக்கம் இவருடைய கதைகளிலே காணப்படுகின்றது. மா, பிகாரிணி, சங்கர்ஷ ஆகிய நெடுங் கதைகளையும் இவர் இயற்றியுள்ளார்.

ஆசார்ய சதுர்சேனசாஸ்திரி சரித்திரத் தொடர்கதைகள் இயற்றுவதில் சிறந்து விளங்கும் எழுத்தாளர் இவர். 1925–ம் வருடத்திலிருந்து 1960 ம் வருடம் வரையிலுள்ள காலத்தில் இவர் பற்பல நெடுங்கதைகள் எழுதியுள்ளார். வைசாலி கீ நகரவது, என்ற இவரது சரித்திர நூல் ஹிந்தி இலக்கியத்தில் மிகவும் புகழ்ப்பெற்றது. சரித்திரத் தொடர்கதைகளை அமைக்கும்பொழுது சூழ்நிலை பாதுகாப்பு, கால இயல்பு அனுசரணை ஆகியவைகளை நன்கே பரிபாலிக்க வேண்டும். இத்தகைய ஒரு திறமையை இவர் பெற்றிருந்தார். 'ஹிருதய கி பர்க்' 'ஹிருதய கீ ப்யாஸ்' 'ஆலம் தீர்' 'தோ கிநாரே'

'சோமநாத்த' வைசாலீ கீ நகரவது' 'வயம் ரட்சாமஹ்' ஆகியவைகள் இவர் இயற்றிய சில நூல்கள்.

விருந்தாவன் லால் வர்மா ஹிந்தி இலக்கியத்தில் சரித்திரத் தொடர் கதைகள் இயற்றுவதில் தன்னிகரற்று விளங்குகின்றவர் இவர். ஹிந்தி இலக்கியத்தின் சர் வால்டர் ஸ்காட்டாகக் கருதப் படும் இவர் சரித்திரத் தொடர்கதை இயற்றுவதற்கு இயல்பான மன நிலையை முழுமையாகப் பெற்றிருந்தார். இவர் 1990ம் வருடத்தில் ஜான்சியில் பிறந்தார். இளம் வயதிலிருந்தே இந்திய சரித்திரத்தில் இயல்பான ஈடுபாடு இவர் பெற்றிருந்தார். 16 வயதிருக்கும் பொழுதே இவர் நாடகங்கள் இயற்ற ஆரம்பித்தார் சரித்திரத் தொடர்புள்ள பற்பல இடங்களுக்குச் சென்ற ஆதார பூர்வமான உண்மைகளைச் சேகரித்து இவர் எழுத ஆரம்பித்தார். 1927ம் வருடத்திலிருந்து இவர் சரித்திர நாவல்கள் இயற்றத் துவங்கினார். கீழ்கண்ட நூல்கள் இவரால் இயற்றப்பட்டன கடகுண்டார், சங்கம், லகன், ப்ரந்யாகத், குண்டலி சக்ரவிராடர் கீ பத்மினி, கபீ நகபீ, ஜான்ஸீகி ராணி, மிருக நணனி, அஹல்யா பாய், ராணா சாங்கா முதலியவை. இதைத்தவிர இவர் கீழ்க்கண்ட நாடகங்களையும் இயற்றியுள்ளார். ராகி கி லாஜ் பாயல், மங்கல் சூத்ர, பீர்பல், கடந்த கால நிகழ்ச்சிகளைப் படம்பிடித்துக் காண்பிப்பதில் இவர் தனிச் சிறப்புப் பெற்றிருந்தார். கற்பனை வளமும், சொல் நயமும் சேர்ந்து இவரது நடையை கவர்ச்சியுள்ளதாக செய்கின்றன. இவருடைய சரித்திர நாவல்கள் எல்லாம் அதிகமாக புந்தேல் கண்டு என்ற பிராந்தியத்தைப் பற்றித்தான் உள்ளன. நாவல்களிலே நன்கே வெளியிடப்பட்டுள்ளது. மனித உள்ளத்தின் பல்வேறு உணர்ச்சி நிலைகளை பாங்கே வெளியிட்டுள்ளார். ஹிந்தி இலக்கியத்தின் தலைச்சிறந்த சரித்திர நாவலாசிரியராகவும், நாடகாசிரியராகவும் இவர் புகழ் என்றும் நிலைக்கும்.

இலாசந்திரஜோஷி ஹிந்தியின் சிறந்த நாவலாசிரி யர்களுள் இவரும் ஒருவர் ஆவார். இவருடைய நாவல்கள் சிறந்தக் கதைச் செறிவிற்கும், பண்பட்ட நடைக்கும் பெயர்

போனது. கீழ்க்கண்ட நூல்கள் இவரால் இயற்றப்பட்டன. கருணாமயி, பிரேத் ஔர் சாயா, நிர்வாஸீத், பர்தே கீ ராணி, முக்தி பத, லஜ்ஜா, சந்யாசி, என்ற இவருடைய நாவல் மிகவும் புகழ் பெற்றது.

ஜைனேந்திரகுமார் ஹிந்தியில் மனத்தத்துவ ஆராய்ச்சி முறையைத் தழுவி எழுதிய எழுத்தாளர்களுள் இவர் முதன்மையிடம் பெறுகின்றார். தன் மதி நுட்பத்தினால் சுற்றத்திலுள்ள பல்வேறு மனிதர்களின் மன நிலையின் ஏற்றம் இறக்கங்களை ஆராய்ந்து அவைகளைப் பிரதிபலிக்கச் செய்யும் வகையில் தன்னுடைய பாத்திரங்களை படைத் துள்ளார். உணர்ச்சி நிறைவுடன் கூடிய தர்க்கங்களும் விவாதங்களும் இவருடைய நூல்களிலே காணப்படுகின்றன. மனப்போக்கிலே ஏற்படும் அனுபவங்கள் பலவும் சமூகத்தின் போக்கிற்கு எதிராகவும், குற்றங்குறைகள் நிரம்பியதாகவும், உள்ளன. அவைகளை இலக்கிய வாயிலாக வெளியிடும் பொழுது நாம் மனத்தின் பிரதிபிம்பத்தை ஒருதலை பட்சமாகவே வெளியிடுகின்றோம். மனதின் தீய எண்ணங் களை நாம் வெளியிடுவதில்லை. ஆனால் மனத்தத்துவ முறைப்படி ஒளிவு மறைவில்லாமல் மனதை அப்பட்டமாகப் படம் பிடித்து காண்பிக்க ஆரம்பித்தார் இவர். இவர் எழுதிய நூல்கள் கீழ்வருமாறு கல்யாணி, தியாகபத்ர, பாக், சுகதா, சுநீதா, வ்யதீத, விவர்த்த.

அக்ஞேய் : பிரயோக வாதத்தை கவிதையிலே தோற்றுவித்த இவர் மன இயல் ஆராய்ச்சி முறையைப் பின் பற்றி எழுத ஆரம்பித்த புகழ் பெற்ற எழுத்தாளருள் ஒருவர். புரட்சிகரமான எண்ணங்களை பிரதிபலிக்கச் செய்யும் 'சேகர் ஏக் ஜீவனி' என்ற நூல் இவர் முதன்முதலில் இயற்றினார். இந்த நூல் இவருடைய சுய சரிதையை பிரதி பலிக்கின்றது வாழ்க்கையின் பல திருப்பங்களில் மனித உள்ளம் காணும் தோல்விகளையும் குறைபாடுகளையும், ஆசாபாசங்களை இவர் நன்கே சித்தரித்துள்ளார். இவர் எழுதிய மற்றொரு நெடுங்கதை 'நதீ கே த்விப'

உபேந்திரநாத் அஷ்க் ஒரு கவி, கதையாசிரியர் நாடகாசிரியர்ா ஆகிய திறமைகளைப் பெற்ற இவர் ஹிந்தி இலக்கியத்திலே தனிச்சிறப்பு பெற்றவராக ஆகின்றார். பிரேமசந்தைப்போல் இவரும் முதலில் உருது எழுத்தாளராக இருந்து பிறகு ஹிந்தி எழுத்தாளரானார். இவருடைய நடை சரளமாகவும், எளிதிலே விளங்கக் கூடியதாகவும் உள்ளது. புதிய யுகத்தின் தீவிர உணர்ச்சசிகளை இவர் தம் நூல்களிலே வெளியிட்டுள்ளார். கீழ்க்கண்ட நாடகங்களை இவர் இயற்றி யுள்ளார். ஜயபராஜய, ஸ்வர்ககீஜலக், கைத் ஔர் உடான், ஆதிமார்க, அலக் அலக்ராஸ்தே. இதைத்தவிர பல்வேறு கதைகளையும் நெடுங்கதைகளையும் இவர் இயற்றியுள்ளார்.

ஹஜாரி பிரஸாத் த்விவேதீ : கட்டுரை இலக்கியத்தில் இவர் மிகவும் புகழ்ப் பெற்றவர். உருக்கமான மனநிலையைத் தெள்ளென பிரதிபலிக்கும் வகையில் இவரது கட்டுரைகள் உள்ளன தன்னுடைய வாழ்க்கையின் அனுபவங்களின் ஆதாரத்தின் மேல் இவர் தன்னுடைய பல கட்டுரைகளை இயற்றியுள்ளார். "பாண்பட்ட கீ ஆத்மகதா" என்ற பெயருடைய இவருடைய நூல் மிகவும் புகழ்ப் பெற்றது.

சாந்தி ப்ரிய த்விவேதீ : கட்டுரை எழுதுவதில் இயல்பான ஆர்வம் கொண்ட இவர். அழகிய, கருத்துச் செறிவு கூடிய நடையில் இலக்கிய கட்டுரைகள் இயற்றியுள்ளார். சின்னஞ் சிறு வாக்கியங்களில் ஆழ்ந்தக் கருத்துகளை. இவர் நமக்கு அளித்துள்ளார்.

சேட் கோவிந்த தாஸ் : இந்திய சட்டசபையின் ஒரு அங்கத்தினராக விளங்கும் இவர் தேசீய உணர்ச்சியை பிரதி பலிக்கச்செய்யும் வகையில் பல இலக்கிய சித்திரங்களை நமக்கு அளித்துள்ளார். இவர் அதிகமாக நாடகங்கள் தான் இயற்றி யுள்ளார். பின்குறிப்பிட்டுள்ள நாடகங்களை இவர் இயற்றினார். ஹர்ஷ, பிரகாஷ், கர்த்வ்ய, சேவாபத், துக்க க்யோன், படா பாபி கோன், பாகிஸ்தான், தலிதகுசும். இவருடைய நாடகங்களில் முக்கியமாக சமுகத்தின் சூழ் நிலைகள்தான்

பிரதிபலிக்கின்றன. நம் சமுதாயத்தினிடையே காணும் குற்றங் குறைகளை இவர் நன்கே எடுத்துக் காட்டியுள்ளார்.

ஹரிகிருஷ்ணப்ரேமி இஸ்லாமிய காலத்திய சரித்திரத்தை ஆதாரமாகக் கொண்டு இவர் பல நாடகங்கள் இயற்றியுள்ளார். சரித்திரநாடகங்களுக்கு கையாள வேண்டிய நடைமுறைகளை நன்கே கையாண்டு, கற்பனையை நடுநடுவே அழகாகப்புகுத்தி சரித்திர பிரசித்திப் பெற்ற பாத்திரங்களையே நம் கண்முன் கொண்டு வந்து நிறுத்தி விடுகின்றார். "ரக்ஷாபந்தன்" என்ற இவரது நாடகம் மிகவும் புகழ் பெற்றது.

ராஹுல் சாங்கிருத்யாயன் பன்மொழிப் புலவர் என்ற கூற்றிற்கு முழுமையான பொருட்செறிவு கொடுக்கும் வகையில் அமைந்தவாழ்வையுடைய இவர் உலக இலக்கிய வரலாற்றினில் பெயர் பெற்றவர். தீப்பத்திலிருந்து பற்பல பௌத்த மத நூல்களை வெளிக்கொண்டு வந்து வெளியிட்டப் பெருமை இவரைச் சாறும். "வால்கா சே கங்கா தக்" என்ற இவரது நெடுங்கதை மனித சமுதாயத்தின் வளர்ச்சியின் பல நிலைகளை மையமாகக் கொண்டு செல்கின்றது. இவர் நாற்பதிற்கதிகமான நூல்களை இயற்றியுள்ளார். அதை, ஜயயொதேய, ஜாதூ காமுல்க், "ஜோ தாஸ் தே" "மதுர ஸ்வப்ன" முதலியவை முக்கியமானவை.

யஷ்பால் பொதுவுடமைகொள்கையிலே பற்று கொண்ட இவர் ஏழைகளின் வாழ்வின் அவல நிலைகளையும், பணக் காரர்களின் வாழ்க்கையின் கோலாகலக் கொண்டாட்டங் களையும், இந்தவிதமான ஏற்ற தாழ்வுகளின் அநியாயத்தையும் விளக்கும் பல சிறுகதைகளும் நெடுங்கதைகளும் எழுதியுள்ளார். ஜுடாஸச், தாதா காம்ரேட் போன்ற இவரது நெடுங் கதைகள் ஹிந்தி இலக்கியத்தில் மிகவும் புகழ் பெற்றன.

ராங்கேய ராகவ திருச்சிராப்பள்ளிக்கருகில் உள்ள ஸ்ரீரங்கம் என்ற இடத்திலிருந்து ஒரு தலை முறைக்கு முன்பு வடக்கே குடியேறிய வைஷ்ணவ அந்தணர் குலத்தினில் இவர் தோன்றினார். ஹிந்தி நெடுங்கதை இலக்கியத்தில் பிரேம்

சந்திற்கு பிறகு அவரைப் போலவே நிலையான புகழிற்கு பாத்திரமாகத் தகுந்த எழுத்தாளர் இவர். தனது நாற்பது ஆண்டு காலவாழ்விலே நூற்றிருபத்திஐந்திற்கும் அதிகமான நூல்களை இவர் இயற்றியுள்ளார். இவரது எழுதுகோல் தொடாத இலக் கியத் துறையையே இல்லையெனலாம். இவரது மொழியின் எளிமையும் நடையின் இயல்பான ஓட்டமும் நம்மை பெரிதும் கவருகின்றன. "கப் தக் புகாரூன்" என்ற இவரது நெடுங்கதை ஹிந்தி இலக்கியத்தில் சலசலப்பை யுண்டு பண்ணியது.

இவண் குறிப்பிட்ட எழுத்தாளரைத் தவிர கீழ்க்குறிப் பிட்டுள்ள எழுத்தாளர்களும் ஹிந்தி இலக்கியத்தின் தற்கால வளர்ச்சியை பெரிதும் ஊக்குவித்துள்ளார்கள். அஞ்சல், குருதத், சுதர்ஸன், ராஜா ராதிகாரமண்சிங் லட்சுமி நாராயண் மிஸ்ர, அம்ருதராய், உஷாதேவி மித்ர, கங்காபிரஸாத் மிஸ்ர, தேவி, விஷ்ணு பிரபாகர், மாச்வே, ஆநந்த பிரகாஷ் ஜெயின், சத்யவதி மல்லிக், ஶ்ரீராம் சர்மா இந்திரநாத் மதன், விஜய மோஹன் சர்மா, சந்திரபலி பாண்டேய, குலாப் ராய், நந்த துலார் வாஜபேயி.

ஹிந்தி இலக்கியம் தன் துவக்க நிலையில் வீரகாப் பியங்கள் மட்டும் கொண்டதாக இருந்தது. ஆனால் ஒரு நதி எப்படி தனது உற்பத்தி ஸ்தானத்தில் சிறிய அளவில் நீரைக் கொண்டதாக இருந்து பிறகு ஓட ஆரம்பித்த பிறகு நீர் பரப்பை வளர்த்துச் கொண்டு செல்லுகின்றதோ அஃதே போல் ஹிந்தி இலக்கியமும் இன்று தன் வளர்ச்சியின் முழுமையை அடைந்து பல்வேறு துறைகளில் வியக்கத்தக்க முன்னேற்றம் அடைந்து வருகின்றது. இன்றைய ஹிந்தி இலக்கியத்தை வளர்க்கும் பெரும் பணியில் ஈடுபட்டுள்ளவர்கள் ஹிந்தியைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள் மட்டும் அல்லாமல் இந்தியாவின் பல்வேறு மொழிகளைப் பேசுபவர்களாக உள்ளனர். இவர்கள் தங்கள் தங்கள் இலக்கியத்தின் சிறப்பை எடுத்துச்சென்று ஹிந்தியை வளம்படுத்தி ஆசியா கண்டத்திற்கே ஒரு பொது மொழியாக்கி விடுவார்கள் என்பது திண்ணம்.

**முற்றும்**